


# 108 ஸ்ரீவைஷ்ணவ

## திவ்யதேச வைபவமும் புராண அபிமான ஸ்தலங்களும்

யாத்ரிகர்கள் வழிகாட்டி







ஸ்ரீ:

# 108 ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேச வைபவமும் ,ராண-அபிமான ஸ்தலங்களும்

ஆழ்வார்களால் மங்களாசாஸனம்
செய்யப்பட்ட 108 திவ்யதேசங்களும், மற்ற
புராண-அபிமான ஸ்தலங்களும்

## A PILGRIMS' GUIDE




பதிப்பகத்தார்:

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி**
**தியாகராயநகர் :: சென்னை-600 017**

– லிப்கோ புத்தகங்கள் கீழ்க்கண்ட இடங்களிலும் கிடைக்கும்: –
**சென்னை: 1. லிப்கோ அஸோஷியேட்ஸ்,**
"நாராயணா அபார்ட்மெண்ட்ஸ்", 23/G-5, ராமேஸ்வரம் ரோடு,
(மாம்பலம் ரெயில் நிலையம் அருகில்) தி.நகர், சென்னை-600017.
**2. எம். தாமோதரம் & கம்பெனி,**
7, அம்பர்ஸன் தெரு, ஜார்ஜ் டவுன், சென்னை 600 108.
**திருச்சி: தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,**
17/1, நந்திகோயில் தெரு, தெப்பக்குளம், திருச்சி-620 002.
ஹிக்கின்பாதம்ஸ், மற்றும் பிரபல புத்தக வியாபாரிகள்.

விலை ரூ. 30

ISBN 81-87130-68-7
முதற் பதிப்பு 1984, 1986, 1992, 1994, 1995, 1997
இரண்டாம் பதிப்பு 2001 (Revised)
மறு அச்சு 2002 (Updated)
மூன்றாம் பதிப்பு 2004

தொகுப்பு

**T.N.C. வீரராகவன்**

## பிரத்யேக நன்றி

இந்நூலை முதன்முதலில் பதிப்பித்து வெளியிடுவதில், தன்னலம் கருதாது, ப்ரதிப்ரயோஜனமும் எதிர்பாராது உதவி புரிந்த கீழ்க்கண்ட மஹநீயர்களுக்கு எங்கள் நன்றி கலந்த க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறோம்:

1. ஆடூர் அகரம் வைகுந்தவாசி தூப்புல் ஸ்ரீ உ.வே. வேங்கடராகவாசாரி என்னும் **A.S. நாகராஜன்** அவர்கள்

2. சென்னை K.K. நகர் ஸ்ரீ உ. வே. V. **ஸ்ரீநிவாஸன்** அவர்கள் (Under Secretary to Govt., Finance Dept., Retd.)

**— லிப்கோ, பதிப்பகத்தார்**

*Printed at* NPT Offset Pvt. Ltd., Chennai - 600 014.

ஸ்ரீ:

# பொருளடக்கம்

## நடுநாட்டுத் திருப்பதிகள் 2



## பதிகள் 22

## நில உலகில் பார்க்க முடியாத ஸ்தலங்கள் 2



## புராண ஸ்தலங்கள் 19



## அபிமான ஸ்தலங்கள் 29

## அநுபந்தங்கள்












# வரைபடங்கள் (MAPS)

திவ்யதேசங்களுக்கான

வரைபடங்கள்:

பக்கங்கள் 156 முதல் 163

(அநுபந்தம் 2)

காண்க.

# அறிமுகம்

எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணன் ஸர்வாந்தர்யாமியாக, எங்கும் நிறைந்து எப்பொருளிலும் எழுந்தருளியிருக்கின்றபோதிலும், குறிப்பிட்ட சில தலங்களும் அங்குள்ள திருக்கோயில்களும் விசேஷமான பெருமை பெற்றவையாகத் தொன்றுதொட்டு கருதப்பட்டு வருகின்றன. இதனால்தான் நமது வணக்கத்திற்குரிய ஆழ்வார் பெருமக்களும் ஆசார்ய மஹான்களும் அந்தப் புனிதத் தலங்களுக்கு யாத்திரையாகச் சென்று, பெருமாளை ஸேவித்து, துதித்துப் பாசுரங்கள் பாடினார்கள்; கிரந்தங்கள் இயற்றினார்கள். இதன் விளைவாக அந்தத் தலங்கள் புனித நிலையிலிருந்து உயர்ந்து, தெய்வீக நிலையை அடைந்து, திவ்யதேசங்கள் என்று போற்றப்படலாயின.

அப்படியிருக்க இந்த அறிமுக உரையில் அந்த திவ்ய க்ஷேத்ரங்களின் மேன்மைகளை எல்லாம் முழுமையாக வர்ணிக்க இயலாது. இந்த அறிமுகத்தின் நோக்கம் இந்த நூலின் விஷய எல்லைகளையும் பயன்களையும் சுட்டிக் காட்டுவது மாத்திரமேயாகும். அதனுடன், புனிதத் தல யாத்ரிகர்களும் பக்தர்களுமான (இப்பதிப்பின்) வாசகர்களுக்குச் சில வேண்டுகோள்களும் விடுக்க விரும்புகிறோம்.

இந்நூலின் முதற் பதிப்பு வெளியிடப்பட்டபோது, அது யாத்ரிகர்களுக்குப் பொதுவான ஒரு வழிகாட்டியாகவே தயாரிக்கப்பட்டிருந்தது. ஆகவே, ஒவ்வொரு திவ்யதேசக் கோயிலைப் பற்றியும் சில அடிப்படைத் தகவல்களும் பல கோயில்களின் சுருக்கமான தலபுராணமும் சேர்க்கப்பட்டிருந்தன. சில கோயில்களின் தலபுராணங்கள் கர்ண பரம்பரையான செய்திகளின் அடிப்படையிலும், உள்ளூர் ஜனங்களிடம் நிலவுகின்ற நம்பிக்கைகளின் அடிப்படையிலும் எழுதப்பட்டதால், ஒன்றுக்கு மேற்பட்ட தலபுராணங் களும் சொல்லப்பட்டன.

இந்தப் புதிய திருத்திய பதிப்பின் அடிப்படை நோக்கமும் யாத்ரிகர்களுக்கு ஓர் உபயோகமான வழிகாட்டி நூலாக மேலும் உதவிட வேண்டும் என்பதே. எனவே, இன்றைய நிலவரப்படி அந்த திவ்யதேசங்களில் தங்கி ஸேவிப்பதற்கான ஏற்பாடுகள், உணவு வசதிகள், அங்கே சென்றடைய ரயில்-பஸ் விவரங்கள் இவைகளில் உள்ள மாற்றங்கள் தவிர உபயோகமான சில புதிய விஷயங்களும் சேகரித்துத் தரப்பட்டுள்ளன. இதற்காக நாங்கள், வட இந்தியா உள்ளிட்ட அனைத்து திவ்யதேசக் கோயில்களின் நிர்வாகத்தினருக்கு, அந்தந்தக் கோயில்களைப் பற்றியும், அந்தத் தலங்களில் கிடைக்கின்ற இருப்பிட உணவு வசதிகளைப் பற்றியும் அதிகாரபூர்வமான விவரம் கேட்டு எழுதியிருந்தோம். எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கித் தகவல்கள் பல கோயில்களின் நிர்வாகத்திடமிருந்து வந்தன; அவர்களுக்கு எமது நன்றி.

ஸ்ரீ அஹோபில மடத்தின் நிர்வாகிகளிடமும், ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரம நிர்வாகிகளிடமும் அவர்களுடைய மடங்கள் உள்ள திவ்யதேசங்களைப் பற்றிக் கூடுதலான விவரம் கேட்டிருந்தோம். அவ்வாறே தகவல்களைத் தந்து உதவிய அந்த மடங்களைச் சார்ந்த ஆன்றோருக்கு நாங்கள் கடமைப்பட்டுள்ளோம்.

இப்பதிப்பில் முதல் முறையாக, திவ்யதேசங்கள் அமைந்துள்ள இடங்களைத் தெளிவாக அறிந்துகொள்ள சில வரைபடங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இந்த வரைபடங்களைத் தயாரிப்பதில் எமக்கு உதவிய **ஸ்ரீ. J.C. (ஜே.ச.) முரளி** ஏற்கெனவே தென்னிந்திய வைஷ்ணவத் தலங்கள், சைவ க்ஷேத்ரங்கள் பற்றி நூல்கள் எழுதிய அனுபவமுள்ளவர் என்பது குறிப்பிடத்தக்கது.

புதுமையான பிற்சேர்க்கையாக "சங்கீதமும் திவ்யதேசங்களும்" என்றோர் இணைப்பு இப்பதிப்பில் தரப்பட்டுள்ளது ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் குறிப்பிட்ட கீர்த்தனைகள், ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரின் க்ஷேத்ரக் கிருதிகள் ஆகியவற்றின் பட்டியல்கள் இப்பகுதியில் தரப்பட்டுள்ளன. இவ்விவரங்கள் **ஸ்ரீ T.S. பார்த்தஸாரதி** மற்றும் **Dr. ஸ்ரீவத்ஸா** அவர்களின் வெளியீடுகளில் உள்ளன. அவர்களுக்கு நாங்கள் மிகவும் கடமைப் பட்டுள்ளோம்.

நவீன நாகரிக முன்னேற்றங்களால் நகரங்களில் குடியேறுவது அதிகரித்துவிட்டது. கிராமப்புறங்கள் காலியாகி மக்கள் பெரும் எண்ணிக்கையில் நகரங்களில் வசிக்கத் தொடங்கிவிட்டனர். கணிசமான எண்ணிக்கையில் மக்கள் அயல் நாடுகளிலும் குடியேறி வருகின்றனர். நாகரிக முன்னேற்றத்தால் இக்கோயில்கள் சம்பந்தமாக நன்மை-தீமை இரண்டும் விளைந்துள்ளன.

போக்குவரத்தில் தீவிர முன்னேற்றம் ஏற்பட்டு, திவ்யதேசங்களுக்கு விரைவாகவும் சுலபமாகவும் சென்றுவர வாகன வசதிகள், சாலை வசதிகள் பெருகிவிட்டன. சில திவ்யதேசங்களில் வசதியாகத் தங்குவதற்கு நவீனமான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. திவ்யதேசக் கோயில்களைப்பற்றி பல நூல்கள், CD வெளிவந்துள்ளன. Internet-இலும் குறிப்புகள் கிடைக்கின்றன.

இம்முன்னேற்றங்களினால் விளைந்துள்ள நன்மை என்னவென்றால், வேலைப் பளு, தொழில் சம்பந்தமான பொறுப்புகளின் அழுத்தம், மாறிவருகின்ற பரபரப்பான வாழ்க்கை முறை ஆகியவற்றில் சிக்கிக்கொண்டுள்ள போதிலும், ஏராளமான ஆஸ்திகர்களின் உள்ளத்தில் திவ்யதேசங்களுக்கு அவ்வப்பொழுது சென்று பயனடையவேண்டும் என்ற பேரார்வம் வேரூன்றிவிட்டது. அநேக ஆஸ்திகர்கள், இவ்வசதிகளைப் பயன்படுத்திக்கொண்டு தங்களால் தரிசிக்கமுடிந்த திவ்யதேசக் கோயில்களின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொண்டே செல்வதில் ஆனந்தம் அடைகின்றனர். இந்த ஆஸ்திகர்களிடையே இஷ்ட தெய்வங்கள் பற்றிய வேறுபாடுகள் காணப்படுவதில்லை என்பது

விசேஷம். அன்றாட வாழ்க்கைப் பொறுப்புகளின் பாரத்தைச் சமாளித்துக் கொண்டு புனித யாத்திரைக்கென நேரம் ஒதுக்கி, வைஷ்ணவர்களும், சைவர்களும் தங்கள் வேறுபாடுகளை மறந்து, திவ்யதேசங்களுக்குச் சென்று பெருமாளையும் தாயாரையும் தரிசித்துத்தான் வருகிறார்கள்.

மறுபுறம், நாகரிக முன்னேற்றத்தால் புனிதத் தலங்கள் பாதிக்கப்பட்டுள்ளதையும் இங்கு குறிப்பிடாமலிருக்க முடியாது. நகரங்களை மையமாகக் கொண்ட பொருளாதார வசதிகளால் கவரப்பட்டு, கிராமங்களிலிருந்தும் சிற்றூர்களிலிருந்தும் மக்கள் வெளியேறி மாநகரங்களில் குடியேறி வருகின்றனர். இந்த வெளியேற்றம் காரணமாக, கிராமங்கள், சிற்றூர்கள் அல்லது நாட்டின் உட்புறப் பகுதிகளில் அமைந்துள்ள திவ்யதேசக் கோயில்களின் திருப்பணிகளுக்கு அந்தந்த ஊரிலேயே கிடைக்கவேண்டிய (local support) ஆதரவு, உழைப்பு, உதவி ஆகியவை வெகுவாக பாதிக்கப்பட்டுள்ளன. சில திவ்யதேசங்களிலோ நிரந்தரமான அர்ச்சகர்கூட கிடையாது. வேறு சில புண்யஸ்தலங்களில் அன்றாடப் பூஜைக்குரிய பொருள்களை வாங்கக்கூட நிதி வசதி போதுமானதாக இல்லை. பக்தர்கள் முன்கூட்டியே அர்ச்சகருடன் தொடர்பு கொண்டு தேவையான முன்னேற்பாடுகளுடன் செல்லவேண்டும் என்று தெரிந்தவரையில் இந்நூலில் அத்தலங்களில் சிலவற்றைப் பற்றிய குறிப்பில் எச்சரிக்கை தரப்பட்டுள்ளது.

இந்த திவ்யதேசங்கள் ஒவ்வொன்றும் வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்தவை. குறிப்பாக, மூவேந்தர்கள் ஆட்சி செய்த பகுதிகளிலும், வேற்றரசர்களின் படையெடுப்புகளினால் பாதிப்பிற்கு உள்ளான இடங்களிலும் உள்ள திருக்கோயில்கள் சரித்திரப் பிரசித்தி பெற்றவையாகும். சில கோயில்களின் வரலாற்று மதிப்பை பழைய தமிழ் இலக்கியங்களில் மட்டுமின்றி தற்காலப் படைப்புகளிலும் படித்தறியலாம். இதையெல்லாம் கருத்தில் கொண்டு அடுத்து வரும் பதிப்புகளில் திவ்யதேச ஊர்களின் வரலாற்றுப் பெருமையை இயன்றால் ஓர் அநுபந்தமாகச் சேர்த்தளிக்க விருப்பம் கொண்டுள்ளோம்.

மேலும், அடுத்துவரும் பதிப்புகளில் திவ்யதேசக் கோயில்களுக்கு யாத்திரை செல்ல ஏற்பாடுகள் செய்து தருகின்ற டிராவல் ஏஜன்ஸீகள், தனிப்பட்ட ஏஜண்ட்டுகள், நவதிருப்பதி போல் அருகருகில் உள்ள கோயில்களை ஒரே சுற்றில் தரிசிக்க அழைத்துச் செல்லக்கூடிய உள்ளூர் டூரிஸ்ட் கார் கம்பெனிகள், திவ்யதேசங்களிலோ அல்லது அருகாமையிலுள்ள ஊரிலோ தங்குவதற்கு ஏற்ற ஹோட்டல்களின் விவரம், சத்திர வசதிகள் போன்ற பல உபயோகமான விஷயங்களைச் சேகரித்து வாசக பக்தர்களுக்கு வழங்கவும் எண்ணம் கொண்டுள்ளோம்.

இந்நூலைச் சிறப்பாகத் திருத்தியமைக்கும் சிரமமான பணியில் உதவி புரிய லிப்கோவின் பல நண்பர்களும் ஆதரவாளர்களும் ஆர்வத்துடன் முன்வந்தனர். அனைத்து அன்பர்களின் பெயரையும் இங்கே குறிப்பிட இயலாத நிலையில், இப்பணிக்கென்றே தங்கள் அதிகபட்ச உழைப்பையும் நேரத்தையும் நல்கி உதவிய—

- பரம ஆஸ்திகரான ஸ்ரீ உ.வே. **S.V.S. ராகவன்** அவர்கள் (BHEL, STC முதலிய நிறுவனங்களின் முன்னாள் தலைவர்)
- திவ்யதேச யாத்திரைகளில் வைஷ்ணவருக்குரிய பக்தியுடன் ஈடுபட்டு வருகின்ற ப்ரஹ்மஸ்ரீ **T. அனந்தநாராயணன்** அவர்கள் (செயல் இயக்குநர், அசோக் லேலண்ட்)
- ஸ்ரீ உ.வே. **நித்யப்படி ஸ்ரீதரன்** அவர்கள் (ஸ்ரீ லக்ஷ்மீ விலாஸ் பாங்கின் முன்னாள் பொது மேலாளர்)
- வெளி அட்டையில் உள்ள புகைப்படங்களைத் தந்துதவிய தெய்விகப் புகைப்பட நிபுணர் ஸ்ரீ **T.R. ஸ்ரீநிவாஸன்,** அவர்கள்
- இந்த திருத்திய பதிப்பை சரிபார்த்து வெளியிடுவதில் உதவி செய்த டாக்டர் **என். ஸ்ரீதரன்** அவர்கள் (முன்னாள் இந்திப் பேராசிரியர், பிரஸிடென்ஸி கல்லூரி) அவர்கள்
- இப்பதிப்பை எல்லாவகையிலும் மேல் பார்த்த, நமது பதிப்பகத்தின் முதன்மைச் செயல் அலுவலரான ப்ரஹ்மஸ்ரீ **வே. வேங்கடேச அய்யர்** அவர்கள்

ஆகிய பெரியோர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த நூல் புண்ணியஸ்தல யாத்ரிகர்களுக்கு மேன்மேலும் பயன்பட வேண்டும் என்ற எங்கள் விருப்பத்தை நிறைவேற்றித் தரும் வகையில், வாசகர்கள், இந்நூலில் காணப்படும் குறைகள், விட்டுப்போன தகவல்கள், சேர்க்க வேண்டிய புதிய செய்திகள், உதாரணம் - வரலாறு சம்பந்தப்பட்ட தகவல்கள் (i.e., notes of historical significance) தலங்களிலுள்ள வசதிகளில் ஏற்படும் மாற்றங்கள்/முன்னேற்றங்கள் ஆகியவை பற்றி எங்களுக்குத் தெரிவித்து உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

**ஸர்வே ஜனா: சுகினோ பவந்து**

சென்னை - 600 017. **— தி லிட்டில் ப்ளவர் கம்பெனி**
11–02–2001 பதிப்பகத்தார்

# 2004 பதிப்பு

எங்கள் 2002-ஆம் வருடப் பதிப்பிற்குப் பிறகு மேலும் சில திருத்தங்களைச் சுட்டிக் காட்டிய வாசகர்களுக்கும், குறிப்பாக

**டாக்டர் V. V. ராமாநுஜம்**

(ஓய்வு பெற்ற பேராசிரியர், சென்னைப் பல்கலைக்கழகம், ஆசிரியர்." **யதிராஜ பாதுகா**") அவர்களுக்கும் எம் பிரத்யேக நன்றி.

11-5-2004 — பதிப்பகத்தார்

# சோழநாட்டுத் திருப்பதிகள் 40

## 1. ஸ்ரீரங்கம்

ஸ்ரீவைஷ்ணவ திவ்ய தேசங்களிலே முதன்மையானதாக "கோயில்" என்ற சிறப்புப் பெயருடன் விளங்குவதும் காவிரி-கொள்ளிட நதிகளின் நடுவே அமைந்திருப்பதுமான இக்கோயில் திருச்சி-விழுப்புரம் கார்டுலைனில் உள்ள ஸ்ரீரங்கம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஒரு கி.மீ. தூரத்தில் உள்ளது. திருச்சியிலிருந்து டவுன் பஸ்ஸில் சென்றால் கோயில் தெற்குக் கோபுர வாசலிலேயே இறங்கலாம். இங்கு, சத்திரங்கள், ராமாநுஜ கூடங்கள், சாப்பாட்டு ஹோட்டல்கள் முதலிய எல்லா வசதிகளும் உள்ளன. (Pincode 620006)

**மூலவர்:** ஸ்ரீ ரங்கநாதன் (பெரிய பெருமாள், நம்பெருமாள், அழகிய மணவாளன்) - புஜங்கசயனம் (ஆதிசேஷ சயனத்திருக்கோலம்), தெற்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** நம்பெருமாள் என்ற சிறப்புப் பெயருடன் நின்ற திருக்கோலம்.

**தாயார்:** ஸ்ரீ ரங்கநாயகி (ரங்க நாச்சியார்).

**தீர்த்தங்கள்:** சந்த்ரபுஷ்கரிணி, காவேரி, கொள்ளிடம், வேதச்ருங்கம்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** புன்னை.

**விமானம்:** ப்ரணவாக்ருதி.

**ப்ரத்யக்ஷம்:** தர்மவர்மா, ரவிதர்மன், சந்த்ரன், விபீஷணன்.

**விசேஷங்கள்:** தானாகவே உண்டான ஸ்தலங்களாகக் கருதப்படும் எட்டு ஸ்வயம்வ்யக்த க்ஷேத்திரங்களிலே இந்த க்ஷேத்திரம் ப்ரதான மானது. (மற்றவை — ஸ்ரீமுஷ்ணம், திருவேங்கடம், சாளக்ராமம், நைமிசாரண்யம், தோதாத்திரி, புஷ்கரம் மற்றும் பத்ரிநாத் ஆகும்). பட்டர், வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசார்யர், பெரிய நம்பி இவர்களின் அவதாரஸ்தலம். இது தொண்டரடிப்பொடி ஆழ்வார் நந்தவன கைங்கர்யமும் திருமங்கை ஆழ்வார் திருமதில் கைங்கர்யமும் செய்த இடம். ஸ்ரீமந்நாதமுனிகளால் திவ்யப் பிரபந்தத்தை

ராகதாளங்களுடன் பாடும் முறை "அரையர் ஸேவை" என்ற பெயரில் இங்கு நடந்து வருகிறது.

ஸ்வாமி தேசிகனுக்குப் பெரிய பெருமாள் "கவிதார்க்கிக ஸிம்ஹம்" என்றும், தாயார் "ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரர்" என்றும், விருதுகள் வழங்கிய ஸ்தலம். இப்பெருமானின் பாதுகைகள் மீதுதான் "பாதுகா ஸஹஸ்ரம்" என்ற உயர்ந்த காவியத்தை ஸ்ரீதேசிகன் இயற்றினார்.

நம்பெருமாளின் திவ்யாக்ஞையின்படி ஸ்ரீமணவாளமாமுனிகள் இந்த ஸந்நிதியில் திருவாய்மொழி காலக்ஷேபம் ஸாதித்தார். நம்பெருமாள், பகவத் விஷய சாற்றுமறையன்று குழந்தையாக வந்து நின்று ஸ்ரீசைலேச தயாபாத்ர தனியனை அருளிச்செய்து மணவாள மாமுனிவருக்குப் பஹுமானமாக அளித்தார். இது ஒரு தனிச்சிறப்பு. இந்த ஸ்தலத்தை பூலோக வைகுண்டம் என்றும் அழைப்பார்கள்.

ஸ்ரீஅஹோபில மடம் 44வது பட்டம் ஜீயரின் பெருமுயற்சியால் மொட்டை கோபுரத்தின் மேல் 13 நிலைகளையும் 13 கலசங்களையும் கொண்ட 236 அடி கோபுரம் (உலகிலேயே மிக உயரமான கோயில் கோபுரமாக) கட்டி முடிக்கப்பட்டு, 25-3-1987ல் மகா சம்ப்ரோக்ஷணம் நடைபெற்றது. வடக்குப் பக்கப் பரமபத வாசலில் விரஜா நதி இருப்பதாக ஐதீஹம்.

கம்பராமாயண அரங்கேற்றத்தின் போது சிரக்கம்பம் செய்து ஆமோதித்த "மேட்டு அழகிய சிங்கர்" என்னும் ஸ்ரீநரஸிம்மமூர்த்தி இங்கு கோயில் கொண்டுள்ளார், இந்த இடம் தாயார் ஸந்நிதி நுழைவாசலில் உள்ளது. வேறெங்கும் காணப்படாத ஸ்ரீதன்வந்தரி பகவானின் தனி ஸந்நிதி இங்குள்ளது. இது பரமபத வாசலுக்கு வடக்கிலும், சந்த்ரபுஷ்கரிணிக்கு மேற்கிலும் உள்ளது.

மற்றும் ஸ்ரீராமர், ஸ்ரீசக்கரத்தாழ்வார், நின்ற திருக்கோலத்தில் 20அடி உயரமுள்ள மூலஸ்தான கருடன், ஸ்ரீஉடையவர், தனித்தனியாக அனைத்து ஆழ்வார்கள், ஸ்ரீதேசிகன் இவர்களுடைய ஸந்நிதிகளும் ஸேவிக்க வேண்டியவை. கருடாழ்வார் ஸந்நிதி, இரு பக்கங்களிலும் வேறு எங்கும் காணப்படாத சுக்ரீவன், அங்கதன் ஸந்நிதிகளும் இருக்கின்றன, மூலவர் ரங்கநாதர் கர்ப்பக்ருஹத்தின் மேல் தங்க விமானத்தில் தென்பக்கம் பரவாஸுதேவர் தங்க விக்ரஹம் உள்ளது. ஸ்ரீரங்கநாதரை தரிசித்துவிட்டு வெளியே வரும்பொழுது தங்க விமானத்தையும் பரவாஸுதேவரையும் ஸேவிக்கும் வழக்கம் உள்ளது.

நம்பெருமாளை ஸ்ரீராமானுஜருக்கு முற்பட்ட ஆச்சார்யர்கள் ராமானுஜர் ஆழ்வான் ஆண்டான், எம்பார் பட்டர், பிள்ளை லோகாசாரியர் முதலிய ஆச்சார்யர்களும் மங்களாசாஸனம்

செய்துள்ளார்கள். ஸ்ரீராமானுஜர் மலையாள நாட்டு திவ்ய தேசங்கள் தவிர மற்ற திவ்ய தேசங்களை எல்லாம் மங்களாசாஸனம் செய்துள்ளார். அடுத்த பக்கங்களில் வரும் ஐந்து திவ்யதேசங்களும் ஸ்ரீரங்கத்திற்கு அருகிலேயே உள்ளன. இவை தவிர அருகில் உள்ள மற்ற பிரபல கோயில்கள்: சமயபுரம், திருவானைக்காவல், மலைக்கோட்டை, பிக்ஷாண்டார் கோயில்.

**குறிப்பு: "இக்ஷ்வாகு குலதனம் என்னும் ஸ்ரீரங்க மாஹாத்ம்யம்"** என்ற பெயரில் இந்த திவ்ய தேசத்தைப் பற்றிய விவரமான ஸ்தலபுராணம் லிப்கோவால் தனியாக வெளியிடப்பட்டுள்ளது.

**மங்களாசாஸனம்:**

பத்து ஆழ்வார்களும் ஆண்டாளும் (மதுரகவி ஆழ்வாரைத் தவிர).

**பெரியாழ்வார்:** 183, 189, 212, 245, 402-432.

**ஆண்டாள்:** 607-616.

**குலசேகராழ்வார்:** 647-676, 728.

**திருமழிசையாழ்வார்:** 772, 800-806, 844, 870, 2384, 2411, 2417, 2441.

**தொண்டரடிப்பொடியாழ்வார்:** 872-926.

**திருப்பாணாழ்வார்:** 927-936.

**திருமங்கையாழ்வார்:** 1019, 1213, 1378-1427, 1506, 1571, 1664, 1829, 1978, 2029, 2038, 2043, 2044, 2050, 2062, 2063, 2065, 2069, 2070, 2073-76, 2673 (71), 2674 (118).

**பொய்கையாழ்வார்:** 2087.

**பூதத்தாழ்வார்:** 2209, 2227, 2251, 2269.

**பேயாழ்வார்:** 2342, 2343.

**நம்மாழ்வார்:** 2505, 3348-58

மொத்தம் 247 பாசுரங்கள்.

## 2. திருக்கோழி (உறையூர், நிசுளாபுரி, உறந்தை)

இது திருச்சி முனிஸிபாலிடியிலேயே ஒரு பகுதி. டவுன் ஜங்ஷன்-மெயின் கார்டுகேட் மார்க்கத்தில் உறையூர் அல்லது நாச்சியார் கோயில் என்ற இடத்தில் இறங்கலாம். திருச்சி ஜங்ஷனிலிருந்து 3 கி.மீ. தூரம்.

**மூலவர்:** அழகிய மணவாளப் பெருமாள், நின்ற திருக்கோலம், ப்ரயோக சக்கரம், வடக்கே திருமுகமண்டலம்.

**தாயார்:** பெருமாள் பக்கத்திலேயே கமலவல்லி நாச்சியார்-வாஸலக்ஷ்மி, உறையூர்வல்லி, வீற்றிருந்த திருக்கோலம், (தாயாருக்குத் தனி ஸந்நிதி இல்லை.) வடக்கே திருமுகமண்டலம், திருமணத்தருண திருக்கோலம்.

**தீர்த்தம்:** கல்யாண தீர்த்தம், சூரியபுஷ்கரிணி, குடமுருட்டி நதி.

**விமானம்:** கல்யாண விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ரவிதர்மா, 33 கோடி தேவர்கள்.

**விசேஷங்கள்:** சோழமன்னனின் திருமகளான கமலவல்லி நாச்சியார் ஸ்ரீரங்கநாதன் மீது காதல் கொண்டு, விரதம் இருக்க, அழகிய மணவாளன் இங்கு வந்து திருமணம் புரிந்து கொண்டதாக ஸ்தல புராணம். திருப்பாணாழ்வாரின் அவதாரஸ்தலமாகிய இங்கு, அவருக்கும் ஒரு தனி ஸந்நிதி இருக்கிறது. வருடந்தோறும் பங்குனி உத்தரத்திற்கு முதல் நாள் ஸ்ரீரங்கத்திலிருந்து ஸ்ரீரங்கநாதர் உத்ஸவர் எழுந்தருளி கல்யாண உத்ஸவம் நடைபெறுகிறது. ஸ்ரீ வெக்காளியம்மன் என்ற பெயரில் மாரியம்மன் கோயில் ஒன்று இவ்வூரில் உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1762.

**குலசேகராழ்வார்:** 667.

மொத்தம் 2 பாசுரங்கள்.

# 3. திருக்கரம்பனூர் (உத்தமர் கோயில், கதம்ப க்ஷேத்ரம்)

இது திருச்சி அருகில் கார்டுலைனில் உள்ள ஒரு சிறிய ஸ்டேஷன். ஸ்ரீரங்கத்திலிருந்து வடக்கே ¾ கி.மீ. திருச்சியிலிருந்தும் ஸ்ரீரங்கத்திலிருந்தும் திருவெள்ளறை போகும் பஸ் வழியில் இங்கு இறங்கலாம்.

**மூலவர்:** புருஷோத்தமன், புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பூர்வாதேவி, பூர்ணவல்லி.

**தீர்த்தம்:** கதம்ப தீர்த்தம்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** கதலீ வ்ருக்ஷம் (வாழை மரம்).

**விமானம்:** உத்யோக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** கதம்பமுனி, திருமங்கையாழ்வார், உபரி சரவஸு, ஸநக ஸநந்தன ஸநத் குமாரர்கள்.

**விசேஷங்கள்:** தன்னைப் போல் ப்ருஹ்ம தேவருக்கும் தலைகள் உள்ளதை சகியாமல் சிவன் ப்ரஹ்மனுடைய ஒரு தலையைக் கிள்ளி எறிந்தபடியால் ப்ருஹ்மஹத்தி தோஷம் வந்து, சிவபெருமான் கையில் கபாலம் ஒட்டிக்கொண்டது. சிவன் கையில் ஒட்டிக்கொண்ட கபாலத்தில் மஹாலக்ஷ்மியைக் கொண்டு பிக்ஷையிடச் செய்து சாபந்தீர்த்துக் கொண்டதாக ஸ்தல வரலாறு. சிவன், பார்வதி, ப்ரஹ்மா, ஸரஸ்வதி, மற்ற தெய்வங்களுக்கும் பல ஸந்நிதிகள் இங்கே உள்ளன. இந்த க்ஷேத்திரத்தில் சிவபெருமான் பிக்ஷாடண மூர்த்தியாகத் தம் குடும்பத்தோடு இருக்கிறார். ஆகவே, இந்த ஸ்தலத்திற்கு, பிக்ஷாண்டார் கோயில் என்ற பெயரும் வழங்கி வருகிறது. சத்திரங்கள், கல்யாண கூடங்கள் எல்லாம் இருக்கின்றன.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1399-1 பாசுரம்.

## 4. திருவெள்ளறை (வேதகிரி, ச்வேதகிரி)

திருச்சியிலிருந்து துறையூர் போகும் பஸ் பாதையில் சுமார் 20 கி.மீ. தூரத்தில் உள்ளது. டவுன் பஸ்களும் செல்கின்றன. ஸ்ரீரங்கத்திலிருந்து உத்தமர்கோயில் வழியாகவும் பஸ்ஸில் போகலாம் இங்கு வசதிகள் எதுவும் இல்லை. திருச்சியிலேயே தங்கி ஸேவித்துவிட்டுத் திரும்பிப்போகலாம். பெரிய மதில்களுடன் கூடிய விசாலமான இக்கோயில், பஸ் பாதையிலிருந்து சுமார் அரை கி.மீ. தூரத்தில் உள்ளது. (Pincode 621 009)

**மூலவர்:** புண்டரீகாக்ஷன், (செந்தாமரைக்கண்ணன்) நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** செண்பகவல்லி, பங்கயச்செல்வி, தனிக்கோயில் நாச்சியார் ஸந்நிதி உண்டு. உத்ஸவத் தாயாருக்கு பங்கஜவல்லி என்று திருநாமம்.

**தீர்த்தம்:** மதிலுக்குள்ளேயே 7 தீர்த்தங்கள் உள்ளன. திவ்ய கந்த, க்ஷீரபுஷ்கரிணிகள், குச, சக்ர, புஷ்கல, பத்ம, வராஹ மணிகர்ணிகா.

**விமானம்:** விமலாக்ருதி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** பெரிய திருவடி, சிபி, பூதேவி, மார்க்கண்டேயர், லக்ஷ்மி, ப்ருஹ்மருத்ராதிகள்.

**விசேஷங்கள்:** உத்தராயண வாசல், தக்ஷிணாயன வாசல் என்று இரண்டு வாசல்கள். தை முதல் ஆனி வரை உத்தராயண வாசல் வழியாகவும், ஆனி முதல் மார்கழி வரை தக்ஷிணாயன வாசல் வழியாகவும் பெருமாளை ஸேவிக்க செல்ல வேண்டும்.

இரவில் நேரங்கழித்து வந்த பெருமாளைத் தாயார் "ஏன் இவ்வளவு நேரம்" என்று கேட்டதைக் குறிக்கும் வகையில், "நாழி கேட்டான் வாசல்" என்று ஒரு வாசலுமுண்டு. ஸ்ரீதேவி, பூதேவி, ஸூர்ய சந்திரர்கள், ஆதிசேஷன்-இவர்கள் மனித உருவில், பக்கத்தில் நின்று கைங்கர்யம் செய்வது இந்த ஸந்நிதியின் தனிச்சிறப்பு. இந்த க்ஷேத்திரத்தின் ஸகல ஆதிப்யமும் பங்கயச் செல்வியினுடையது. உய்யக்கொண்டார் அவதாரஸ்தலம் இதுவே. நடாதூரம்மாளுக்கு "ஒப்பாரும் மிக்காரும் இல்லை" எனும் புகழ்மாலையை சூட்டும்படி க்ருபை பண்ணிய மகாநுபாவரான எங்களாழ்வான் அவதரித்த ஸ்தலம். உடையவர் வைஷ்ணவத்தை வளர்க்க வாஸம் செய்த ஸ்தலம். சிபிச்சக்கரவர்த்திக்கு ச்வேத வராஹனாக (வெள்ளைப்

பன்றி) பெருமாள் காட்சி தந்ததால் பெருமாளுக்கு "ச்வேதபுரிநாதன்" என்ற பெயர் ஏற்பட்டதாக ஸ்தல புராணம். இதனாலேயே ஸ்வேதபுரி க்ஷேத்ரம் என்று அழைக்கப்படலாயிற்றாம். ஸ்ரீஸ்வாமி தேசிகன் ஹம்ஸ ஸந்தேசத்திலும், ஸ்ரீமணவாள மாமுனிகளும் மங்களாசாஸனம் செய்த ஸ்தலம். தனிசந்நிதிகள்: சக்கரத்தாழ்வார், உடையவர், ஆண்டாள்.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 71, 192-201

**திருமங்கையாழ்வார்:** 1368-77, 1851, 2673 (70), 2674 (117).

மொத்தம் 24 பாசுரங்கள்.

## 5. திருஅன்பில் (அன்பில்)

திருச்சி - கல்லணை, கும்பகோணம் பஸ் மார்க்கத்தில் உள்ளது. திருச்சிக்கு சமீபம் லால்குடிக்கு கிழக்கே 8 கி.மீ. திருச்சியில் தங்கி பஸ்ஸில் வந்து ஸேவித்து விட்டுத் திரும்பலாம். நடராஜபுரம் என்ற ஊருக்குப் போய் அங்கிருந்தும் (¾ கி.மீ.) அன்பில் அடையலாம். இங்கு சத்திரங்கள், ஹோட்டல்கள் முதலிய வசதிகள் ஒன்றுமில்லை. கொள்ளிடத்தின் அக்கரையில் உள்ள கோயிலடியிலிருந்தும் நதியைக் கடந்து வரலாம்.

**மூலவர்:** வடிவழகிய நம்பி, புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** ஸுந்தரராஜன்.

**தாயார்:** அழகியவல்லி நாச்சியார்.

**தீர்த்தம்:** மண்டூகபுஷ்கரிணி, கொள்ளிடம்.

**விமானம்:** தாரக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ரஹ்மா. வால்மீகி.

**விசேஷம்:** இக்கோயிலில் கல்வெட்டுகள் பல உள்ளன.

**குறிப்பு:** பாடல் பெற்ற சத்தியவாகீசுவரர் கோயில் அருகில் ஆலந்துறையில் உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**திருமழிசையாழ்வார்:** 2417-1 பாசுரம்.

## 6. திருப்பேர் நகர் (கோயிலடி, அப்பக்குடத்தான்)

அன்பிலில் இருந்து கொள்ளிடத்திற்கு அக்கரையில் 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. தோஹுர் - திருக்காட்டுப்பள்ளி - தஞ்சை பஸ்ஸிலும் வரலாம். திருக்காட்டுப்பள்ளியிலிருந்து கல்லணை போகும் சில பஸ்கள் கோயிலடி வழியே போகின்றன. அரை மணி நேரத்திற்கு ஒரு முறை வேன் வசதி உண்டு. தஞ்சாவூர், கும்பகோணத்திலிருந்தும் (திருவையாறு, திருக்காட்டுப்பள்ளி வழியாகப்) போகலாம். கோயிலுக்கு மிக அருகாமையிலேயே பஸ் நிற்கிறது. கார் வசதி உள்ளவர்கள் திருச்சியிலிருந்தும் போகலாம். "திருப்பேர் நகர்" என்றால் யாருக்கும் தெரியாது; ஆதலால் **"கோயிலடி"** என்றே சொல்ல வேண்டும். கோயில் காவேரிக் கரையின்மேல் ஒரு மேட்டின் மேல் இருக்கிறது. குளிக்க சௌகரியம் உண்டு. (Pincode 613 105).

**மூலவர்: அப்பக்குடத்தான்**, அப்பாலா ரெங்கநாதன், புஜங்கசயனம், அருகில் அமர்ந்திருக்கும் உபமன்யு முனிவருக்கு ஆசி கூறும் பெருமாளின் வலது திருக்கரம் ஓர் அப்பக் குடத்தையும் அணைத்திருக்கிறது. மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** இந்திராதேவி, கமலவல்லி.

**தீர்த்தம்:** இந்த்ர தீர்த்தம், கொள்ளிடம்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** வில்வம்.

**விமானம்:** இந்த்ர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** உபமன்யு, பராசரர்.

**விசேஷங்கள்:** இந்த இடத்திலிருந்துதான் நம்மாழ்வார் மோக்ஷத்துக்குப் புறப்பட்டுச் சென்றதாக ஐதீஹம். நம்மாழ்வார் இந்த ஊரைக் கடைசியாகப் பாடியிருப்பதால் அவ்வித ஐதீஹம் ஏற்பட்டிருக்கக்கூடும். பெருமாளுக்குத் தினந்தோறும் மாலையில் "அரவணை"யாக அப்பம் அமுது செய்விக்கப்படுகிறது. பக்கத்தில் உள்ள திருக்காட்டுப்பள்ளியில் அல்லது திருச்சியில் தங்கலாம். மக்கட்பேறு இல்லாத தம்பதிகள், இங்கே பெருமாளை ஸேவித்து

சந்தானக்ருஷ்ணனை மடியில் வாங்கினால் புத்ரபாக்யம் உண்டாவதாக நம்பிக்கை. ஆஞ்சநேயர், பிள்ளையார் சந்நிதிகளும் ஆழ்வார் மண்டபமும் உள்ளன.

**அருகில் உள்ள மற்ற கோயில்கள்:** 12 கி.மீ. கிழக்கே வரதர் கோயில், 16 கி.மீ. கண்டியூர், திருக்காட்டுப்பள்ளியில் சிவன் கோயில்.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 173, 205.

**திருமங்கையாழ்வார்:** 1428-37, 1851, 1857, 2048, 2050, 2059, 2060, 2070, 2673 (70), 2674 (118).

**திருமழிசையாழ்வார்:** 2417.

**நம்மாழ்வார்:** 3744-54.

மொத்தம் 33 பாசுரங்கள்.

## 7. திருக்கண்டியூர் (கண்டியூர், த்ரிமூர்த்தி க்ஷேத்திரம்)

தஞ்சையிலிருந்து வடக்கே திருவையாறு செல்லும் பஸ்ஸில் 9-10 கி.மீ. தூரத்தில் உள்ளது. டவுன் பஸ் வசதி உள்ளது. தஞ்சையிலோ திருவையாறிலோ (இங்கிருந்து சமீபம்) தங்கி ஸேவிக்கலாம்.

**மூலவர்:** ஹரசாபவிமோசனப் பெருமாள், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** கமலநாதன்.

**தாயார்:** கமலவல்லி.

**தீர்த்தம்:** கபால மோக்ஷபுஷ்கரிணி, பத்ம தீர்த்தம், கபால தீர்த்தம், குடமுருட்டி நதி.

**விமானம்:** கமலாக்ருதி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** அகஸ்த்யர்.

**விசேஷங்கள்:** பரமசிவன் ப்ரஹ்மனின் ஒரு தலையைக் கிள்ளியதால் அவர் கபாலம் கையில் ஒட்டிக்கொள்ள அந்த

சாபத்தை இந்தப் பெருமாள் விமோசனம் செய்துவைத்ததாக ஐதீஹம். (திருக்கரம்பனூரிலும் இதே ஐதீஹம்தான்.) ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் மூவருக்கும் கோபுரங்களுடன் கூடிய தனிக் கோயில்கள், கால் கி.மீ. தூரத்திற்குள் உள்ளன.

பெருமாள் கோயிலில் ஒரு ஸந்நிதியில் முன்புறம் சக்கரத் தாழ்வாரும் பின்புறம் நரஸிம்ஹனும் உள்ளனர். ஆனால் சுவற்றின் ஓரமாக ஸ்தாபித்திருப்பதால் பின்புறம் சென்று நரஸிம்ஹனை ஸேவிக்க முடியாது. ஆண்டாள், தேசிகர் சந்நிதிகள் உள்ளன.

ப்ரஹ்மாவின் கோயில் மூடப்பட்டுள்ளது. ப்ரஹ்மா, ஸரஸ்வதி சிலைகள் சிவன் கோயிலில் ஒரு மூலையில் வைக்கப்பட்டுள்ளன.

சிவனுக்கு ப்ரஹ்மசிரக் கண்டீச்வரர் என்று பெயர். பக்கத்தில் கல்யாணபுரம் என்கிற ஊரில் கல்யாண வெங்கடேச்வரர் கோயில் இருக்கிறது. இங்கு உத்ஸவாதிகள் விசேஷமாக நடக்கின்றன. பாடல் பெற்ற வீரட்டேசுரர் என்ற சிவத்தலம் அருகில் உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்**: 2050-1 பாசுரம்.

## 8. திருக்கூடலூர் (ஆடுதுறைப் பெருமாள் கோயில், ஸங்கம க்ஷேத்திரம்)

தஞ்சாவூரிலிருந்து பஸ் மார்க்கமாய் திருவையாறு சென்று அங்கிருந்து கும்பகோணம் செல்லும் பஸ்ஸில் 11 கி.மீ. தூரம் சென்று இவ்வூரை அடையலாம். அல்லது தஞ்சாவூர்-கணபதி அக்ரஹாரம் மார்க்கம் டவுன் பஸ்ஸிலும் செல்லலாம். இவ்வூருக்கு ஐயம்பேட்டை ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வடக்கே 6 கி.மீ. வண்டியில் செல்லலாம். இங்கு தங்கும் வசதிகள் ஒன்றும் இல்லை. தஞ்சாவூரில் அல்லது திருவையாறில் தங்கி ஸேவிக்கலாம்.

**மூலவர்**:வையங்காத்த பெருமாள் (ஜகத்ரக்ஷகன்), உய்யவந்தார், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்**: அதே பெயருடன் கையில் செங்கோல் தாங்கி நிற்கிறார்.

**தாயார்**: பத்மாஸனி, புஷ்பவல்லி.

**தீர்த்தம்**: சக்ர தீர்த்தம், காவிரி நதி.

**விமானம்**: சுத்தஸத்வ விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** நந்தகமுனி.

**விசேஷங்கள்:** இங்கே தேவர்கள் நந்தகமுனிவரோடு கூடி பெருமாளை ஸேவிக்க வந்தபடியால் இந்த ஊருக்கு கூடலூர் என்ற பெயர் உண்டாயிற்று. காவிரி இந்த ஸ்தலத்திற்கு வந்து இழந்த ஒளியை மீண்டும் பெற்ற இடம். இந்தக் கோயில் காவேரி வெள்ளத்தில் மூழ்கி மண்மேடாகிவிட்டபோது, ராணி மங்கம்மாள் கோயிலை புதுப்பித்ததாகவும், இந்த கோயிலுக்கான மூலவர் விக்ரஹங்கள் அருகிலுள்ள கீழவளூத்தூரைச் சேர்ந்த தீக்ஷிதர் ஒருவர் சொப்பனத்தில் பார்த்தபடித் தோண்டி எடுத்து அவ்வூரிலேயே 1741-ல் பிரதிஷ்டை செய்ததாகவும் சொல்லப்படுகிறது.

**முக்கிய குறிப்பு:** இக்கோயிலின் அர்ச்சகர் வரும் நேரந்தெரிந்து பெருமாள் ஸேவையைச் செய்துகொள்ள வேண்டும்.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1358-67--10 பாசுரங்கள்.

## 9. திருக்கவித்தலம் (கபிஸ்தலம், கிருஷ்ணாரண்ய க்ஷேத்ரம்)

பாபநாசம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வண்டியில் வரலாம். கும்பகோணத்திலிருந்தும் திருவையாறு பஸ்ஸில் வரலாம். சத்திரங்கள், கடைகள் உண்டு. கும்பகோணத்திலிருந்தும், பாபநாசத்திலிருந்தும் டவுன் பஸ் வசதி உண்டு.

**மூலவர்:** கஜேந்த்ர வரதன், புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ரமாமணிவல்லி (பொற்றாமரையாள்).

**தீர்த்தம்:** கஜேந்த்ர புஷ்கரிணி, கபில தீர்த்தம்.

**விமானம்:** ககநாக்ருதி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சிறிய திருவடி, கஜேந்த்ரன்.

**விசேஷம்:** ஆதிமூலமே என்று அழைத்தபோது கஜேந்திரனுக்கு அபயம் அளித்த ஸ்தலம். காவிரிக்கரையில் இருப்பதால் இப்பெருமாளை 'ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன்' என்பர்.

**முக்கிய குறிப்பு:** அர்ச்சகர் வரும் நேரம் தெரிந்து முன் ஏற்பாட்டுடன் செல்வது நல்லது.

**மங்களாசாஸனம்:**

**திருமழிசையாழ்வார்:** 2431--1 பாசுரம்.

## 10. திருப்புள்ளம்பூதங்குடி (புள்ளபூதங்குடி)

கும்பகோணத்திலிருந்து சுவாமிமலை வழியாக திருவைகாவூர் செல்லும் டவுன் பஸ் பாதையில் சுவாமிமலைக்கப்பால் 4-5 கி.மீ. தூரத்தில் உள்ளது. ஸ்ரீ அஹோபில மடத்தின் நிர்வாஹத்தில் இருக்கின்றது. மடத்தில் வசதிகள் உண்டு. திருஆதனூர் சமீபத்திலேயே உள்ளது.

**மூலவர்:** வல்வில் ராமன், புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பொற்றாமரையாள் (ஹேமாம்புஜவல்லி).

**தீர்த்தம்:** ஜடாயு தீர்த்தம், க்ருத்ர தீர்த்தம்.

**விமானம்:** சோபன விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சக்ரவர்த்தித் திருமகன், க்ருத்ரராஜன்.

**விசேஷங்கள்:** ஸ்ரீராமன், ஜடாயுவுக்கு மோக்ஷமளித்தபின் ச்ரமபரிஹாரம் செய்துகொள்ளும் நிலையில் கோயில் கொண்டதாகக் கூறப்படுகிறது. ஸீதையைப் பிரிந்த நிலையாகையால் பக்கத்தில் ஸீதை இல்லை. பூமிப்பிராட்டி மட்டுமே அமர்ந்திருக்கிறார். தனிக்கோயில் நாச்சியாருக்கே பொற்றாமரையாள் என்று பெயர். உத்ஸவ மூர்த்தியான ராமனுக்கு சதுர்புஜங்கள் உள்ளன. ஸ்ரீஅஹோபில மடம் 19-வது பட்டம் ஜீயர் ஸ்ரீஸ்ரீநிவாஸயதீந்த்ர மஹாதேசிகனுக்கு ஒரு பிருந்தாவனம் உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1348-57--10 பாசுரங்கள்.

## 11. திரு ஆதனூர்

சுவாமிமலையிலிருந்து சுமார் 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. இங்கு வசதிகள் எதுவும் இல்லை. இந்தக் கோயில் ஸ்ரீஅஹோபில மடத்து நிர்வாஹத்தில் உள்ளது. பயணத்தில் திருப்புள்ளம் பூதங்குடியோடு சேர்த்து சேவிக்கலாம்.

**மூலவர்:** ஆண்டளக்குமையன், புஜங்கசயனம், தலையின் கீழ் மரக்காலும் இடது கையில் ஓலை எழுத்தாணியும் காண்கின்றன. கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ரங்கநாயகி.

**தீர்த்தம்:** ஸூர்யபுஷ்கரிணி.

**விமானம்:** ப்ரணவ விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** திருமங்கையாழ்வார், காமதேநு.

**விசேஷம்:** பெருமாளுடைய பாதாரவிந்தங்களில் திருமங்கையாழ்வாரும், காமதேநுவும் உள்ளனர்.

இப்பெருமாளை 'ஆதனூர் ஆண்டளுக்கும் ஐயன்' என்பர்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 2674 (130)--1 பாசுரம்.

## 12. திருக்குடந்தை (சாரங்கபாணி சுவாமி கோயில், பாஸ்கர க்ஷேத்ரம்)

கும்பகோணம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து இக்கோயில் சுமார் 2-3 கி.மீ. தூரம். இந்த ஊரில் ஹோட்டல், சத்திரம் முதலிய பல வசதிகளும் உண்டு. பல ஊர்களிலிருந்தும் பஸ்கள் வருகின்றன.

**மூலவர்:** இவருக்கு சாரங்கபாணி, ஆராவமுதன், அபர்யாப்தாம்ருதன் என்று பல பெயர்கள். ஆதிசேஷசயனம் (உத்தான சயனம்), கிழக்கே திருமுக மண்டலம், திருமழிசையாழ்வாருக்காகக் 'கிடந்தவாறெழுந்' திருக்க முயலும் நிலையிலிருப்பதால் 'உத்தாநசாயீ' என்றும் அழைக்கப்படுகிறார்.

**தாயார்:** கோமளவல்லி (படிதாண்டாப்பத்தினி).

**தீர்த்தம்:** ஹேமபுஷ்கரிணி (பொற்றாமரை), காவிரி நதி, அரசலாறு (அரிசொல் ஆறு).

**விமானம்:** வைதீக விமானம் (வேத விமானம்).

**ப்ரத்யக்ஷம்:** ஹேமமஹரிஷி.

**விசேஷங்கள்:** பெருமாளுக்கெதிரே நதிதேவதைகள் வணங்குகின்றனர். இங்கேதான், ஸ்ரீமந்நாதமுனிகள் "ஆராவமுதே"

என்று தொடங்கும் திருவாய்மொழிகளைக் கேட்டு, திவ்ய ப்ரபந்தத்தையே தொகுக்க ஆரம்பித்தார். திருப்பதி ஸ்ரீனிவாசன் மகாலட்சுமிக்கு "பயந்து" இங்கே ஒளிந்திருந்ததாக இங்கே உள்ள பாதாள ஸ்ரீனிவாஸன் வரலாறு.

ஹேமரிஷியின் புத்திரியாகத் தோன்றித் தவம் புரிந்த கோமளவல்லித் தாயாரை மணந்ததாக ஐதீஹம். திருமழிசையாழ்வார் வேண்டுகோளுக்கு செவிசாய்த்து அவருக்கு ப்ரத்யக்ஷமாய் காட்சி தந்த கோலம் கருவறையில் காணலாம்.

பெருமாளின், அழகிய, பெரிய சித்திரைத்தேர் உலக ப்ரஸித்தி பெற்றது. பெருமாள் ஸந்நிதியே தேர் சக்கரங்களுடன் கருங்கல்லால் கட்டப்பட்டிருக்கிறது. மகேந்திர பல்லவனால் கட்டப்பட்ட மண்டபம் உள்ளது. மேட்டு ஸ்ரீனிவாசன், (தீராவினைகள் தீர்த்தவர்), ராமர், தேசிகன் மற்றும் பல சந்நிதிகள் உள்ளன. சென்ற 1964ஆம் வருஷத்திலும், சமீபத்தில் ஜுன் 1999இலும் மிகச் சிறப்பாக சம்ப்ரோக்ஷணம் நடைபெற்றது. பாடல் பெற்ற சிவஸ்தலமான ஆதிகும்பேசுவரர் கோயிலும், நாகேசுவர சுவாமி கோயிலும் அருகில் உள்ளன.

ராமஸ்வாமி கோயிலும் சக்ரபாணி கோயிலும் இவ்வூரில் உள்ளன. சக்ரபாணி அஷ்ட புஜங்களுடன் விளங்குகின்றார். இவருக்கும் இவரது தமையனாரெனக் கருதப்படும் சாரங்கபாணிக்கும் சேர்ந்து பல உத்ஸவங்கள் நடக்கின்றன. ராமஸ்வாமி கோயிலில் ராமன் பட்டாபிஷேகக் காட்சியில் பரத சத்ருக்ன லஷ்மணன் ஸீதை எல்லோரும் சாமரக் குடையின்கீழ் வெண்சாமரம் வீசிக்கொண்டிருப்பதைக் காணலாம். ஆஞ்சநேயர் வீணாகானம் செய்து கொண்டு ராமாயண பாராயண புஸ்தகத்துடனும் காணப்படுகிறார். கோயில் பிரகாரத்தில் சித்திர ராமாயணத்தை வண்ணத்தால் வரைந்திருக்கிறார்கள். சிருஷ்டிக்கு வேண்டிய மூலப்பொருள்கள் அமைந்துள்ள (அமிர்த கும்பம்) குடம் இங்கு தங்கியமையால் திருக்குடந்தை என்ற பெயர் பெற்றது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை குரு சிம்மராசியில் வரும் மாசிமகத்தன்று, வெளியூர்களிலிருந்து லட்சக்கணக்கான பக்தர்கள் வந்து இவ்வூரிலுள்ள மகாமகக்குளத்தில் நீராடிப் பயன்பெறுகிறார்கள்.

**குறிப்பு:** ஆழ்வார்கள் அருளிய நாலாயிரம் பாசுரங்களையும் நிலைநிறுத்திய ஸ்ரீ ஆராவமுதப் பெருமாளுக்கு, ஸ்ரீமந்நாதமுனிகள், "**ஆராவமுதாழ்வான்**" என்ற திருநாமம் சாற்றியருளினார். நம்மாழ்வார் திராவிட சுருதிதர்சகர் என்ற பெயர் சாற்றியருளினார்.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 173, 177, 188.

**ஆண்டாள்:** 628.

**திருமழிசையாழ்வார்:** 807-812, 2417.

**திருமங்கையாழ்வார்:** 949, 954, 991, 1078, 1202, 1205, 1394, 1526, 1538, 1570, 1606, 1732, 1759, 1853, 1949, 1975, 2010, 2037, 2045, 2068, 2070, 2080, 2672, 2673 (73), 2674 (114)

**பூதத்தாழ்வார்:** 2251, 2278.

**பேயாழ்வார்:** 2311, 2343.

**நம்மாழ்வார்:** 3194-3204.

மொத்தம் 51 பாசுரங்கள்.

## 13. திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன் கோயில், மார்க்கண்டேய க்ஷேத்திரம்)

தங்கவசதி உண்டு. கும்பகோணத்திலிருந்து 6-7 கி.மீ. தூரத்திலேயே இருப்பதால் அங்கேயே தங்கி காரிலோ, பஸ்ஸிலோ இந்த க்ஷேத்திரத்தை ஸேவிக்கலாம். திருநாகேஸ்வரம் ஸ்டேஷனிலிருந்து சுமார் 2 கி.மீ. ஆனால் வாகன வசதி குறைவு.

**மூலவர்:** ஒப்பிலியப்பன் (ஒப்பற்றவன்), ஸ்ரீநிவாஸன் என்று பெயர். வெங்கடாசலபதியைப் போன்ற அதே தோற்றத்துடன் நின்ற திருக்கோலம். 'மாம் ஏகம் சரணம் வ்ரஜ' என்ற சரமச்லோகப்பகுதி எம்பெருமானின் வலக்கையில் வைரங்களால் பொறிக்கப்பட்டுள்ளது. கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பூமி தேவி (பூமி நாச்சியார் என்ற திரு நாமத்துடன்) பெருமாளுக்கு வலதுபுறம் கீழே மண்டியிட்டு வணங்கும் திருக்கல்யாண கோலம் (தனிக்கோயில் இல்லை).

**தீர்த்தம்:** அஹோராத்ர புஷ்கரிணி, ஆர்த்தி புஷ்கரிணி.

**விமானம்:** விஷ்ணு விமானம், சுத்தானந்த விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** மார்க்கண்டேயர், பெரிய திருவடி, காவேரி, தர்மதேவதை.

**விசேஷங்கள்**: திருப்பதி போக இயலாதவர்கள், வேங்கடேசருக்குச் செய்துகொண்ட ப்ரார்த்தனைகளை இங்கேயே செலுத்துகிறார்கள். திருப்பதி ஸ்ரீநிவாஸருக்கு தமையனார் என்கிற ஐதீஹம். மருகண்டு மஹரிஷியின் பத்னி விருப்பப்படி உப்பில்லாத ப்ரஸாதம் நிவேதனம். எனவே இக்கோயில் தளிகையில் உப்பு சேர்ப்பதில்லை. அதனால் பெருமாள் "உப்பிலியப்பன்" என்றும் அழைக்கப்படுகின்றார். இங்கே பெருமாளை ஸேவிக்க வருகிறவர்கள் யாராயினும் சரி, கோயிலுக்குள் உப்பையோ, உப்பு சம்பந்தப்பட்ட உணவையோ எடுத்துச் செல்லுகிறவர்கள், நரகத்திற்கு ஆளாவார்கள் என்று புராணம் கூறுகிறது.

**குறிப்பு**: இந்தக் கோயிலில் பிரார்த்தனைத் திருக்கல்யாண உத்ஸவம், கருடஸேவை, மூலவர் திருமஞ்சனம் முதலியன தேவஸ்தானத்துக்கு உரிய தொகை செலுத்தி செய்யலாம். ஒவ்வொரு மாதமும் சிரவண நக்ஷத்திரத்தன்று சிரவண தீபம் எடுத்துக் குறி சொல்வது விசேஷம். பங்குனிமாதம் ப்ருஹ்மோத்ஸவமும், ஐப்பசி மாதம் கல்யாண உத்ஸவமும் குறிப்பிடத்தக்கவை. அருகில் பாடல் பெற்ற சிவஸ்தலமான திருநாகேச்சுவரத்தில், சண்பகாரணியேசுவரர் கோயில் உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்**: 1448-77, 1855, 2080, 2673 (72), 2674 (113). **பேயாழ்வார்**: 2342, 2343. **நம்மாழ்வார்**: 3249-59. மொத்தம் 47 பாசுரங்கள்.

**குறிப்பு**: பொய்கையாழ்வாருடைய 2158-ஆம் பாசுரத்திலுள்ள "விண்ணகர்" என்னும் சொல் பரமபதத்தைக் குறிப்பதாகப் பெரியோர்கள் கருத்து.

## 14. திருநறையூர் (நாச்சியார் கோயில்)

கும்பகோணத்திலிருந்து 9-10 கி.மீ. தூரத்திலுள்ளது. டவுன் மற்றும் பல வெளியூர் பஸ்களிலும் (முக்கியமாக, குடவாசல், திருவாரூர் வழி) போகலாம். எல்லா வசதிகளும் உண்டு. உப்பிலியப்பன் கோயிலிலிருந்தும் டவுன் பஸ்ஸில் போகலாம். ஸித்தி க்ஷேத்திரம் என்று புராதனப் பெயர். (Pincode 612 602).

**மூலவர்**: ஸ்ரீநிவாஸன், திருநறையூர் நம்பி, வாஸுதேவன் என்ற பெயர்களுடன் நின்ற திருக்கோலத்தில் தாயாரை மணம்புரிந்து கொள்ளும் நிலை, கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** வஞ்ஜுளவல்லி, (நம்பிக்கை நாச்சியார்), பெருமாள் பக்கத்தில் திருமணக் கோலத்தில் நிற்கிறார்.

**தீர்த்தம்:** மணி முக்தா புஷ்கரிணி, ஸங்கர்ஷண தீர்த்தம், ப்ரத்யும்ன தீர்த்தம், அநிருத்த தீர்த்தம், ஸாம்ப தீர்த்தம்.

**விமானம்:** ஸ்ரீநிவாஸ விமானம், ஹேம விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** மேதாவி முனிவர், ப்ரஹ்மா.

**விசேஷங்கள்:** மேதாவி ரிஷியின் வளர்ப்புப் பெண்ணான வஞ்ஜுளவல்லியை பகவான் தனது நிலையில் (ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன், (ஸாம்பன் என்கிற) புருஷோத்தமன், வாஸுதேவன் என்ற 5 உருவங்களில்) மணந்து கொள்கிறார். சிறிது, பெரிதாக 16 கோபுரங்கள்.

பெருமாளுடைய கல்கருடவாஹன ஸேவை பெயர் பெற்றது. ஏழு வியாழக்கிழமைகள் இங்கு கருட பகவானைத் தொடர்ந்து ஸேவிக்க/அர்ச்சனை செய்ய ப்ரார்த்தனைகள் நிறைவேறும் என்று நம்பிக்கை. கல்லாலான கருடவாஹனத்தை முதலில் ஸந்நிதியில் 4 பேர்களும், முடிவில் கோயில் வாசலில் 64 பேர்களும் எழுந்தருளப் பண்ணும் வகையில் வாஹனம் சிறுகச்சிறுகக் கனத்து விடுமாம். கல் கருடனுக்கு தனி ஸந்நிதி உள்ளது. இவ்வூரில் நாச்சியாருக்கே முதல் ஸ்தானம். வீதி உத்ஸவத்தில் அவர்தான் முதலில் எழுந்தருளுவார். கருடஸேவையின் போது பெருமாள் கல்கருடன் மீதும் தாயார் அன்னவாஹனத்திலும் எழுந்தருளுவார். இங்கு திருமங்கையாழ்வாருக்குப் பெருமாள் ஸமாச்ரயணம் செய்தார். மார்கழி மாதம் ப்ருஹ்மோத்ஸவம் மிக விமரிசையாக நடைபெறுகிறது. திருக்கோயில் நந்தவனத்தில் நீண்டகாலமாய் வசித்து வந்த கருடபட்சிகள் சமீபத்தில் 1999இல் முக்தி அடைய அங்கேயே அடக்கம் செய்யப்பட்டுள்ளன. இங்கேயுள்ள சிவன் கோயில் தவிர, அருகில் இருக்கும் மற்ற கோயில்கள் திருநாகேஸ்வரம், அழகாபுத்தூர்.

இந்தத் திருக்கோயிலில், 108 திவ்யதேசங்களில் ஸேவை ஸாதிக்கும் எம்பெருமான்களின் விக்ரஹங்கள் எல்லாவற்றையும் ஒரு சேரக் காணலாம்.

**திருமங்கையாழ்வார்:** 1078, 1329, 1470, 1478-1577, 1611, 1659, 1852, 2067, 2068, 2673 (71), 2674 (73, 133)

மொத்தம் 110 பாசுரங்கள்.

# 15. திருச்சேறை (பஞ்சஸாரக்ஷேத்ரம்)

நாச்சியார் கோயிலில் இருந்து சுமாராக 10 கி.மீ. கும்பகோணத்தி லிருந்து தென் கிழக்கில் 24 கி.மீ. தூரத்தில் திருவாரூர் நெடுஞ்சாலையில் உள்ள இவ்விடத்திற்கு டவுன் பஸ் மூலம் செல்லலாம். சத்திரம். ஹோட்டல்களும் உண்டு. குடவாசல் என்கிற டவுன் மிக அருகில் உள்ளது. முடிகொண்டான் ஆற்றுக்கும் குடமுருட்டியாற்றுக்கும் இடையில் அமைந்துள்ளது. (Pincode 612605)

**மூலவர்:** ஸாரநாதன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** மாமதலைப் பிரான், தவழும் திருக்கோலமூர்த்தி.

**தாயார்:** ஸார நாயகி (ஸார நாச்சியார்), பஞ்சலக்ஷ்மி.

**தீர்த்தம்:** ஸாரபுஷ்கரிணி.

**விமானம்:** ஸார விமானம். (ஸாரக்ஷேத்ரம் சேர்ந்து பஞ்சஸாரம்)

**ப்ரத்யக்ஷம்:** காவேரி, மார்க்கண்டேயன்.

**விசேஷங்கள்:** பெருமாள் காவேரியம்மனுக்கு ப்ரத்யக்ஷம். குளக்கரையில் காவேரியம்மனுக்கு ஒரு சிறு ஸந்நிதி உள்ளது. ஓர் அபூர்வம்: பிரம்மாவும் விஷ்ணுவும் இந்த சந்நிதியில் ஸேவை சாதிக்கின்றனர். ராஜகோபாலஸ்வாமி ஸந்நிதியும் உள்ளது.

விசேஷமாக தைப்பூசத்தில் பிரம்மோத்ஸவம் நடக்கிறது. இந்த உத்சவத்தில் தேரில் பெருமாள் 5 தாயார்களுடன் (ஸ்ரீதேவி, பூதேவி, நீலாதேவி, மகாலக்ஷ்மி, ஸார நாயகி) காட்சி கொடுப்பது சிறந்த விசேஷம். ப்ரளய காலத்தில் இவ்வூரின் கெட்டியான மண்ணைக் கொண்டு ஒரு கடம் செய்து அதில் வேதங்களை வைத்துக் காப்பாற்றப்பட்டதாகப் புராண வரலாறு. புஷ்கரிணி மேற்குக் கரையில் ஒரு ஆஞ்சநேயர் கோயில் உள்ளது. இவர் மிகவும் வரப்ரஸாதி என்று ஸ்தல வரலாறு. ஸாரபுஷ்கரிணியில் நீராடி பெருமாள் தாயாரை வழிபட்டால் எல்லா அபீஷ்டங்களும் நிறைவேறும் என்பதாக ஐதீஹம். நரசிம்மர், ஸ்ரீநிவாஸர், மணவாள மாமுனிகளுக்கு தனித்தனி சந்நிதி. ஈசான்யத்தில் செந்நெறியப்பர் என்ற பெயரில் சாரபரமேச்வரர் சந்நிதி உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1578-87, 1853, 2673 (72), 2674 (115).

மொத்தம் 13 பாசுரங்கள்.

# 16. திருக்கண்ணமங்கை
(க்ருஷ்ண மங்கள க்ஷேத்ரம்)

திருச்சேறையிலிருந்து சுமார் 25 கி.மீ. கும்பகோணத்திலிருந்து சுமார் 40 கி.மீ., திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து வட மேற்கில் 6-7 கி.மீ. கும்பகோணம்-திருவாரூர் பஸ் மூலம் வரலாம். டவுன் பஸ் வசதி உண்டு. குடவாசலிலிருந்தும் வரலாம்.

**மூலவர்:** பக்தவத்ஸலப் பெருமாள், பத்தராவிப் பெருமாள், நின்ற திருக்கோலம், மிகப் பெரிய திருவுருவம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** அபிஷேகவல்லி.

**தீர்த்தம்:** தர்சனபுஷ்கரிணி.

**விமானம்:** உத்பல விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** வருணன், ரோமசமுனி.

**விசேஷங்கள்:** கோயிலுக்கு வேண்டிய விமானம், மண்டபம், அரண்யம், ஸரஸ்ஸு, க்ஷேத்ரம், ஆறு, நகரம் ஆகிய ஏழு அம்சங்களும் அமுதமயமாக இருப்பதால் இதற்கு ஸப்தாம்ருத க்ஷேத்ரம் என்றும் பெயருண்டு. மந்த்ரஜபம் இல்லாவிட்டாலும் ஓர் இரவு இந்த க்ஷேத்திரத்தில் வாஸம் செய்தாலும் மோக்ஷம் கிடைக்கும் என்கிற ஐதீஹம். தாயார் ஸந்நிதியில் ஒரு தேன்கூடு போன்ற அமைப்புக்கு தினந்தோறும் பூஜை நடக்கிறது. இங்குள்ள அருமையான சிற்பங்களில் வைகுண்டநாதன் சிலையும், கருடன் மேல் எழுந்தருளி இருக்கும் மகாவிஷ்ணுவின் சிலையும் மிக அழகானவை.

நாதமுனிகளின் சீடரான திருக்கண்ணமங்கையாண்டான் இவ்வூரில்தான் ஆனித்திருவோணத்தன்று அவதரித்து துளஸி புஷ்பாதி ஸமர்ப்பணத் தொண்டு செய்தார். ஸ்ரீயின் மூன்று திருநாமங்களோடு கூடிய மந்திரம் இந்த க்ஷேத்திரத்தில் ஸித்தியை சீக்கிரத்தில் கொடுக்கும் என்பது புராண வரலாறு. லக்ஷ்மி தவம் செய்ததால் லக்ஷ்மீவனம் என்ற பெயர் உண்டு. சிவபெருமான் இந்த க்ஷேத்திரத்தில் நான்கு உருவங்கள் எடுத்துக்கொண்டு நான்கு பக்கங்களையும் காத்து வருகிறார். பெரிய ஊராகையால் ஸகல ஸௌகர்யங்களும் உண்டு.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1638-47. 1848, 2008, 2673 (71), 2674 (116).

மொத்தம் 14 பாசுரங்கள்.

# 17. திருக்கண்ணபுரம்

(கிருஷ்ணாரண்ய க்ஷேத்ரம், பஞ்சகிருஷ்ண க்ஷேத்ரம், ஸப்த புண்ணிய க்ஷேத்ரம்)

நாகப்பட்டினத்திலிருந்து நன்னிலம் போகும் பஸ்ஸில் திருப்புகலூர் (திருப்புகூர்) என்ற இடத்தில் இறங்கி 2 கி.மீ. போக வேண்டும். நன்னிலம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 7 கி.மீ. தூரம். மாயவரத்திலிருந்து சன்னா நல்லூர் வழியாகத் திருப்புகலூர் வரலாம். இங்கு வசதிகள் ஒன்றும் இல்லை. நன்னிலத்தில் தங்கி ஸேவிக்கலாம். குடவாசலிலிருந்தும் பஸ் வசதி உண்டு.

**மூலவர்:** நீலமேகப் பெருமாள், சௌரிராஜன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** சௌரிராஜப் பெருமாள்.

**தாயார்:** கண்ணபுரநாயகி (ஸ்ரீதேவி, பூதேவி, ஆண்டாள், பத்மினி) தனிக்கோயில் நாச்சியார்.

**தீர்த்தம்:** நித்யபுஷ்கரிணி.

**விமானம்:** உத்பலாவதக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** கண்வமுனிவர், கருடன், தண்டக மஹரிஷி.

**விசேஷங்கள்:** அபயஹஸ்தத்துக்குப் பதிலாக வரதஹஸ்தம் விளங்குகின்றது. ப்ரயோக சக்ரம். உபயநாச்சிமாருக்கு அப்பால், இடதுபுறம் கிரீடத்துடன் ஆண்டாளும், வலதுபுறம் பெருமாள் மணந்துகொண்ட பத்மாவதித் தாயார் என்ற செம்படவ அரசகுமாரியும் உள்ளனர். உத்ஸவப் பெருமாள் கன்யகாதானம் வாங்க கையேந்திய நிலையில் ஸேவையளிக்கிறார். ஸ்ரீமந்நாராயணன் எல்லா அக்ஷரங்களிலும் இந்த க்ஷேத்திரத்தில் ஸாந்நித்யம் செய்கிறபடியால் இது 'ஸ்ரீமதஷ்டாக்ஷர மஹா மந்த்ரஸித்தி க்ஷேத்திரம்' என்ற பெயர் பெற்றது. திருமங்கையாழ்வாருக்கு திருமந்திர உபதேசம் செய்யப்பட்ட ஸ்தலம். ரங்கபட்டர் என்கிற அர்ச்சகர் சோழ அரசனுக்கு, பெருமாளுக்குக் கேசம் வளர்ந்ததைக் காட்டுவதாக வாக்களித்ததை காப்பாற்ற, பெருமாள் திருமுடியில் திருகுழற்கற்றையை வளர்த்துக் கேசத்தைக் காட்டியருளியதால் சௌரிராஜன் என்ற பெயர் உண்டாயிற்று. விபீஷண ஆழ்வாருக்கு ஸ்ரீரெங்கநாதர் அருளியபடி அமாவாசை தினத்தன்று பகவான் நடை அழகை ஸேவை ஸாதித்த ஸ்தலம். பெருமாள் தன் சக்ராயுதத்தால் வீகடாக்ஷன் என்ற துஷ்ட அசுரனை நிக்ரஹம் செய்து மஹரிஷிகள் பிரார்த்தனைப்படி சக்ர

பிரயோக அவஸரமாக ஸேவை ஸாதிக்கும் ஸ்தலம். முனையதரையர் என்ற மஹா பக்திமான் தம்முடைய பத்தினி சமைத்த பொங்கலை அர்த்தஜாமத்திற்குப் பிறகு கோயிலுக்குள் போக முடியாமல் மானஸீகமாக பக்தியுடன் ஸமர்ப்பித்ததை பகவான் திருவுள்ளம் பற்றியதால், மூடிய கோயிலில் மணி ஓசை கேட்டு வெண்பொங்கல் வாஸனை நிரம்பியதால், அதுமுதல் அர்த்தஜாமப் பொங்கல் நிவேதனத்திற்கு "முனியோதரம் பொங்கல்" என்ற பெயர் வரலாயிற்று. இவ்விடத்தில் இன்றைக்கும் தினந்தோறும் வெண்ணெய் உருக்கி, பொங்கல் செய்து பெருமாளுக்கு நிவேதனம் செய்வது விசேஷம். அருகில் திருப்புகலூரில் பாடல்பெற்ற சிவஸ்தலம்.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**பெரியாழ்வார்:** 71

**ஆண்டாள்:** 535

**குலசேகராழ்வார்:** 719-729

**திருமங்கையாழ்வார்:** 1648-1747, 2067, 2078, 2673 (72), 2674 (90, 133)

**நம்மாழ்வார்:** 3656-3666

மொத்தம் 128 பாசுரங்கள்.

## 18. திருக்கண்ணங்குடி
(க்ருஷ்ணாரண்ய க்ஷேத்திரம்)

திருவாரூருக்கு 14 கி.மீ. கிழக்கு. நாகப்பட்டினத்திலிருந்து திருவாரூர் பஸ் வழியாக சிக்கிலுக்கும் கீவளூருக்கும் இடையேயுள்ள ஆழியூர் என்ற இடத்தில் இறங்கி அங்கிருந்து 1 கி.மீ. தூரம் நடந்தோ வண்டியிலோ செல்லலாம். தஞ்சாவூர்-கீவளூர் ரயில் பாதையிலுள்ள கீவளூர் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 3 கி.மீ. தூரம் சென்றும் அடையலாம். இங்கு வசதிகள் ஒன்றும் இல்லை.

**மூலவர்:** லோகநாதன், ச்யாமளமேனிப் பெருமாள், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** தாமோதர நாராயணன் (இடது கரம் இடுப்பில் வைத்து).

**தாயார்:** லோகநாயகி. உத்ஸவர்: அரவிந்தவல்லி:

**தீர்த்தம்:** ச்ரவண புஷ்கரிணி (நித்ய புஷ்கரிணி என்றும் பெயர்). எட்டு தீர்த்தக்கிணறுகள் உள்ளன.

**ஸ்தல வ்ருக்ஷம்:** மகிழமரம் (வகுளம்).

**விமானம்:** உத்பல விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ருகு, ப்ருஹ்மா, உபரிசரவஸு, கௌதமர், திருமங்கையாழ்வார்.

**விசேஷங்கள்:** 'காயாமகிழ், உறங்காப்புளி, தேறாவழக்கு, ஊறாக்கிணறு திருக்கண்ணங்குடி' என்பது பழமொழி. இவற்றில் முக்கிய அடையாளங்களான ஊறாக்கிணறும், உறங்காப்புளியும் இப்போது இல்லை. காயாமகிழ் (காய்ந்து பட்டுப்போகாத வரம் பெற்ற ஸ்தலவ்ருக்ஷம்) ஸந்நிதியின் பின்புறம் இருக்கிறது.

தாயார் ஸந்நிதியில் மூலவரும் உத்ஸவரும் ஒரே முகஜாடையுடனிருப்பது வேறெங்கும் காணமுடியாத அதிசயம். வஸிஷ்டர் தம் பக்தியால் வெண்ணெய் மயமான க்ருஷ்ணனை இளகி, த்ரவமாகாமல் கட்டி, திவ்யமங்கள விக்ரஹம் செய்து, த்யானம் செய்வார். இப்படி வெகு காலம் கடந்தபின், ஒரு நாள் பகவான், கோபாலன் உருவம்கொண்டு, வஸிஷ்டர் ஆராதனம் செய்யும் வெண்ணெய்க் கண்ணனை அமுது செய்ததைப் பார்த்து கோபாலனைப் பிடிக்க ஓட, கோபாலனும் மேற்கு திசை நோக்கி ஓட, மகிழ மரத்தடியில் தவம் செய்துகொண்டிருந்த மஹரிஷிகள் பக்தியாகிய பாசக் கயிற்றால் கட்டியதால், கட்டுண்டு கோயில்கொண்டு கண்ணன் எழுந்தருளியதால், திருக்கண்ணங்குடி என்ற பெயர் உண்டாயிற்று.

திருமங்கையாழ்வார், நாகப்பட்டினத்திலிருந்து தங்கமயமான புத்த விக்ரஹத்தை ரங்கநாதன் கோபுரம் பிராகாரங்கள் முதலிய திருப்பணிகளை செய்ய கொண்டுவந்து புதைத்து, பகவான் அருளால் எடுத்துச்சென்ற ஸ்தலம் இது. பெருமாளுக்கு திருநீரணி உத்ஸவம் என்று ஒன்று நடக்கிறது. மற்ற சந்நிதிகள் தவிர, ராமர், ஹனுமான், திருமங்கையாழ்வார், மதுரகவிக்கு தனி சந்நிதிகள்.

அருகிலுள்ள மற்ற பிரபல கோயில்: சிக்கிலில் ஸ்ரீசிங்காரவேலன் திருக்கோயில் ப்ரஸித்தமானது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1748 - 57 — 10 பாசுரங்கள்.

# 19. திருநாகை (நாகப்பட்டினம்)

இங்கு வசதிகள் இருந்தும், அதிக ஸ்தலங்கள் அருகில் இல்லாததால் மாயவரத்தையே மைய இடமாகக் கொள்வது நல்லது. மாயவரத்திலிருந்து பஸ்ஸில் வந்து இறங்கினால் பஸ் நிலையத்திற்கு எதிர்த்தெருவிலேயே சற்று தூரத்தில் நன்கு நிர்வஹிக்கப்படும், அழகிய, பெரிய கோயில் (நாகப்பட்டினம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து சுமார் 2 கி.மீ. மைல் தூரத்தில்) உள்ளது.

**மூலவர்:** நீலமேகப் பெருமாள் - கதையுடன் நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** ஸௌந்தர்யராஜன்.

**தாயார்:** ஸௌந்தர்யவல்லி. உத்ஸவத்தாயார் கஜலக்ஷ்மியாகக் காட்சியளிக்கிறார்.

**தீர்த்தம்:** ஸாரபுஷ்கரிணி.

**விமானம்:** ஸௌந்தர்ய விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** நாகராஜன், திருமங்கையாழ்வார், கலியன், ப்ரஹ்மாதிகள்.

**விசேஷங்கள்:** வீற்றிருந்த பெருமாளாக கோவிந்தராஜனுக்கும், சயனத் திருக்கோலத்தில் ரங்கநாதனுக்கும் இரு ஸந்நிதிகள். வேறு பல ஸந்நிதிகளும் உண்டு. ரங்கநாதன் ஸந்நிதியில் மிக அபூர்வமான அஷ்டபுஜ நரஸிம்ஹரின் வெண்கலச்சிலை உள்ளது. ஒருகை பிரஹ்லாதன் தலையைத் தொட்டும் மற்றொரு கை அபயஹஸ்த மாகவும் விளங்குகின்றன. மற்ற கைகள் ஹிரண்யவதம் செய்கின்றன. இந்த க்ஷேத்ரம் துருவனுக்கு ஸேவை தந்த அவஸரத்தில் தோன்றியதாக கூறப்படுகிறது. பக்கத்தில் திருநள்ளாறு மற்றும் சில சிறு அழகிய கோயில்கள் உள்ளன.

கொத்தமங்கலம் சுப்புவின் 'தில்லானா மோகனாம்பாள்' தொடர் நாகையையும், திருவாரூரையும், சிக்கிலையும் மையமாகக் கொண்டுள்ளது. பாடல் பெற்ற நாகைக்காரோணம் (காயாரோகணேச்வரர்) கோயில் அருகில் உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1758 - 67 - 10 பாசுரங்கள்.

# 20. திருத்தஞ்சை மாமணிக் கோயில் (தஞ்சாவூர்)

தஞ்சாவூர் ஜங்ஷனிலிருந்து 4 கி.மீ. தூரத்தில் வெண்ணாற்றங் கரையில் உள்ளன இந்த மூன்று திருக்கோயில்கள். இதற்கு அருகாமையில் ஒரே ஒரு திவ்ய தேசம்தான் இருப்பதால் மைய இடமான கும்பகோணத்திலிருந்து வந்து ஸேவிக்கலாம். கும்பகோணம்-தஞ்சாவூர் பஸ்ஸில் வரும்போது தஞ்சை ஊர் எல்லையில் வெண்ணாற்றங்கரையில் இறங்கிக் கொள்ளலாம். தஞ்சையிலிருந்தும் டவுன் பஸ்ஸில் வரலாம். மூன்று கோயில்கள் சேர்ந்து ஒரு திவ்ய தேசமாகப் பாடல் பெற்றுள்ளன, மூன்றும் அருகருகே உள்ளன.

## 1. தஞ்சை மாமணிக் கோயில்

**மூலவர்:** நீலமேகப்பெருமாள், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** செங்கமலவல்லி.

**தீர்த்தம்:** அம்ருத தீர்த்தம், கன்னிகாபுஷ்கரிணி, வெண்ணாறு.

**விமானம்:** ஸௌந்தர்ய விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** பராசரமுனி.

## 2. மணிக்குன்றம்

**மூலவர்:** மணிக்குன்றப்பெருமாள், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** அம்புஜவல்லி.

**தீர்த்தம்:** ஸ்ரீராம தீர்த்தம்.

**விமானம்:** மணிக்கூட விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** மார்க்கண்டேயர்.

**குறிப்பு:** திவ்யப் பிரபந்தம் ஸேவிக்கக்கூடாத அனத்யயன காலத்தில், தேசிகப் பிரபந்தத்தை எல்லா திவ்ய தேசங்களிலும் ஸேவிக்க வேண்டும் என்று நயினாராசார்யர் ஸ்வாமி நியமித்த திவ்யதேசம்.

### 3. தஞ்சையாளி நகர்

**மூலவர்:** நரஸிம்மன், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** தஞ்சை நாயகி.

**தீர்த்தம்:** ஸூர்ய புஷ்கரிணி, ஸ்ரீராமதீர்த்தம்.

**விமானம்:** வேதஸுந்தர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** மார்க்கண்டேயர்.

மூன்று கோயில்களிலும் உத்ஸவர் பெயர் ஸ்ரீமந் நாராயணன் தான்

**விசேஷம்:** பகவான் தஞ்சக யானையைப் பிளக்க நரஸிம்மாவதாரம் எடுத்து நகங்களால் குத்திக் கிழித்தபோது, தஞ்சகன் வேண்டிக் கொண்டபடி நரஸிம்ம உருவத்தோடு ஸேவை ஸாதிப்பதால் தஞ்சாபுரி அல்லது தஞ்சை என்ற பெயர் உண்டாயிற்று. தஞ்சையைப் பார்த்தபடி விக்ரஹங்கள் அமைந்திருப்பதால், 'தஞ்சையைக் காத்தருளும் தெய்வம்' என வழங்கப்படுகிறது.

**குறிப்பு:** மூன்று ஸந்நிதிகளுக்கும் ஒரே அர்ச்சகர் ஆனபடியால் வெண்ணாற்றங்கரையில் உள்ள அவர் க்ருஹத்தில் அவரை ஸந்தித்தால் இரவைத் தவிர மற்ற வேளைகளில் ஸேவை செய்து வைப்பார். முன் ஏற்பாடு செய்வது நல்லது. அருகில் தஞ்சாவூரில் ப்ரகதீஸ்வரர் கோயில், காமாட்சியம்மன், மாரியம்மன் கோயில்களும் ப்ரஸித்தம்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 953, 1090, 1576

**பூதத்தாழ்வார்:** 2251

**நம்மாழ்வார்:** 3139

மொத்தம் 5 பாசுரங்கள்.

## 21. திருநந்திபுர விண்ணகரம்

**(நாதன் கோயில்,** தக்ஷிண ஜகந்நாதம், ஸ்ரீனிவாஸஸ்தலம்)

கும்பகோணத்திலிருந்து பஸ்ஸில் கொருக்கை என்ற ஊருக்கு வந்து அங்கிருந்து 2.5 கி.மீ. தூரம் செல்ல வேண்டும். வழியில் ஒரு வாய்க்காலைக் கடக்க வேண்டும். டவுன் பஸ்ஸிலோ,

வண்டியிலோ (மினி பஸ்கள்) கும்பகோணத்திலிருந்து வரலாம். (Pincode 612 703).

**மூலவர்:** ஜகந்நாதன், நாததாதன், விண்ணகரப் பெருமாள், ஸ்ரீனிவாசன், வீற்றிருந்த திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** செண்பகவல்லித் தாயார்.

**தீர்த்தம்:** நந்திதீர்த்த புஷ்கரிணி.

**விமானம்:** மந்தார விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** நந்தி, சிபி சக்ரவர்த்தி, மார்க்கண்டேயர்.

**விசேஷம்:** ஸந்நிதியின் இடது பக்கச் சுவற்றில் அதிகார நந்தி இருக்கிறார். நந்தி இவ்விடத்தில் தவம் செய்து சாபவிமோசனம் பெற்ற ஸ்தலமாதலால் 'நந்திபுரம்' என்றும் பகவானுக்கு 'நந்திநாதன்' என்றும் பெயர் உண்டாயிற்று. நந்திவர்மன் ஏற்படுத்திய ஊர் என்றும் அவன் கட்டிய கோயில் என்றும் இதனைக் கூறுவர். 'நந்தி பணி செய்த நகர்' என்றார் திருமங்கையாழ்வார். இதே காரணத்துக்காகப் புஷ்கரிணிக்கும் நந்தி புஷ்கரிணி என்றே பெயர். பாபவிமோசனத்துக்குத் தை அமாவாசையன்று இங்கே ஸ்நானம் செய்யலாம் என்று நம்பிக்கை.

சிபி சக்கரவர்த்தி தன் உயிரைத் துறந்து புறாவின் உயிரைக் காப்பாற்ற தராசுத் தட்டில் தன் மாமிசத்தை வைத்து சமமாகாமல் இருக்க, தானே, புறாவின் எடைக்கு சமமாக எதிர்த்தட்டில் உட்கார்ந்த அதிசயத்தைக் காண, கிழக்கே இருந்த பெருமாள் மேற்கு முகமாக ஆனார்.

நாச்சியாருக்கும் ஆஞ்சநேயருக்கும் தனி சந்நிதிகள் உள்ளன. குழந்தைப் பேறுக்காக ஐப்பசி சுக்லபக்ஷத்தில் தாயாருக்குத் திருமஞ்சனை செய்கிறார்கள்.

இந்த ஸந்நிதி வானமாமலை மடத்து ஆதினத்தில் உள்ளது. அருகில் உள்ள மற்ற ப்ரபல கோயில்கள்: பட்டீஸ்வரம், திருபுவனம், அய்யாவாடி (பிரத்யங்கரா) கல்கியின் "பொன்னியின் செல்வ"னில் அடிக்கடிக் குறிப்பிடப்படும் பழையாறை அருகில் உள்ளது.

**விசேஷக் குறிப்பு:** இக்கோயிலின் அர்ச்சகர் வெளியூர்களுக்கும் சென்று கைங்கர்யம் செய்வதால், மாலை விளக்கேற்றும் நேரத்தில் செல்வது நல்லது.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1438 - 47 - 10 பாசுரங்கள்.

# 22. திருவெள்ளியங்குடி (வெள்ளியங்குடி)

கும்பகோணம் (அ) திருப்பனந்தாளிலிருந்து அணைக்கரை செல்லும் பஸ்ஸில் சேங்கானூரில் இறங்கி 1 கி.மீ. நடந்து திருவெள்ளியங்குடி செல்ல வேண்டும். முட்டக்குடியில் இறங்கியும் வண்டியிலும் வரலாம். கும்பகோணத்திலிருந்து டவுன் பஸ்களும் சேங்கானுருக்கும், கோயில் அருகிலும் இப்போது செல்கின்றன.

**மூலவர்:** கோலவில்லி ராமன், புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** ச்ருங்கார ஸுந்தரன்.

**தாயார்:** மரகதவல்லி.

**தீர்த்தம்:** சுக்ர தீர்த்தம், ப்ரஹ்ம தீர்த்தம், இந்த்ர தீர்த்தம், பரசுராம தீர்த்தம்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** கதலீ (வாழை) வ்ருக்ஷம்.

**விமானம்:** புஷ்கலாவர்த்தக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சுக்ரன், ப்ரஹ்மா, இந்த்ரன், பரசுராமன், மயன், மார்க்கண்டேயர், பூமிதேவி.

**விசேஷங்கள்:** பஸ் வசதிக் குறைவால் அதிகக் கவனிப்பின்றி இருக்கும் இந்தக் கோயிலை ஸேவிப்பது 108 திவ்ய தேசங்களையும் ஸேவித்த பலனைத் தரும் என்று நம்பப்படுகின்றது. இங்குள்ள கருடாழ்வார் சிலையின் கைகளில் சங்கு சக்ரங்கள் உண்டு. சமீபத்தில் இந்தக் கோயில் ஸம்ப்ரோக்ஷணம் ஸ்ரீரங்கம் பெரியாச்ரமம் ஆண்டவனால் நடைபெற்றது. வழியில் உள்ள சேங்கானூர்தான் பெரியவாச்சான் பிள்ளையினுடைய அவதாரஸ்தலமாகும்.

வெள்ளியார் (சுக்கிரன்) வணங்க அருள் செய்தவர் இப்பெருமாள். இதனால் வெள்ளியங்குடி என்று பெயர் பெற்றது.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1338 - 47 - 10 பாசுரங்கள்.

# 23. திருவழுந்தூர் (தேரழுந்தூர்)

மாயவரத்திலிருந்து தென்மேற்கே 21 கி.மீ. டவுன் பஸ்ஸில் போகலாம். அஹோபில மடம் உண்டு. கும்பகோணத்திலிருந்து மாயவரம் போகும் பஸ்ஸிலும் போகலாம்; அவ்வளவு ஸௌகரியம் இராது.

**மூலவர்:** தேவாதிராஜன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுகமண்டலம், இடதுபுறம் கருடாழ்வாரும் வலதுபுறம் பிரஹ்லாதாழ்வானும் இருக்கிறார்கள். இடது கையில் ஊன்றிய கதை. இடதுபுறம் காவேரித்தாய் மண்டியிட்டு ஸேவிக்கிறாள்.

**உத்ஸவர்:** உபய நாச்சியாருடன் ஆமருவியப்பன். அருகில் பசுங்கன்று எல்லையற்ற அழகு.

**தாயார்:** செங்கமலவல்லி.

**தீர்த்தம்:** தர்சனபுஷ்கரிணி, காவேரி.

**விமானம்:** கருட விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** தர்மதேவதை, உபரிசரவஸு, காவேரி, கருடன், அகஸ்தியர்.

**விசேஷங்கள்:** கோபுரத்தின் உட்புறம் கம்பனும் அவர் மனைவியும் சிலை வடிவில் நிற்கின்றனர். எதிரில் தெளிந்த நீருடன் பெரிய புஷ்கரிணி. இது கம்பன் அவதார ஸ்தலம். கோயிலுக்குச் சற்று தென்மேற்கே 'கம்பன் மேடு' என்ற இடத்தில் கவிச்சக்ரவர்த்தி கம்பன் வாழ்ந்ததாக நம்பப்படுகிறது. வருடம் தோறும் கம்பன் விழா நடைபெறுகிறது. மணவாள மாமுனிகள் மங்களாசாஸனம் செய்த பெருமாள் இவர். இதற்கு அருகிலுள்ள வேறொரு கோயிலைப் பாடல் பெற்ற ஸ்தலம் என்றும் கூறுகின்றனர்.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1588-1627, 1854, 2066, 2077, 2673 (72), 2674 (123).

மொத்தம் 45 பாசுரங்கள்.

# 24. திருச்சிறுபுலியூர் (சிறுபுலியூர்)

மாயவரம்-திருவாரூர் ரயில் பாதையில், கொல்லுமாங்குடி ஸ்டேஷனிலிருந்து 3 கி.மீ. மாயவரத்திலிருந்து டவுன் பஸ்ஸில் கொல்லுமாங்குடி போகலாம். இங்கு வசதிகள் ஒன்றுமில்லை. மாயவரத்தில் தங்கி ஸேவிப்பது நலம்.

**மூலவர்:** அருள்மாகடல், சலசயனப்பெருமாள், புஜங்கசயனம், தெற்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** க்ருபா ஸமுத்ரப் பெருமாள் (அருள்மாகடல்).

**தாயார்:** திருமாமகள் நாச்சியார். உத்ஸவர்: தயாநாயகி.

**தீர்த்தம்:** மானஸ புஷ்கரிணி, அனந்தஸரஸ்.

**விமானம்:** நந்தவர்த்தன விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** வியாஸர், வியாக்ரபாதர்.

**விசேஷம்:** புஜங்கசயனத்திலேயே மிகச் சிறிய திருவுருவம் இது. இதைப்பற்றி ஆழ்வார் குறைப்பட "உமது குறைதீர நமது மிகப் பெரிய திருவுருவைத் திருக்கண்ணமங்கையில் காணும்" என்று பெருமாள் அருளிச்செய்ததாக ஒரு வரலாறு கூறுகிறது. அனந்தனுக்கு (ஆதிசேஷன்) கருடனிடமிருந்து அபயமளித்த ஸ்தலம்.

வியாக்ரபாதர் புலிக்கால்களையும், கைகளையும், கண்களையும் சிவபெருமானைத் தவம் செய்து பெற்று, சிவன் ஆக்ஞைப்படி இவ்விடத்தில் பெருமாளைப் பூஜித்து வைகுண்டம் அடைந்த படியால், இந்த ஸ்தலத்திற்கு 'சிறுபுலியூர்' என்று பெயர் வந்தது. அவருடைய பிம்பத்தை பெருமாளின் திருவடிக்கீழ் பிரதிஷ்டை செய்து பூஜிக்கும் வழக்கம் இங்கே உள்ளது. ஸந்நிதியில் சொல்லிவைத்தால் ப்ரஸாதம் கிடைக்கும்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1628 - 37 - 10 பாசுரங்கள்.

## 25. திருத்தலைச்சங்க நாண்மதியம் (தலைச்சங்காடு)

மாயவரத்திலிருந்து ஆக்கூர் போய் அங்கிருந்து சீர்காழி செல்லும் பஸ் சாலையில் 3 கி.மீ. சென்று இவ்வூரை அடையலாம். ஆக்கூரிலிருந்து டவுன் பஸ் உண்டு. சீர்காழியிலிருந்தும் பஸ்ஸில் ஆக்கூர் வரலாம். பூம்புகார் - மேலையூர் வழி. மாயவரம்-தரங்கம்பாடி ரயில் பாதையில் ஆக்கூர் ஒரு ஸ்டேஷனாகும். இவ்வூரில் வசதிகள் ஒன்றுமேயில்லை. தலைச்சங்காடு என்றால்தான் தெரியும். தலைச்சங்காட்டிலிருந்து மண்சாலை வழியாகச் சற்று தூரத்தில் வயலுக்கு நடுவே இக்கோயில் உள்ளது. (தலைச்சங்காடு P.O., தரங்கம்பாடி).

**மூலவர்:** நாண்மதியப் பெருமாள், வெண்சுடர்ப் பெருமாள், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** வியோமஜோதிப்பிரான், வெஞ்சுடர்பிரான், லோகநாதன்.

**தாயார்:** தலைச்சங்க நாச்சியார். உத்ஸவர்: செங்கமலவல்லித் தாயார்.

**தீர்த்தம்:** சந்த்ரபுஷ்கரிணி.

**விமானம்:** சந்த்ர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சந்த்ரன், தேவப்ருந்தங்கர், தேவர்கள், நித்ய ஸூரிகள்.

**விசேஷங்கள்:** ஸ்ரீ ஸுந்தர ராமாநுஜதாஸரின் முயற்சியால் இக்கோயில் புதுப்பிக்கப்பட்டுத் தாயார் ஸந்நிதியும் கட்டப்பட்டுள்ளது. இங்குள்ள ஆண்டாளின் விக்ரஹம் சிறிய திருமேனியுடையதாயினும் தலைசிறந்த அழகு வாய்ந்தது. அருகில் (சம்பந்தரால்) பாடல் பெற்ற சங்கருணாகேஸ்வரர் கோயில் உள்ளது.

<u>**மங்களாசாஸனம்:**</u>

**திருமங்கையாழ்வார்:** 1736, 2674 (134) - 2 பாசுரங்கள்.

# 26. திருஇந்தளூர்
## (மயிலாடுதுறை, திருவிழந்தூர்)

இது மாயவரம் முனிஸிபாலிட்டியிலேயே ஒரு பகுதி. டவுன் பஸ்ஸில் போகலாம். காவேரிக்கு அக்கரை.

**மூலவர்:** பரிமள ரங்கநாதன், மருவினிய மைந்தன் என்றும் திருநாமம், சுகந்தவன நாதன், வீரசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பரிமள ரங்கநாயகி, சந்த்ரசாப விமோசனவல்லி, புண்டரீகவல்லி என்ற பெயர்கள்.

**தீர்த்தம்:** இந்து புஷ்கரிணி.

**விமானம்:** வேதசக்ர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சந்த்ரன்.

**விசேஷங்கள்:** சயனத் திருக்கோலத்தில் 4 புஜங்கள் உள்ளன. தலைமாட்டில் காவேரித்தாயாரும், கால்மாட்டில் கங்கைத்தாயாரும் அமர்ந்திருக்கின்றனர். ஐப்பசி மாதம் முழுவதும் இங்கே விழாக்கோலம் பூண்டு இருக்கும். காவேரியும் சமுத்திரமும் சங்கமம் ஆகும் இடத்தில் கடைமுக ஸ்நானம், "முடவன் முழுக்கு" ஸ்நானம் மிகவும் விசேஷம். இந்தியாவின் எல்லா பாகங்களிலிருந்தும் இந்த உற்சவத்திற்கு யாத்ரீகர்கள் வந்து செல்வது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

இந்த ஸ்தலம் குழந்தைப் பேறுக்கு பிரார்த்தனை ஸ்தலமாக பிரபலம். முத்துசுவாமி தீட்சிதரும் இப்பெருமாள் பெயரில் கீர்த்தனைகள் இயற்றியுள்ளார், இவ்வூரில் மாயூரநாதர் கோயிலும், அருகில் மூவலூர், திருவிளநகர், குற்றாலம், திருவாடுதுறை முதலிய கோயில்கள் உள்ளன.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1328-1337, 2674 (126) - 11 பாசுரங்கள்.

## 27. திருக்காவளம்பாடி (திருநாங்கூர்)

சென்னை-மாயூரம் ரயில் பாதையில் வைத்தீசுவரன் கோயில் ரயில் நிலையத்திலிருந்து 8 கி.மீ. தூரத்தில் இருக்கிறது. சீர்காழி ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 10 கி.மீ. சீர்காழியிலிருந்தும், திருவெண்காட்டிலிருந்தும் பஸ்ஸில் வரலாம். திருநகரியிலிருந்து வண்டிப்பாதை உள்ளது. இங்கு வசதிகள் இல்லை.

**மூலவர்**: கோபாலக்ருஷ்ணன் (ராஜகோபாலன்) ருக்மணீ ஸத்யபாமாவுடன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்**: மடவரல் மங்கை, செங்கமல நாச்சியார். நாச்சியார் ஸந்நிதி இல்லை.

**தீர்த்தம்**: தடமலர்ப்பொய்கை.

**விமானம்**: ஸ்வயம்பு விமானம்.

**ப்ரத்யக்ஷம்**: சேனைத் தலைவர், ருத்ரன்.

**விசேஷங்கள்**: திருமங்கையாழ்வார் அவதாரஸ்தலமான திருக்குறையலூர், மங்கை மடம், இரண்டும் இத்தலத்திற்கு மிக அருகாமையில் உள்ளன. தை அமாவாசைக்கு மறுநாள் திருநாங்கூரில் நடக்கும் கருடஸேவை வைபவத்தில் இந்த ஊர் பெருமாளும் கருடவாஹனத்தில் எழுந்தருளுவார்.

**குறிப்பு**: தற்சமயம் அர்ச்சகர் நாங்கூரில் வண்புருடோத்தம ஸந்நிதி தெருவிலிருந்து (கதவு எண் 4/85) வருகிறார். ஸேவைக்கு அவருடன் முன்கூட்டி தொடர்பு கொள்வது நல்லது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்**: 1298-1307 - 10 பாசுரங்கள்.

## 28. திருக்காழிச்சீராம விண்ணகரம் (சீர்காழி)

சீர்காழி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 1 கி.மீ. தூரத்திலுள்ளது. பஸ்ஸில் சென்றால் கோயில் ஸந்நிதி வாசலிலேயே இறங்கலாம். பெரிய டவுன். ஸகல வசதிகளும் உண்டு.

**மூலவர்**: த்ரிவிக்ரமன், **தாடாளன்**, உலகளந்த திருவுருவம், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** த்ரிவிக்ரம நாராயணன்.

**தாயார்:** மூலவர்: லோகநாயகி, உத்ஸவர்: மட்டவிழ்குழலி.

**தீர்த்தம்:** சங்கபுஷ்கரிணி, சக்ரதீர்த்தம்.

**விமானம்:** புஷ்கலாவர்த்த விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** அஷ்டகோண மஹர்ஷி.

**விசேஷங்கள்:** பெருமாள் இடதுகாலைத் தூக்கி விண்ணை அளக்கிறார். இவ்வூரில் திருமங்கையாழ்வார் திருஞானஸம்பந்தரை வாதில் வென்று அவருடைய வெற்றி வேலைப் பரிசு பெற்றதுடன் "கடியுண்டநெடுவாளை" என்ற ஓர் அழகிய பாடலாலும் புகழப் பெற்றார். நாலுகவிப் பெருமாள் என்ற விருதையும் பெற்றார்.

செல்வ தெய்வநாயகன் ஸந்நிதியும் இங்கே உள்ளது.

ப்ருஹ்மாவுக்கு தன் ஆயுளைப்பற்றி கர்வம் ஏற்பட்டபொழுது, ரோமசமுனிவர் "உன் ஆயுசும் என் ஒரு ரோமமும் ஸமம்" என்று சொல்லி அவர் கர்வத்தை அடக்கின ஸ்தலம்.

மணவாள மாமுனிகள் மங்களாசாஸனம் பெற்றவர் தாடாளன்.

(நாங்கூர் 11 திவ்யதேசங்கள் தவிர) அருகிலுள்ள மற்ற கோயில்கள் / இடங்கள்: வைத்தீஸ்வரன் கோயில், திருவெண்காடு (புதன்), கீழப்பெரும்பள்ளம் (கேது), பட்டினத்தார் அவதரித்த பல்லவனம், பூம்புகார், சிலப்பதிகாரத்தில் புகழப்பட்ட பத்தினிக்கோட்டம்.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1178-1187 - 10 பாசுரங்கள்.

## 29. திருஅரிமேய விண்ணகரம்
(திருநாங்கூர்)

சீர்காழி ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கே 8 கி.மீ. தொலைவில் திருநாங்கூருக்குள்ளேயே உள்ளது. குடமாடுகூத்தர் கோயில் என்றுதான் பலருக்குத் தெரியும். (Pincode 609 106). சீர்காழியிலிருந்து டவுன் பஸ் வசதி உண்டு.

**மூலவர்: குடமாடுகூத்தன்** (தைலக்காப்புத் திருமேனி), வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** சதுர்புஜங்களுடன் கோபாலன்.

**தாயார்:** அம்ருதகடவல்லி.

**தீர்த்தம்:** கோடிதீர்த்தம், அம்ருத தீர்த்தம்.

**விமானம்:** உச்சச்ருங்க விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** உதங்க முனிவர்.

**விசேஷம்:** தை மாதம் அமாவாசைக்கு மறு நாள் கருடஸேவை மிக விசேஷம், (எண் 31 இல் விவரம் காண்க.)

அருகிலுள்ள வேறு கோயில்கள்: கீழவீதியில் மதங்கீசுவரர் கோயில் உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1238-1247 - 10 பாசுரங்கள்.

## 30. திருவண்புருடோத்தமம்

(திருநாங்கூர்)

இந்த ஸ்தலமும் சீர்காழியிலிருந்து 8 கி.மீ. தூரத்தில் திருநாங்கூரிலேயே உள்ளது. பஸ் வசதி உண்டு. (Pincode 609 106).

**மூலவர்: புருஷோத்தமன்,** நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** புருஷோத்தம நாயகி.

**தீர்த்தம்:** திருப்பாற்கடல் தீர்த்தம்.

**விமானம்:** ஸஞ்ஜீவிவிக்ரஹ விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** உபமன்யு.

**விசேஷம்:** உத்ஸவப் பெருமாளின் திருவுருவம் மிக அழகியது. தை அமாவாசைக்கு மறுநாள் நடக்கும் கருடஸேவை மிக விசேஷம். ஸ்ரீ மணவாள மாமுனிகள், பிரதிவாதி பயங்கரம் அண்ணன் மங்களாசாஸனம் செய்த இடம்.

**குறிப்பு:** திருமணிமாடக் கோயில், திருஅரிமேய விண்ணகரம், திருத்தெற்றியம்பலம், திருவண்புருடோத்தமம் - இந்நான்கும்

திருநாங்கூரின் ஒரே தெருவின் பக்கங்களில் உள்ளன. உத்ஸவத்தின் போது வரும் யாத்ரீகர்களுக்கு இங்கே பிரஸாதம் கொடுக்கிறார்கள்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1258-67 - 10 பாசுரங்கள்.

## 31. திருசெம்பொன்செய் கோயில்

(திருநாங்கூர்)

இதுவும் சீர்காழியிலிருந்து 8 கி.மீ. தூரத்தில் திருநாங்கூரிலேயே உள்ளது. பஸ் வசதி உண்டு. (Pin 609 106).

**மூலவர்:** பேரருளாளன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுகமண்டலம்.

**உத்ஸவர்:** ஹேமரங்கர். செம்பொன்னரங்கர்.

**தாயார்:** அல்லிமாமலர் நாச்சியார்.

**தீர்த்தம்:** நித்யபுஷ்கரிணி, கனகதீர்த்தம்.

**விமானம்:** கனக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ருத்ரன்.

**விசேஷங்கள்:** ராவண வதத்திற்குப் பிறகு, ராமன் இந்த ஸ்தலத்தில் த்ருடநேத்ரர் என்ற முனிவர் ஆச்ரமத்தில் தங்கி அவர் சொல்லியபடி தங்கத்தில் பசு செய்து அதில் மூன்று நாட்கள் தங்கி ஒரு பிராஹ்மணனுக்கு தானம் செய்து, அதைக் கொண்டு அந்த பிராஹ்மணன் இந்தக் கோயிலைக் கட்டியபடியால், செம்பொன் செய்கோயில் என்ற பெயர் ஏற்பட்டது. சிவபெருமான் ப்ரஹ்ம ஹத்யா தோஷத்திலிருந்து விடுபட "ஏகாதசருத்ர" அச்வமேதத்தை செய்து பூர்ணாஹுதி ஸமயத்தில் பகவான் ஸ்ரீபூநீளை ப்ருஹ்மாதிதேவர்களுடன் சங்கரனுக்கு ஸேவை ஸாதித்த போது, ருத்ரன் பிரார்த்தனைப்படி விஷ்ணு பதினோரு ரூபத்துடன் ருத்திரனுடன் நித்யவாஸம் செய்துகொண்டு பக்தர்களின் அபீஷ்டத்தை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார் என்பது வரலாறு. இதை முன்னிட்டு தை மாதம் அமாவாசை கழிந்த மறுநாள் ராத்திரி 11 திவ்ய தேச எம்பெருமான்களும் திருமணிமாடத்திலிருந்து தொடங்கி 11 கருடவாஹனங்களில் எழுந்தருளி (பிரதக்ஷிணமாய் ஆழ்வார் மங்களாசாஸனம் பெற்று) திருநாங்கூரில் 11 கருடஸேவை உத்ஸவம் மிக சிறப்பாக வருடாவருடம் நடைபெற்று வருகிறது. திருநாங்கூர்

11 திவ்ய தேசங்களும் ருத்திரன் பூஜிப்பதற்காக ஏற்பட்டவை. காஞ்சிபுரத்தில் காச்யபன் என்ற அந்தணனின் மூத்த மகன் முகுந்தன், தன் தகப்பனார் வறுமையைப் போக்க இந்த ஸ்தலத்திற்கு வந்து பெருமாள் உபதேசித்த அஷ்டாக்ஷரத்தை மூன்று நாளில் முப்பத்து இரண்டாயிரம் தடவை ஜபம் செய்து பெருமாளின் திருவருளால் செல்வம் பெற்றான்.

**குறிப்பு:** காலை 9 மணிக்குள்ளும், மாலை 5லிருந்து 7 மணிக்குள்ளும் ஸேவிக்கலாம்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1268-1277 - 10 பாசுரங்கள்.

## 32. திருமணிமாடக்கோயில்

(திருநாங்கூர்)

சீர்காழியிலிருந்து சுமார் 8 கி.மீ. தூரத்தில் திருநாங்கூருக் குள்ளேயே உள்ளது. திருநாராயணப் பெருமாள் கோயில் என்று ப்ரஸித்தம். தங்குவதற்கு ராமாநுஜகூடம் உண்டு. உணவு வசதிகளைக் கோயில்களில்தான் ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். சீர்காழியிலிருந்து டவுன் பஸ் வசதிகள் உண்டு.

**மூலவர்: நாராயணன்,** நந்தாவிளக்கு, வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** 1. நாராயணன், 2. அளத்தற்கரியான் என்று வீற்றிருக்கும் மற்றொரு உத்ஸவரும் உண்டு.

**தாயார்:** புண்டரீகவல்லித் தாயார்.

**தீர்த்தம்:** இந்த்ர புஷ்கரிணி, ருத்ர புஷ்கரிணி.

**விமானம்:** ப்ரணவ விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** இந்த்ரன், ஏகாதச ருத்ரர்கள்.

**விசேஷங்கள்:** தை அமாவாசைக்கு மறுநாள் திருநாங்கூரில் 11 கருடஸேவை நடக்கும். திருநாங்கூரைச் சேர்ந்த 11 திவ்யதேசத்துப் பெருமாள்களும் கருட வாஹனங்களில் எழுந்தருளுவார்கள். திருநகரியிலிருந்து திருமங்கையாழ்வார் தமது தர்ம பத்தினி குமுதவல்லியுடனும், அவர் ஆராதித்த பெருமாள், உபய நாச்சியாருடனும் பல்லக்கில் எல்லாத் திவ்யதேசங்களுக்கும்

(11 க்ஷேத்ரங்கள்) வயல் வழியில் இறங்கி பயிரை மிதித்துக்கொண்டு, ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் மங்களாசாஸனம் செய்து திருவந்திக் காப்பு ஆகும். தை அமாவாசைக்கு மறுநாள் நாராயணப் பெருமாள் கோயில் வாசலில் 11 திவ்யதேசப் பெருமாள்களும் கருடவாஹனத்தில் எழுந்தருள, ஒவ்வொரு பெருமாளையும் ஆழ்வார் பிரதக்ஷிணமாக வந்து மாலை மரியாதைகள் நடந்து, பிறகு வீதி புறப்பாடு மிகவும் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். பயிரை ஆழ்வார் மிதித்தால் பயிர் நன்றாக வளரும் என்று ஐதீஹம். இக்கோயிலில் திருக்கோட்டியூர்நம்பி எழுந்தருளி இருக்கிறார்.

**குறிப்பு:** திருநாங்கூரில் இரண்டு மூன்று கோயில்களுக்கு ஒரே அர்ச்சகர் இருப்பதால், அவருடனே சென்று ஸேவையை முடித்துக்கொள்ள வேண்டும். அருகில் திருவெண்காடு சிவஸ்தலம் ப்ரஸித்தம். ஸ்ரீராமர் கரன் என்ற ராக்ஷசனை வதம் செய்த இடம்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1218-27, 1850, 2674 (132).

மொத்தம் 12 பாசுரங்கள்.

## 33. திருவைகுந்த விண்ணகரம்

(திருநாங்கூர்)

சீர்காழியிலிருந்து 8 கி.மீ. தூரத்தில் உள்ளது. பஸ் வசதிகள் உண்டு. இதுவும் திருநாங்கூரிலேயே உள்ளது.

**மூலவர்: வைகுந்த நாதன்,** தாமரைக்கண்ணுடையபிரான், உபய நாச்சிமார்களும் வீற்றிருக்கின்றனர். கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** உத்ஸவர்களும் அதே கோலத்தில் உள்ளனர்.

**தாயார்:** வைகுந்தவல்லி (தனிக்கோயில் நாச்சியார் இல்லை).

**தீர்த்தம்:** லக்ஷ்மீ புஷ்கரிணி, உதங்க புஷ்கரிணி, விரஜா தீர்த்தம்.

**விமானம்:** அனந்தஸத்யவர்த்தக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** உபரிசரவஸு, உதங்க மஹரிஷி.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1228-37 - 10 பாசுரங்கள்.

# 34. திருவாலியும் திருநகரியும்

**திருவாலி:** சீர்காழி-திருவெண்காடு பஸ் சாலையில் உள்ளது. சீர்காழி ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கே 8 கி.மீ. திருநாங்கூரிலிருந்து சுமார் 9-10 கி.மீ. கீழச்சாலையிலிருந்து 1.25 கி.மீ. இவ்வழி வந்தால் திருநாங்கூரிலிருந்து 5-6 கி.மீ. தான். இங்கு வசதிகள் எதுவும் இல்லை. (Pincode 609 106).

**மூலவர்:** லக்ஷ்மி ந்ருஸிம்ஹர், **வயலாளிமணவாளன்,** வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** திருவாலி நகராளன்.

**தாயார்:** அம்ருதகடவல்லி.

**தீர்த்தம்:** இலாக்ஷணி புஷ்கரிணி.

**விமானம்:** அஷ்டாக்ஷர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** திருமங்கையாழ்வார், அலாதி நிகஞ்சம ப்ரஜாபதி.

**விசேஷம்:** இது வயலாளி மணவாளன் தேவி அமிர்தவல்லி தாயார் வளர்க்கப்பட்ட இடம்.

**குறிப்பு:** திவ்யப்பிரபந்தத்தில் பாடப்பெற்றுள்ள வயலாளி மணவாளன் திருவாலியில் இல்லாமல் திருநகரியில் இருக்கிறார். எனவே, இவ்விரண்டும் சேர்ந்தே ஒரு திவ்யதேசமாகக் கணக்கிடப்படுகின்றது.

**திருநகரி:** திருவாலியில் இருந்து சுமார் 5 கி.மீ. தூரம் நெப்பத்தூர் வழியாக, கப்பிப்பாதையில் செல்லவேண்டும். திருநாங்கூரிலிருந்து நேர் பாதையும் உள்ளது. சீர்காழியிலிருந்து பூம்புகார் செல்லும் பஸ் திருநகரி வழியாகப் போகிறது. இது பெரிய ஊராக இருந்தும் இங்கு வசதிகள் ஒன்றும் இல்லை.

**மூலவர்:** வேதராஜன் (வயலாளிமணவாளன்), வீற்றிருந்த திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்: கல்யாண ரங்கநாதன்.**

**தாயார்:** அம்ருதவல்லி.

**விசேஷங்கள்:** இது திருமங்கையாழ்வார் அவதரித்த ஸ்தலம் (பக்கத்தில் திருக்குறையலூரில்). அவர் ஆராதித்த 5 நரஸிம்ஹர்களில் இரண்டு மூர்த்திகள் இங்கே உள்ளனர். கோயிலுக்குள்

திருமங்கையாழ்வாருக்குத் தனி ஸந்நிதி இருக்கின்றது. ஆழ்வார் பல அற்புதங்களைச் செய்துள்ளதால் "ஆழ்வார் கோயில்" என்று உள்ளூரில் அறியப்படுகிறது. அந்த ஸந்நிதியில் ஆழ்வார் வேடனுக்குண்டான வேஷத்துடன் காட்சி அளிக்கிறார். ஆழ்வாரின் பக்கத்தில், அவர் ஜீவிய காலத்தில் ஆராதித்து வந்த "சிந்தனைக் கினியான்" என்ற மிகச் சிறிய உத்ஸவமூர்த்தி அமர்ந்திருக்கிறார்.

இங்கிருந்து சுமார் 1 கி.மீ. தூரமுள்ள வேதராஜபுரம் என்ற இடத்தில்தான் திருமங்கையாழ்வார் பெருமாளை வழிப்பறி செய்ய, பெருமாள் இவருக்குத் திருமந்த்ர உபதேசம் செய்தது. இச்செய்தியை உணர்த்தும் வேடுபறி உத்ஸவம் இங்கே நடக்கின்றது. ரெங்கநாதப் பெருமாள் புதிய இளந்தம்பதிகளாக ஆழ்வாருக்குக் காட்சி அளித்துத் தடுத்தாட்கொண்ட இடம். கல்யாணத் திருக்கோலத்தில் பகவான் காட்சி அளித்ததால் கல்யாண ரெங்கநாதர் என்ற பெயர் வந்தது. தடைபடும் கல்யாணங்கள் இங்கே ப்ரார்த்தித்தால் தடைநீங்கி நடைபெறுவதாக நம்பிக்கை. ஸ்ரீமணவாள மாமுனிகள் பலமுறை எழுந்தருளி மங்களாசாஸனம் செய்த இடம்.

**குறிப்பு:** அர்ச்சகர் சந்நிதித்தெருவில் ஜாகை. கோயில் மூடியிருந்தால் அவரை அணுகி ஸேவிக்கலாம்.

**<u>மங்களாசாஸனம்:</u>** (திருவாலி, திருநகரி).

**குலசேகராழ்வார்:** 725.

**திருமங்கையாழ்வார்:** 1078, 1188-1217, 1329, 1519, 1733, 1735, 1850, 2014, 2027, 2063, 2673 (71), 2674 (115).

மொத்தம் 42 பாசுரங்கள்.

## 35. திருத்தேவனார் தொகை (கீழச்சாலை)

சீர்காழி ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கே 6 கி.மீ. சீர்காழி-திருவெண்காடு பஸ் மார்க்கத்தில் திருவாலியில் இறங்கி முக்கால் மைல் வண்டியில் வரலாம். திருநாங்கூரிலிருந்து 4 கி.மீ. வண்டிப்பாதை. இங்கு வசதி ஒன்றும் கிடையாது.

**மூலவர்:** தெய்வநாயகன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்: மாதவப் பெருமாள்.**

**தாயார்:** கடல்மகள் நாச்சியார், உத்ஸவர்: மாதவநாயகி.

**தீர்த்தம்:** சோபன புஷ்கரிணி, தேவஸபா புஷ்கரிணி.

**விமானம்:** சோபன விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** வஸிஷ்டர்.

**விசேஷம்:** இங்கு தேவர்கள் கூடிப்பேசியதாக வரலாறு. இதுவும் திருநாங்கூர் 11 திருப்பதிகளில் ஒன்று.

**குறிப்பு:** திருவெள்ளக்குளம், திருக்காவளம்பாடி அர்ச்சகர் இவ்வூரிலும் கைங்கர்யம் செய்வதால், ஸேவிக்கும் நேரத்தை முன் கூட்டியே அமைத்துக்கொள்ள வேண்டும்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1248-57 - 10 பாசுரங்கள்.

## 36. திருத்தெற்றியம்பலம் (திருநாங்கூர்)

சீர்காழியிலிருந்து 8 கி.மீ. தூரத்தில் உள்ள திருநாங்கூருக்குள்ளேயே உள்ளது. திருத்தெற்றியம்பலம் என்ற பெயர் பலருக்குத் தெரியவில்லை. **பள்ளிகொண்ட பெருமாள்** என்றே ப்ரஸித்தம். கீழவீதியிலிருந்து மேற்கே செல்லும் சாலையில் உள்ளது.

**மூலவர்:** செங்கண்மால், ரங்கநாதன், ஸ்ரீலக்ஷ்மீரங்கர் என்ற திருநாமங்கள், 4 புஜங்கள், புஜங்கசயனத் திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** செங்கமலவல்லி.

**தீர்த்தம்:** ஸூர்ய புஷ்கரிணி.

**விமானம்:** வேத விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** நாச்சியார், அநந்தாழ்வார்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1278-87- 10 பாசுரங்கள்.

## 37. திருமணிக்கூடம் (திருநாங்கூர்)

சீர்காழியிலிருந்து 8 கி.மீ. தூரத்தில் உள்ள திருநாங்கூர் எல்லையிலிருந்து கிழக்கே 1 கி.மீ. தூரத்தில் உள்ளது.

**மூலவர்: வரதராஜப்பெருமாள்** (மணிக்கூட நாயகன்), நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** திருமாமகள் நாச்சியார் (ஸ்ரீதேவி), பூதேவி. தனிக்கோயில் நாச்சியார் கிடையாது.

**தீர்த்தம்:** சந்த்ர புஷ்கரிணி.

**விமானம்:** கனக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** பெரிய திருவடி, சந்த்ரன்.

**குறிப்பு:** அர்ச்சகரை திருநாங்கூரிலிருந்து அழைத்துச் செல்ல வேண்டும்.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1288-97 - 10 பாசுரங்கள்.

## 38. திருவெள்ளக்குளம் (அண்ணன் கோயில்)

சீர்காழி ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கில் 10 கி.மீ. சீர்காழி-நாகை பேருந்துகள் அனைத்திலும் செல்லலாம். (Pincode 609 109).

**மூலவர்:** ஸ்ரீநிவாஸன், கண்ணன், நார யணன், **அண்ணன் பெருமாள்** (திருப்பதி பெருமாளுக்கு அண்ணன்), நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** அலர்மேல்மங்கை. உத்ஸவர்: பத்மாவதி, பூவார் திருமகள்.

**தீர்த்தம்:** திருவெள்ளக்குளம், ஸ்வேத புஷ்கரிணி.

**விமானம்:** தத்வத்யோதக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ருத்ரர், ச்வேதராஜன்.

**விசேஷங்கள்:** இது திருநாங்கூர் திருப்பதிகள் 11இல் ஒன்று. இந்த க்ஷேத்ரத்தை தென்திருப்பதி என்றும் கூறுவர். வேங்கடேசப் பெருமாளுக்கான பிரார்த்தனை இங்கேயே செலுத்திக் கல்யாணங்

களையும் இங்கே செய்கின்றனர். சூரியவம்சத்தில் துந்துமாரன் என்ற அரசனுடைய குமாரன் சுவேதன் என்பவனுக்கு 9-வது வயதில் ம்ருத்யு உண்டு என்பதை அறிந்து இந்தத் தலத்திற்கு வந்து, ச்வேதபுஷ்கரிணியில் நீராடி, மருத்தாசிரமத்திற்குச் சென்று மருத்தரின் உபதேசம் பெற்று, தடாகத்திற்குத் தென் கரையில் வில்வ மரத்தடியில் வடக்கு முகமாக அமர்ந்து ம்ருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜபம் செய்ய, பகவான் பிரத்யக்ஷமாகி அரசகுமாரனை மார்க்கண்டேயனைப் போல் தீர்க்காயுஸ்ஸை அடையக் கடவாய் என்று வரம் அளித்ததாக ஸ்தல புராணம்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1308-17 - 10 பாசுரங்கள்.

## 39. திருபார்த்தன்பள்ளி (திருநாங்கூர்)

சீர்காழியிலிருந்து 12-13 கி.மீ. தூரத்தில் உள்ளது. இடையில் சிறிய காவிரி ஆற்றைக் கடந்து வரவேண்டும். திருவெண்காட்டிலிருந்து தென்மேற்கே 3 கி.மீ. கப்பிப் பாதை உண்டு. சிறிய ஊர். வசதிகள் ஒன்றும் இல்லை.

**மூலவர்:** தாமரையாள் கேள்வன், நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** பார்த்தஸாரதி.

**தாயார்:** தாமரை நாயகி.

**தீர்த்தம்:** சங்க ஸரஸ் (கங்கா தீர்த்தம்).

**விமானம்:** நாராயண விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** பார்த்தன், வருணன், ஏகாதசருத்ரர்கள்.

**விசேஷங்கள்:** மூலவர், உற்சவர் இருவருக்குமே ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்று மூன்று தேவிகள் உண்டு.

கோலவல்லி ராமன் என்று மற்றொரு அழகிய உத்ஸவர் உண்டு. சங்கு, சக்ர, கதையுடன் நிற்கும் இவருக்கு வில்லும் அம்பும் சார்த்தப்பட்டுள்ளன. இவரது மூலவர் சிறிது தூரத்தில் ஒரு தோப்பில் தனிக்கோயிலில் இருக்கிறாராம். இங்கே பார்த்தனுக்கு தனி ஸந்நிதி உள்ளது. அர்ச்சகர் கோயில் பக்கத்திலேயே குடி

இருக்கிறார். தை மாதம் புஷ்ய நக்ஷத்திரத்தன்று தீர்த்தவாரி விசேஷம். சரம சுலோகார்த்தம் விளக்கிய இடம்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1318-27 - 10 பாசுரங்கள்.

## 40. திருச்சித்ரகூடம் (சிதம்பரம்)

சென்னை-திருச்சி மெயின் லைனில் சிதம்பரம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 2 கி.மீ. தூரத்தில் தில்லை நடராஜர் கோயிலுக்குள் உள்ளது. பல ஊர்களிலிருந்தும் பஸ் வசதிகள் உண்டு. சத்திரங்கள், ஹோட்டல்கள் எல்லா வசதிகளும் உள்ள பெரிய நகரம்.

**மூலவர்:** கோவிந்தராஜன், போகசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** தேவாதிதேவன், பார்த்தஸாரதி, வீற்றிருந்த திருக்கோலம்; சித்திரகூடத்துள்ளான் என்ற மற்றொரு உத்ஸவரும் உபயநாச்சிமாருடன் ஸேவை ஸாதிக்கிறார்.

**தாயார்:** புண்டரீகவல்லி (தனி நாச்சியார் ஸந்நிதி).

**தீர்த்தம்:** புண்டரீக புஷ்கரிணி.

**விமானம்:** ஸாத்விக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** தில்லைமூவாயிரவர், கண்வர், பதஞ்ஜலி, வ்யாக்ரபாதர்.

**விசேஷங்கள்:** இந்தக் கோயில் நடராஜர் கோயிலுக்குள் அமைந்திருந்தாலும், தனிக்கோயிலுக்குண்டான கர்ப்பக்ருஹம், ராஜகோபுரம், கொடிமரம், மடைப்பள்ளி என்று எல்லாம் அமைந்துள்ளன. மாசி மகத்திற்கு கிள்ளை சமுத்ரத்தில் தீர்த்தவாரி. நடராஜப்பெருமான் உள்ளிட்ட தில்லை மூவாயிரவர் இவரைத் துதிக்க இங்கு வந்ததாகவும், தன்னெதிரே நடனமாடிய நடராஜப்பெருமானது தாண்டவத்தைப் பெருமாள் ரஸித்ததாகவும் ஐதிஹ்யம். நடராஜர் கர்ப்பக்ருஹத்தில் சிதம்பர ரஹஸ்யம் மூடிவைக்கப்பட்டு ஸேவார்த்திகளுக்கு காட்டப்பட்டு வருகிறது. பாணினி சிவன் ஆடும் ஆனந்தத் தாண்டவத்தைக் கண்டு பரவசமடைந்து வியாகரணம் செய்த இடம். உலகில் உள்ள எல்லா விதமான நடனங்களையும் சிற்பசாலையில் காணலாம். பரதமுனிவர் நாட்டிய சாஸ்த்ரத்தை ஏற்படுத்திய ஸ்தலம். கோயில்

வடக்கே உள்ள புஷ்கரிணியில் புஷ்கரக்ஷேத்திரத்தில் உள்ளதைப்போல் மீன்கள் தரையில் வந்து யாத்ரீகர்களிடமிருந்து பொறி கடலை வாங்கிச் சாப்பிடுவது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது. தில்லை அம்மனும் நடராஜருடன் தாண்டவம் ஆடியபடியால் தில்லை நகர் என்று பெயர் பெற்றதாகப் புராண வரலாறு.

**குறிப்பு:** இங்கு தங்காமலேயே பெருமாளை ஸேவித்துத் திரும்பிவிடலாம் என்றாலும், தங்கினால் மேற்கொண்டு **ஸ்ரீமந்நாதமுனிகளின் அவதாரஸ்தலமாகிய காட்டுமன்னார்கோயிலையும்,** ஸ்ரீமுஷ்ணம் பூவராகப்பெருமாளையும் ஸேவிக்கலாம். சிதம்பரம் மேலவீதியில் கோதண்டராமர் ஸந்நிதி உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**குலசேகராழ்வார்:** 741-751.

**திருமங்கையாழ்வார்:** 1158-1177, 2674 (124).

மொத்தம் 32 பாசுரங்கள்.

## 'Divyadesas are Supreme Heavens'

*CHENNAI, DEC 25. The 108 Vaishnavite 'divyadesas' are places where people can attain salvation, Dr. Katherine Young, Professor of Hinduism, McGill University in Montreal, Canada, has said.*

*Dwelling at length about the greatness of 'divyadesas' in her talk delivered in Thiruvidanthai, about 35 km South of the city on Sunday, Dr Young said "they are the places where people can not only relax and enjoy but also get liberation"*

*Some might wonder when they could get liberation on earth, why should they go to 'Vaikuntam'. This could be explained in many respects One explanation was that this was part of the paradoxical nature of God's mystery Another was that on earth, salvation was possible but not 'moksha' Moreover, when one attained salvation, one virtually became God but without having the power of creation or destruction.*

*Describing the 'divyadesas' as beloved places, she said they were "supreme heavens". Pointing out that most of them were located in Tamil Nadu, the Professor explained that some of the reasons for this phenomenon were the distinct geography possessed by the region and a pronounced need to preserve the language of Tamil as Prakrit has become the prime language in upper South India (Andhra and Karnataka) and Sri Lanka by then.*

*Reasoning out why there was 'overdose' of praise on Tamil society and culture in the Sangam literature, Dr. Young said the classical age was also an era of State formation and to win the people's loyalty, Tamil kingdoms, society and culture were praised.*

*— With grateful acknowledgements to "The Hindu", 26.12.2000.*

# நடுநாட்டுத் திருப்பதிகள் 2

## 41. திருவஹீந்த்ரபுரம் (அயிந்தை)

சென்னை-திருச்சி மெயின் லைனில் திருப்பாதிரிபுலியூர் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து மேற்கே 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. சென்னையிலிருந்து காரில் கிழக்கு கடற்கரை சாலை வழியாகப் பாண்டிச்சேரி, கடலூர் வழியாகச் சென்று வரலாம். கடலூரில் தங்கியும் ஸேவிக்கலாம் டவுன் பஸ் வசதிகள் உண்டு.

**மூலவர்:** தெய்வநாயகன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** மூவராகிய ஒருவன், **தேவநாதன்**, திவிஷந்நாதன், விபுதநாதன், தாஸஸத்தியன், அடியவர்க்கு மெய்யன்.

**தாயார்:** ஹேமாம்புஜவல்லித் தாயார் (வைகுண்ட நாயகி).

**தீர்த்தம்:** கருட நதி, சந்திரதீர்த்தம், சேஷ தீர்த்தம் (பூதீர்த்தம்).

**விமானம்:** சந்த்ர விமானம், சுத்தஸத்வ விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சந்த்ரன், கருடன்.

**விசேஷங்கள்:** கோயிலுக்கு அருகில் ஔஷதகிரி என்ற குன்றின் மேல் ஹயக்ரீவர் ஸந்நிதியிருக்கிறது. வடகலை வைஷ்ணவ ஆசார்யரான ஸ்ரீஸ்வாமி தேசிகன் இங்கே தவம் செய்து* கருடன் அருளையும் ஹயக்ரீவன் அருளையும் பெற்றார். கோயிலுக்குள் இருக்கும் தேசிகன் ஸந்நிதி மிகவும் ப்ரஸித்தி பெற்றது. புரட்டாசி மாதத்தில் நடக்கும் மலை உத்ஸவமும் தீர்த்தவாரியும் விசேஷமானவை. ஸ்ரீஸ்வாமி தேசிகன் தன்னைப்போல் தன்னுடைய திருக்கையாலேயே ஒரு உற்சவ விக்ரஹம் செய்து போட்டியில் ஜயித்த இடம். ஆதிசேஷன் நிர்மாணித்த ஸ்தலம் ஆதலால் திரு அஹிந்த்ரபுரம் என்று பெயர் ஏற்பட்டது. கருடன் விரஜா தீர்த்தத்தையும் (கருட நதி), ஆதிசேஷன் பாதாள கங்கை தீர்த்தத்தையும் (சேஷ தீர்த்தம்) கொண்டுவந்து பரமனுக்கு ஸமர்ப்பித்த ஸ்தலம். இந்த ஸ்தலத்தில் புற்றுக்கு

* ஸ்ரீஸ்வாமி தேசிகன் தவம் செய்த இந்த ஸ்தலத்தின் ஞாபகார்த்தமாக, சென்னை லிட்டில் ப்ளவர் கம்பெனியார் (லிப்கோ) "ஸ்ரீதேசிக தபோ மண்டபம்" கட்டி நந்தவன கைங்கரியமும் செய்திருக்கிறார்கள்.

(ஆடி, தை மாதங்களில்) பால் தெளிக்கும் வழக்கம் இல்லை. கோயில் பிராகாரத்திற்குள் இருக்கும் சேஷ தீர்த்தத்தில்தான் (கிணறு) பால் தெளிக்கும் வழக்கம் இருந்து வருகிறது. சேஷ தீர்த்தம் நிவேதனத்திற்கும், கருட தீர்த்தம் திருமஞ்சனத்திற்கும் இன்றும் உபயோகப்பட்டு வருகிறது. தேசிகன் 40 வருடகாலம் இவ்வூரில் வசித்த திருமாளிகையும், அவர் திருக்கையால் கட்டிய கிணறும் இன்றும் ஸேவிக்கலாம். இந்த திவ்யதேசத்திற்கு ஸ்ரீமந் மணவாள மாமுனிகளும் எழுந்தருளி மங்களாசாஸனம் செய்துள்ளார். (இதுபற்றிய குறிப்பை எதிர்ப் பக்கத்தில் காணலாம்.) அவருக்கு இப்போதும் மாடவீதியில் ஸந்நிதி உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்**: 1148-57 - 10 பாசுரங்கள்.

**குறிப்பு**: இந்த திவ்யதேசத்தைப் பற்றி **"திருவஹீந்திரபுர** ஸ்தல புராணச் சுருக்கம்" என்னும் பெயரில் லிப்கோவினால் தனியாக ஒரு நூல் வெளியிடப்பட்டுள்ளது.

## 42. திருக்கோவலூர்

விழுப்புரம்-காட்பாடி ரயில் பாதையில் திருக்கோவலூர் ஸ்டேஷனிலிருந்து கோயில் 3 கி.மீ. தூரத்தில் இருக்கிறது. கடலூரிலிருந்து பஸ்ஸிலும் போகலாம். புதுச்சேரி-பெங்களூர், சித்தூர்-திருச்சி (வேலூர் வழி) பஸ் பாதை உள்ளது. திருவண்ணாமலையிலிருந்து 36 கி.மீ. எல்லா வசதிகளும் உண்டு.

**மூலவர்**: த்ரிவிக்ரமன், திருவடியை உயரே தூக்கிய நிலை. நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்**: ஆயனார், கோவலன், (கோபாலன்) தேஹளிசர்.

**தாயார்**: பூங்கோவல் நாச்சியார், (உத்ஸவர்: புஷ்பவல்லி).

**தீர்த்தம்**: பெண்ணையாறு, க்ருஷ்ண தீர்த்தம், சக்ர தீர்த்தம்.

**விமானம்**: ஸ்ரீகர விமானம்.

**ப்ரத்யக்ஷம்**: பலிசக்ரவர்த்தி, ம்ருகண்டு, ப்ரஹ்மா, இந்திரன், குக்ஷி, சௌனகர், காச்யபர், காலவர், குசத்வஜன், முதலாழ்வார்கள்.

**விசேஷங்கள்**: வாமன த்ரிவிக்ரம அவதார ஸ்தலம். இந்தத் திவ்யதேசத்தில்தான் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்

என்ற முதலாழ்வார்கள் மூவரும் ஓர் இரவில் இடைகழியில் ஸந்தித்து, பெருமாளையும் பிராட்டியையும் நேரில் இருட்டில் நெருக்கியபடி ஸேவித்து மூன்று திருவந்தாதிகளைப் பாடியது. மூலவர் வலக்கையில் சங்கமும் இடக்கையில் சக்ரமுமாக வலக்காலால் வையமளந்து நிற்கிறார். கோயிலுக்குள் இருக்கும் துர்க்கை தேவதாந்திரமாகக் கருதப்படுவதில்லை. மகாபலியின் கர்வத்தை அடக்கி ஆட்கொண்ட ஸ்தலம். தேசிகன் தேஹளீசஸ்துதி இயற்றிய ஸ்தலம். எம்பெருமானார் ஜீயர் பரம்பரை மஹான்கள் ஆதிக்கத்துக்குட்பட்ட ஸ்தலம். இந்த ஊர், பஞ்ச க்ருஷ்ணாரண்ய க்ஷேத்திரங்களில் ஒன்று. மற்றவை—திருக்கண்ணங்குடி, திருக்கண்ணன்கவித்தலம், திருக்கண்ணபுரம், திருக்கண்ணமங்கை. ஸ்ரீக்ருஷ்ணன் நித்ய ஸாந்நித்யம் செய்தருளும் ஸ்தலம்.

மணவாள மாமுனிகள் மங்களாசாஸனம் பெற்ற திவ்யதேசம்.

அருகில் அரகண்டநல்லூரில் ஸ்ரீ ரங்கநாதரை ஸேவிக்கலாம், சிவஸ்தலங்களும் உள்ளன.

**மங்களாசாஸனம்:**

திருமங்கையாழ்வார்: 1078, 1138-1147, 1569, 1641, 2057, 2058, 2068, 2673 (69), 2674 (122). **பொய்கையாழ்வார்:** 2158, 2167. **பூதத்தாழ்வார்:** 2251. மொத்தம் 21 பாசுரங்கள்.

---

**திருவஹீந்திரபுரம் பற்றி...**

*". மணவாள மாமுனிகள் இத்திருத்தலத்திற்கு எழுந்தருளியதாக எந்த செய்திகளும் ஆதார பூர்வமாக அறிய இயலாமல் உள்ளது எனவே இந்த செய்தி உண்மைக்குப் புறம்பானதாகவே இருக்கிறது"*

என்று திருவஹீந்திரபுரம் அருள்மிகு தேவநாத ஸ்வாமி திருக்கோயிலின் நிர்வாக அதிகாரி தம்முடைய 19-3-2004 கடிதத்தில் குறிப்பிடுகிறார்

ஸ்ரீமத் எம்பெருமானார் ஜீயர் மடாதிபதியால் வெளியிடப்பட்ட *"ஸ்ரீமந் மணவாள மாமுநிகள் வைபவம்"* என்னும் நூலிலிருந்து கிடைக்கும் செய்தி.-

*திருவஹீந்திரபுரம் சென்று தெய்வனாயகனையும் திருவடி தொழுது அங்கிருந்து புறப்பட்டு திருச்சித்திரக் கூடத்திற்கு எழுந்தருளி, கோவிந்தராஜனையும் ஸேவித்து மங்களாஸாஸநஞ் செய்தருளி, அப்படியே வழியிலுள்ள சோழ மண்டல திவ்ய தேசங்களையும் மங்களாஸாஸநஞ் செய்தருளிக் கொண்டே எழுந்தருளுகிறவளவிலே திருவாலி திருநகரிக்கு எழுந்தருளினார்".* மேலும், ஆன்றோர்கள் சிலரும் இது சரியே என்கின்றனர். பக்தர்கள் இந்த விஷயம் பற்றி எங்களுக்கு மேற்கொண்டு ஆதார பூர்வமாகத் தகவல் கொடுத்தால், அடுத்துவரும் பதிப்புகளில் சரியான தகவல்களைத் தர இயலும்.

— பதிப்பகத்தார், மே 2004

# தொண்டைநாட்டுத் திருப்பதிகள் 22

## 43. திருக்கச்சி - அத்திகிரி

(அத்தியூர், காஞ்சீபுரம், ஸத்யவ்ரதக்ஷேத்ரம்)

செங்கற்பட்டு-அரக்கோணம் ரயில் பாதையிலுள்ள இந்த ஸ்டேஷனை சென்னை கடற்கரை-காஞ்சீபுரம் ரயிலில் சென்றும் அடையலாம். சென்னையிலிருந்தும் மற்றும் பல ஊர்களிலிருந்தும் காஞ்சீபுரத்திற்கு பஸ்கள் உண்டு. சென்னை-பெங்களூர் சாலையில் ஸ்ரீபெரும்புதூர் தாண்டி தெற்கே பிரிவு. எல்லா வசதிகளும் ஏராளமாக உண்டு. பெரிய நகரம்.

**மூலவர்: வரதராஜன்**, பேரருளாளன், தேவாதிராஜன், தேவப்பெருமாள், நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பெருந்தேவித் தாயார் (தனிக்கோயில்), மஹாதேவி.

**தீர்த்தம்:** வேகவதி நதி, அனந்தஸரஸ், சேஷ, வராஹ, ப்ருஹ்ம, பத்ம, அக்னிகுசல முதலிய பல தீர்த்தங்கள்.

**விமானம்:** புண்யகோடி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ருகு, நாரதர், ஆதிசேஷன், ப்ரஹ்மா, கஜேந்திரன்.

**விசேஷங்கள்:** பொய்கையாழ்வார், ஸ்ரீஸ்வாமி தேசிகன் அவதார ஸ்தலம். ஸ்ரீரங்கத்தைப் போலவே உபய வேதாந்த வித்வான்களின் காலக்ஷேபங்களாலும், மற்ற பல அற வழிகளாலும் வைணவம் வளர்க்கப்பட்ட திவ்ய க்ஷேத்ரம். இங்கு குளத்தில் மூழ்கிக் கிடத்தப்பட்டிருக்கும் அத்திவரதர் என்ற அத்தி மரத்தாலான சிலை 40 வருடங்களுக்கொரு முறை வெளியில் எடுக்கப்பட்டு 10 தினங்கள் ஸேவைக்கு வைக்கப்படுகிறது.

எம்பெருமானின் வைகாசி விசாக கருட ஸேவை மிகப்ரஸித்தி வாய்ந்தது.

ஐராவதமே மலையுருவில் எம்பெருமானைத் தாங்கினமையால், இதற்கு அத்திகிரி (வேதகிரி) என்று பெயர் வந்ததாம்.

இங்கு ப்ரஹ்மா செய்த யாகத்திற்கு உகந்து எம்பெருமான் வரம் தந்ததால் வரதராஜன் என அழைக்கப்படுகிறார்.

அயோத்யாதிபதியான ஸகரனுடைய பிள்ளை அஸமஞ்சனும் அவன் மனைவியும் சாபவசத்தால் பல்லிகளாயினர். உபமன்யு என்பவர், இந்தப் பல்லிகளுக்கு ஸ்ரீவரதனை ஸேவை செய்து வைத்த மாத்திரத்தில், பல்லிகள் நிஜரூபமெடுத்து ஸ்வர்க்கம் சென்றன. உபமன்யுவின் சரணாகத ரக்ஷணம் உலகுக்கு நிரந்தரமாகப் பிரகாசிக்க, பல்லிகளின் சரீரங்கள் தன் ப்ராகாரத்தில் ஸ்வர்ண சிரஸுகளுடன் இருக்கட்டும் என்றும், தன்னை ஸேவித்து ப்ராகாரத்திலிருக்கும் இந்த பல்லிகளை யார் தொடுகிறார்களோ அவர்களுடைய ஸகல வியாதிகளும் நீங்கும் என்றும் ஸ்ரீவரதன் அருள் புரிந்தார். இதற்கிணங்க, நோயுற்றவர்கள் ஸ்ரீவரதனை ஸேவித்து, பல்லிகளைத் தொட்டு வியாதியிலிருந்து நிவர்த்தியடைகிறார்கள். முன்பு ஒரு காலத்தில் ப்ருஹ்மா இங்கு யாகம் செய்ததால் இது (க - ப்ருஹ்மாவினால், அஞ்சிதம் - பூஜிக்கப்பட்டது என்பதனால்) காஞ்சி என்று பெயர் பெற்றதாக புராண வரலாறு. ஆளவந்தார், திருக்கச்சிநம்பி, ஸ்ரீராமாநுஜர், ஆழ்வான், ஸ்வாமி தேசிகன், ஸ்ரீமணவாள மாமுனிகள் மங்களா ஸாசனம் செய்த இடம். முத்தி தரும் ஏழு நகரங்களில் தெற்கே உள்ளது காஞ்சி மட்டுமே.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1541, 2050, 2060, 2066

**பூதத்தாழ்வார்:** 2276, 2277.

**பேயாழ்வார்:** 2307.

மொத்தம் 7 பாசுரங்கள்.

## 44. அஷ்டபுயகரம் (காஞ்சீபுரம்)

காஞ்சியிலேயே வரதராஜர் ஸந்நிதியிலிருந்து 2 கி.மீ. மேற்கே ரங்கசாமி குளத்திற்கு தெற்கே உள்ளது. (மார்க்கம் எண் 43 காண்க). ஹாட்ஸன்பேட்டை தேரடிக்கு அருகில் உள்ளது. (Pincode 631 501).

**மூலவர்:** ஆதிகேசவப் பெருமாள், அஷ்டபுஜப்பெருமாள், கஜேந்த்ர வரதன், சக்ரதரர், நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** அலர்மேல்மங்கை, பத்மாஸனி, புஷ்பவல்லி.

**தீர்த்தம்:** கஜேந்திர புஷ்கரிணி.

**விமானம்:** ககநாக்ருதி, (வ்யோமாகார விமானம்), சக்ராக்ருதி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** கஜேந்த்ரன்.

**விசேஷங்கள்:** மூலவருக்கு 8 திருக்கரங்களுடன் 8 ஆயுதங்கள் உள்ளன. வலது நான்கு திருக்கைகளில் சக்கரம், கத்தி, புஷ்பம், அம்பு ஆகியவைகளையும், இடது புறம் நான்கு திருக்கைகளில் சங்கம், வில், கேடயம், கதை ஆகியவைகளையும் ஏந்தியவண்ணம் ஆச்சரியமாக ஸேவை ஸாதிக்கிறார். உத்ஸவருக்கு நான்கு புஜங்களே உள்ளன; கதையும் வேலும் உண்டு. ந்ருஸிம்ஹனைக் கொல்ல வேண்டும் என்று வந்த சரபம், அஷ்டபுஜத்தானைக் கண்டு பயந்து, விஷ்ணுவை சரணம் அடைந்தது. பகவான் ஆக்ஞைப்படி யாகசாலைக்கு வாயு மூலையில் சரபேசன் என்ற பெயருடன் சிவன் யாகத்தை காப்பதாக ஐதீஹம். ஒரு யானை, ஸுக்ருத விசேஷத்தினால் அஷ்டபுஜக் குளத்தில் தாமரைப்பூ பறித்து எம்பெருமானை ஆராதித்து வரும்பொழுது ஒரு நாள் யானையை குளத்தில் ஒரு முதலை பிடித்துக் கொள்ள, யானை, பகவானை சரணடைய, பகவான் தம் ஸுதர்சனத்தினால் அந்த முதலையைக் கொன்று யானையை (கஜேந்த்ரனை) ரக்ஷித்த ஸ்தலம். ஸ்ரீஸ்வாமி தேசிகனும் மணவாளமாமுனிகளும் மங்களாசாஸனம் செய்த இடம். பூவராஹன், ஆஞ்சநேயருக்குத் தனி சந்நிதிகள். கல்யாணம், வியாபாரம் கைகூட இங்கே வேண்டினால் நடப்பதாகச் சொல்லப் படுகிறது.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1118-1127, 2674 (128)

**பேயாழ்வார்:** 2380

மொத்தம் 12 பாசுரங்கள்.

## 45. திருத்தண்கா (தூப்புல், காஞ்சீபுரம்)

காஞ்சியிலேயே அஷ்டபுயகரத்திலிருந்து ½ கி.மீ. தூரத்தில் மேற்கே உள்ளது.

**மூலவர்: தீபப்ரகாசர், விளக்கொளிப் பெருமாள்**, திவ்யப்ரகாசர், நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** மரகதவல்லி.

**தீர்த்தம்:** ஸரஸ்வதி தீர்த்தம்.

**விமானம்:** ஸ்ரீகர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ஸரஸ்வதி.

**விசேஷங்கள்:** ஸ்ரீபாஷ்யகார ஸித்தாந்த ஸாம்ராஜ்ய பட்டாபிஷிக்தரான ஸ்ரீஸ்வாமி தேசிகனின் திரு அவதார ஸ்தலம். இங்கு அவருடைய ஸந்நிதியும் இருக்கிறது. பகவான் ப்ருஹ்மாதிதேவர்களைக் காப்பாற்ற தீபப்ரகாசனாக ஆவிர்பவித்த ஸ்தலம். தெற்கு நோக்கி வேதாந்த தேசிகன் ஸந்நிதியுள்ளது. பிரதக்ஷிணத்தில் வேதாந்த தேசிகன் வைபவம் முழுவதும் சித்திரமாக வரையப்பட்டு உள்ளது. ஸந்நிதியிலுள்ள தேசிகன், ஞான முத்திரையுடன் எழுந்தருளி இருக்கிறார். தேசிகனுடைய குமாரரான நயின வரதாசார்யார் பிரதிஷ்டை செய்த திருமேனி. பக்கத்தில் தேசிகனுடைய திருவாராதனப் பெருமாளான ஸ்ரீலக்ஷ்மீஹயக்ரீவர் எழுந்தருளி இருக்கிறார். மற்றொரு ஸந்நிதியில் தீபப்ரகாசர் எழுந்தருளியுள்ளார். ப்ருஹ்மா செய்யும் யாகத்தைக் கெடுக்க வந்த அசுரர்கள் உலகம் முழுவதையும் இருட்டாக்கிவிட, எம்பெருமான் ஒரு பேரொளியாய்த் தோன்றி இருட்டைப் போக்கினதால், 'தீபப்பிரகாசர்' என்றும் 'விளக்கொளி' என்றும் திருநாமம் ஏற்பட்டதாக ஸ்தல புராணம். ஸ்ரீஸ்வாமி தேசிகன் இப்பெருமாள் விஷயமாக சரணாகதி தீபிகை அருளியுள்ளார். மற்ற உத்சவங்கள் தவிர புரட்டாசி ச்ரவண உத்சவமும் மிகவும் விசேஷமாக நடைபெறுகிறது.

**குறிப்பு:** தினப்படி பூஜைகளுக்குத் தேவையான திரவியம் இல்லாமலிருந்து, இப்போது விளக்கொளிப் பெருமாள்-தூப்புல் வேதாந்த தேசிகர் ட்ரஸ்டின் (Pincode 631 503) மேற்பார்வையில் உள்ளது. மற்றும், நம்மாழ்வாரின் பாசுரம் 2503 எண் "நானிலம் வாய்க்கொண்டு" இந்தக் கோயிலைப்பாடியதாக அறியப்படுகிறது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1849, 2065 - 2 பாசுரங்கள்.

## 46. திருவேளுக்கை (காஞ்சீபுரம்)

காஞ்சீபுரத்திலேயே, அஷ்டபுயகரத்திலிருந்து 1 கி.மீ. தென்மேற்கே உள்ளது. விளக்கொளிப் பெருமாள் கோயிலுக்குத் தெற்கு. (Pincode 631 501)

**மூலவர்: அழகியசிங்கர்**, ந்ருஸிம்ஹர், முகுந்த நாயகன், பத்மாஸந திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** வேளுக்கைவல்லி, அம்ருதவல்லி.

**தீர்த்தம்:** கனக ஸரஸ், ஹேமஸரஸ், ப்ரஹ்லாத தீர்த்தம்.

**விமானம்:** கனக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ருகுமுனி.

**விசேஷங்கள்:** ந்ருஸிம்ஹன் ஹஸ்திசைல குகையில் இருந்த படியே வேறொரு ந்ருஸிம்ஹ வடிவம் கொண்டு மேற்கு திக்கில் அசுரர்களைத் துரத்திக்கொண்டுபோய் அசுரர்கள் மறுபடி வராத படிச் செய்ய அங்கேயே யோகநரஸிம்மராக இருக்கிறார். இது காமாஸிகா ந்ருஸிம்ஹன் ஸந்நிதி. பெருமாள், தாயார், கருடன் ஸந்நிதிகள் உள்ளன. 'வேள்' என்ற சொல்லுக்கு 'ஆசை' என்பது பொருள். நரஸிம்ஹன் ஆசையுடன் வசிக்கும் இடமாதலால் வேளிருக்கை (வேளுக்கை) எனப் பெயர் பெற்றதாக ஐதிஹம். 12 ஆண்டுக்கு முன்பு இந்த ஸந்நிதி ஜீர்ணோத்தாரணம் செய்யப் பட்டுள்ளது. ஸ்ரீஸ்வாமி தேசிகன் இவரைப்பற்றி "காமாஸிகாஷ்டகம்" அருளியுள்ளார்.

<u>**மங்களாசாஸனம்:**</u>

**பேயாழ்வார்:** 2307, 2315, 2343

**திருமங்கையாழ்வார்:** 2674 (127)

மொத்தம் 4 பாசுரங்கள்.

## 47. திரு நீரகம் (காஞ்சீபுரம்)

பெரிய காஞ்சீபுரத்தில் (ஊரகம்) உலகளந்த பெருமாள் கோயிலிலேயே உள்ளது. (மார்க்கம் 43 காண்க).

**மூலவர்:** இல்லை.

**உத்ஸவர்: ஜகதீச்வரர்**, நின்ற திருக்கோலம், தெற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** நிலமங்கைவல்லி.

**தீர்த்தம்:** அக்ரூர தீர்த்தம்.

**விமானம்:** ஜகதீச்வர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** அக்ரூரர்

**குறிப்பு:** மூலவர் எங்கிருக்கிறார்? பழைய கோயில் எங்கிருக்கிறது? தீர்த்தம் எங்குள்ளது? என்றெல்லாம் தெரியவில்லை. உலகளந்தப் பெருமாள் கோயிலின் வடபுறத்துப் ப்ராகாரத்தில் மிகச் சிறிய ஸந்நிதியில் உத்ஸவர் மட்டுமே எழுந்தருளியிருக்கிறார்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 2059 - 1 பாசுரம்.

## 48. திருப்பாடகம் (காஞ்சீபுரம்)

இதிலிருந்து ஒன்பது திவ்ய தேசங்கள் பெரிய காஞ்சீபுரத்தில் உள்ளன. கங்கை கொண்டான் மண்டபத்தின் அருகில் இந்த ஸந்நிதி இருக்கிறது. (Pincode 631 502)

**மூலவர்: பாண்டவ தூதர்**, வீற்றிருந்த திருக்கோலம் (விசுவரூபம்), கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ருக்மிணி, ஸத்யபாமா.

**தீர்த்தம்:** மத்ஸ்ய தீர்த்தம்.

**விமானம்:** சக்கர விமானம், வேத கோடி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ஜனமேஜயன், ஹாரீத முனி.

**விசேஷங்கள்:** ஜனமேஜயமஹாராஜன் வைசம்பாயனரிடம் பாரத கதையைக் கேட்டு, ஸ்ரீக்ருஷ்ணன் பாண்டவர்களுக்காக ஹஸ்தினாபுரம் தூது சென்று விச்வரூபம் எடுத்ததைக் கேள்விப்பட்டு, அதை நேரில் ஸேவிக்க விரும்பிக் காஞ்சி வந்து, அச்வமேதயாகம் செய்து, பூர்ணாஹுதி ஆனதும் பகவான் பாண்டவதூத வேஷத்துடன் ஆவிர்பவித்ததாக புராண வரலாறு. முதலாம் குலோத்துங்க சோழனால் புதுப்பிக்கப்பட்டதாக இங்கே உள்ள கல்வெட்டுகள் மூலம் தெரிகிறது. ஸ்ரீக்ருஷ்ண ஜெயந்தி, தீபாவளி, முக்கோட்டி ஏகாதசியில் (மற்றவை தவிர) விசேஷ உற்சவங்கள்.

இங்கு ஸ்ரீவைஷ்ண சம்பிரதாயத்திற்கு முக்கியமான சில கிரந்தங்களை இயற்றியுள்ள அருளாளப் பெருமாள் எம்பெருமானார் எழுந்தருளி இருக்கிறார். மணவாளமாமுனிகள் மங்களாசாஸனம்.

**மங்களாசாஸனம்:**

**திருமழிசையாழ்வார்:** 814, 815

**திருமங்கையாழ்வார்:** 1541, 2674 (127)

**பூதத்தாழ்வார்:** 2275

**பேயாழ்வார்:** 2311

மொத்தம் 6 பாசுரங்கள்.

## 49. திரு நிலாத்திங்கள் துண்டம்
(காஞ்சீபுரம்)

பெரிய காஞ்சீபுரம் ஏகாம்பரேச்வரர் கோயிலில் உட்ப்ராகாரத்தில் மிகச் சிறிய ஸந்நிதியாக உள்ளது. (மார்க்கம் 43 காண்க.) புஷ்கரிணி இப்போது இல்லை.

**மூலவர்:** நிலாத்திங்கள் துண்டத்தான், சந்த்ர சூடப்பெருமாள், நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** நேர்ஒருவரில்லா வல்லி, நிலாத்திங்கள் துண்டத் தாயார்.

**தீர்த்தம்:** சந்த்ர புஷ்கரிணி.

**விமானம்:** புருஷஸூக்த விமானம் (ஸூர்ய விமானம்).

**ப்ரத்யக்ஷம்:** சிவன்

**விசேஷங்கள்:** இங்கே ஒரு மாமரத்தின் கீழே பார்வதி தவம் செய்ததாகவும், பார்வதியின் தவத்தை சோதிக்க சிவன் மாமரத்தை எரிக்க, பார்வதி, வாமனனை ப்ரார்த்திக்க, வாமனர் சங்கசக்ரகதாபாணியாக அம்ருத கிரணங்கள் கொண்டு மாமரத்தைத் தழைக்கச் செய்து, பார்வதியும் தாபம் தீர்ந்து, தவம் செய்ததாகவும், பார்வதியின் தாபத்தைத் துண்டித்தபடியால் பெருமாளுக்கு 'நிலாத்திங்கள் துண்டத்தான்' என்ற பெயர் உண்டாயிற்றாம். பெருமாள் அலங்காரப்பிரியர்.

சிவன், தன் தலையிலுள்ள கங்கையை பார்வதியின் தவத்தைக் கெடுக்க ஏவ, கங்கையும் வேகமாக வர, பார்வதி தன் தமக்கை என்று கருதி வணங்கியும் லக்ஷ்யம் செய்யாததால் மணலினால் செய்த லிங்கம் கரையாமல் இருக்க, பார்வதி அதை அணைத்துக்

கொள்ள, சிவன் சந்துஷ்டராகி அந்த லிங்கத்தில் ஆவிர்பவித்ததாக ஐதீஹம். பார்வதியின் வேண்டுகோளின்படி வாமனர் அவள் பக்கத்தில் இன்னும் இருப்பதாகப் புராண வரலாறு.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 2059 - 1 பாசுரம்.

## 50. திரு ஊரகம் (காஞ்சீபுரம்)

பெரிய காஞ்சீபுரத்தில் பஸ் நிலையத்திற்கு ஸமீபமாகவே உள்ளது.

**மூலவர்:** திரிவிக்ரமன், **உலகளந்த பெருமாள்**, நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** பேரகத்தான்.

**தாயார்:** அமுதவல்லி நாச்சியார், அம்ருதவல்லி.

**தீர்த்தம்:** நாக தீர்த்தம் (சேஷ தீர்த்தம்)

**விமானம்:** ஸாரஸ்ரீகர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ஆதிசேஷன்.

**விசேஷங்கள்:** இங்கு ஊரகம் (பேரகம்) தவிர நீரகம், காரகம், கார்வானம் ஆகிய 3 திவ்ய தேசங்களின் பெருமாள்கள் எழுந்தருளியிருக்கின்றனர். பலிசக்ரவர்த்தி பகவானைப் பணிந்து பகவான் த்ரிவிக்ரமாவதாரம் செய்தபொழுது பகவான் திருவடியின்கீழ் அகப்பட்டுக் கொண்டபடியால் திரிவிக்ரம கோலத்தை ஸேவிக்க முடியவில்லை. ஆகையால் திரிவிக்ரம கோலத்தை ஸேவிக்க வேண்டும் என்கிற பிரார்த்தனைக்கிணங்க ஸத்யவ்ரத க்ஷேத்ரத்தில் (காஞ்சீபுரத்தில்) அந்த அவதாரத்தை எடுத்துக் காண்பித்ததாக உலகளந்த பெருமாள் கோயில் வரலாறு. உலகளந்த பெருமாள், ஊரகம் இரண்டும் சேர்ந்து ஒரே திவ்யதேசமாகக் கருதப்படுகிறது. மிகப் பெரிய திருவுருவத்தை நிமிர்ந்து ஸேவிக்க முடியாமல் போன மஹாபலிக்காக உலகளந்த பெருமாள் ஸந்நிதிக்குப் பக்கத்தில் ஒரு சிறிய ஸந்நிதியில் எம்பெருமான் ஆதிசேஷனாய் திருக்கோலம் கொண்டு ஸேவை ஸாதித்ததாக ஊரக க்ஷேத்திர வரலாறு.

**மங்களாசாஸனம்:**

**திருமழிசையாழ்வார்:** 814, 815

**திருமங்கையாழ்வார்**: 2059, 2064, 2673 (70), 2674 (128 மொத்தம் 6 பாசுரங்கள்.

## 51. திருவெஃகா (காஞ்சீபுரம்)

இது காஞ்சீபுரத்திலுள்ள திவ்யதேசம் (மார்க்கம் 43, 4 காண்க).

அஷ்டபுயகரத்திலிருந்து வடக்கே சற்று தூரத்திலுள்ளது யதோக்தகாரி கோயில் என்று விசாரிக்கவும். (Pincode 631 501

**மூலவர்: யதோக்தகாரி**, சொன்னவண்ணம் செய்த பெருமாள் வேகாஸேது, புஜங்கசயனம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்**: கோமளவல்லி நாச்சியார்.

**தீர்த்தம்**: பொய்கைப் புஷ்கரிணி.

**விமானம்**: வேதஸார விமானம்.

**ப்ரத்யக்ஷம்**: ப்ரஹ்மா, பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், கணிகண்ணன்.

**விசேஷங்கள்**: கணிகண்ணன் என்ற சீடனுக்காக ஊரை விட்டே புறப்பட்ட திருமழிசையாழ்வார் பகவானை அழைக்க, பாம்பணையைச் சுருட்டிக்கொண்டு புறப்பட்டு, பிறகு அவர் கிடக்கச் சொல்லி வேண்டியபோது, பாம்பணையை விரித்துப் படுத்ததால், இவருக்கு சொன்னவண்ணம் செய்த பெருமாள் (வடமொழியில் யதோக்தகாரி) என்று பெயர். மற்ற திவ்ய தேசங்களைப்போல் அல்லாமல் இங்கு பகவான் வலமிருந்து இடமாக சயனித்துள்ளார்.

ஸத்யவ்ரதக்ஷேத்திரத்தில் பிரம்மா எம்பெருமான் தர்சனத்திற்காக ஸரஸ்வதியில்லாமல் தனியே வேள்வி செய்ய ஆரம்பித்ததாகவும் அப்போது ஸரஸ்வதி, வேகவதிநதியாக வந்து வேள்வியை அழிக்க ஓடி வந்ததாகவும், இவ்வெள்ளத்தைத் தடுக்க பெருமாள் அணை(ஸேது)யென குறுக்கே சயனித்தாராம். இதனாலேயே பெருமாளுக்கு 'வேகாஸேது' என்ற பெயர் ஏற்பட்டது. வேகவதி யணை—வெஃகணை—வெஃகா என்று மருவியது.

முதலாழ்வார்கள் மூவரில் முதல்வரான பொய்கையாழ்வார் இங்கேயுள்ள பொய்கை புஷ்கரிணியில் ஒரு பொற்றாமரையில்

அவதரித்ததாகவும் அதனாலேயே ஆழ்வாருக்கு அப்பெயர் ஏற்பட்டதாகவும் வரலாறு. இங்கு எழுந்தருளி இருக்கும் பிள்ளைலோகாசாரியார் பெரும் புகழ் பெற்றவர். இந்த ஸந்நிதியில் மணவாள மாமுனிகள் ஓராண்டு காலம் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் ஸாதித்தார். இங்கு விசேஷமாக உபதேச (ஜ்ஞாந) முத்திரையுடன் ஸ்வாமி எழுந்தருளியுள்ளார்.

**மங்களாசாஸனம்:**

**திருமழிசையாழ்வார்**: 814, 815, 2417

**திருமங்கையாழ்வார்**: 1854. 2059, 2064, 2065, 2673 (70), 2674 (127)

**பொய்கையாழ்வார்**: 2158

**பேயாழ்வார்**: 2307, 2343, 2345, 2357

**நம்மாழ்வார்**: 2503

மொத்தம் 15 பாசுரங்கள்.

## 52. திருக்காரகம் (காஞ்சீபுரம்)

பெரிய காஞ்சியில் (ஊரகத்தில்) உலகளந்த பெருமாள் கோயில் ப்ராகாரத்திலேயே உள்ளது.

**மூலவர்**: கருணாகரப் பெருமாள், நின்ற திருக்கோலம், தெற்கே திருமுக மண்டலம்.

**தாயார்**: பத்மாமணி நாச்சியார்.

**தீர்த்தம்**: அக்ராய தீர்த்தம்.

**விமானம்**: வாமன விமானம், ரம்ய விமானம்.

**ப்ரத்யக்ஷம்**: கார்ஹ மஹரிஷி

**குறிப்பு**: இந்தத் திவ்ய தேசம் இருந்த இடம், அதன் தீர்த்தம் இருக்கும் இடம் முதலிய ஒரு செய்தியும் தெரியவில்லை.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்**: 2059 - 1 பாசுரம்.

## 53. திருக்கார்வானம் (காஞ்சீபுரம்)

பெரிய காஞ்சியில் (ஊரகத்தில்) உலகளந்த பெருமாள் கோயில் மேற்கு ப்ராகாரத்திலேயே ஒரு ஸந்நிதியாக உள்ளது. (மார்க்கம் 43 காண்க).

**மூலவர்: கார்வானர்**, நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** கமலவல்லி (தாமரையாள்)

**தீர்த்தம்:** கௌரீ தடாகம் (தராதரதீர்த்தம்)

**விமானம்:** புஷ்கல விமானம்

**ப்ரத்யக்ஷம்:** கௌரி (பார்வதி).

**குறிப்பு:** இந்த திவ்ய தேசம், தீர்த்தம் - இவை ஏற்கெனவே இருந்த இடம் தெரியவில்லை.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 2059 - 1 பாசுரம்.

## 54. திருக்கள்வனூர் (காஞ்சீபுரம்)

பெரிய காஞ்சீபுரத்தில் காமாக்ஷி அம்மன் கோயிலுக்குள், அம்மன் கர்ப்பக்ரஹத்துக்கு வலது பக்கத்தில் இருக்கிறது.

**மூலவர்: கள்வர்,** நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** அஞ்சிலைவல்லி (அஞ்சிலை) நாச்சியார்.

**தீர்த்தம்:** நித்யபுஷ்கரிணி.

**விமானம்:** வாமன விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** அச்வத்த நாராயணன்.

**விசேஷங்கள்:** ஒரு காலத்தில் சிவபெருமானுக்கும் பார்வதிக்கும் தர்க்கம் ஏற்பட, சிவபெருமான் கோபமடைந்து பார்வதியை சபிக்க, பார்வதி சிவனடி பணிந்து க்ஷமிக்க வேண்ட, சிவன் ஆக்ஞைப்படி ஒருகாலால் நின்று வாமனரை நோக்கித் தவம் செய்து காமாக்ஷி என்று பெயர் பெற்று, சிவபெருமானை மணந்ததாக ஐதீஹம்.

ஸ்ரீமன் நாராயணன் காம கோஷ்டத்தில் பஞ்ச தீர்த்தத்தின் கரையில் லக்ஷ்மி, பார்வதியுடன் ஸல்லாபம் செய்வதை ஒளிந்து கேட்டபடியால், பார்வதி, பெருமாளுக்கு கள்வன் என்ற பெயர் சூட்டினாள். பார்வதி பிரார்த்தனைக்கிணங்க பகவான் பூதத்தின் மேல் நின்று, மறுபடி இருந்து, மறுபடி கிடந்தபடியால், நின்றான், இருந்தான், கிடந்தான் என்ற ஸந்நிதிகள் ஏற்பட்டுள்ளன.

**குறிப்பு:** திருநெடுந்தாண்டகத்தில் "காரகத்தாய் கார் வானத்துள்ளாய் கள்வா" என்று குறிப்பிட்டுள்ளதைத் தவிர, ஸ்தலத்தைப் பற்றி ஒரு தகவலும் இல்லை. தாயாரும் தீர்த்தமும் இப்போது காணப்படவில்லை. ஸ்ரீகாமாக்ஷி அம்மன் திருக்குளத்தின் வடகிழக்கு மூலையில் ஒரு ஸந்நிதியில் மூன்று அடுக்குகளில் "நின்றான், இருந்தான், கிடந்தான்" என்று மூன்று திருக்கோலங்கள் உள்ளன. இதற்கும் மங்களாசாஸனத்துக்கும் உள்ள ஸம்பந்தத்தைச் சிலர் ஸந்தேஹிக்கின்றனர்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 2059 - 1 பாசுரம்.

## 55. திருப்பவளவண்ணம் (காஞ்சீபுரம்)

பெரிய காஞ்சீபுரத்தில் ஏகாம்பரநாதர் கோயிலுக்குக் கிழக்கே, அருகிலுள்ளது. இதற்கு ½ கி.மீ. மேற்கே உள்ள பச்சைவண்ணரின் ஸந்நிதி மங்களாசாஸனம் செய்யப்படவில்லை. ஆனாலும், பவளவண்ணன், பச்சைவண்ணன் ஸந்நிதிகள் இரண்டையுமே ஒரே திவ்யஸ்தலமாகச் சேர்த்தே ஸேவிப்பது வழக்கமாகவிருக்கிறது. இரண்டு ஸந்நிதிகளும் எதிரெதிராக அமைந்துள்ளன.

**மூலவர்:** பவளவண்ணன், நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பவளவல்லி (தனிக்கோயில் நாச்சியார்)

**தீர்த்தம்:** சக்ர தீர்த்தம்.

**விமானம்:** ப்ரவாள விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** அச்விநி தேவதை, பார்வதி.

**விசேஷங்கள்:** இந்த ஸந்நிதிகள் கங்கை கொண்டான் மண்டபத்திலிருந்து கிழக்காகச் செல்லும் செங்கழுநீரோடைத் தெருவின் இடையில் வலதுபுறம் செல்லும் சாலையில் எதிரெதிராக

உள்ளன. பச்சைவண்ணர் ஆதிசேஷன் மீது வீற்றிருந்த திருக்கோலத்தில் பரமபதநாதனாக எழுந்தருளி உள்ளார். ப்ருகுமஹரிஷிக்கு பிரத்யக்ஷம்.

**குறிப்பு:** "பனிவரையின் உச்சியாய், பவளவண்ணா" என்ற திருநெடுந்தாண்டகத்துப் பாசுரம் பெருமாள் திருமேனியின் நிறத்தைக் குறிப்பிடுகின்றதே தவிர, இந்த ஸ்தலத்தின் அடையாளம் எதையும் குறிப்பிடவில்லை. எனவே, இதுதான் பழைய திவ்ய தேசமா அல்லது அது வேறெங்காவது இருக்கிறதா என்று அபிப்ராய பேதங்கள் உள்ளன. ஆயினும் பெரியவர்கள் வெகு காலமாக இதைத்தான் திவ்யதேசமாகக் கருதி ஸேவித்து வருகிறார்கள். பச்சைவண்ணப் பெருமாளைப் பற்றியும் ஆழ்வார் பாசுரத்தில் குறிப்பிடவில்லை.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 2060 - 1 பாசுரம்.

## 56. திருப்பரமேச்சுர விண்ணகரம்

(காஞ்சீபுரம்-வைகுண்ட பெருமாள் கோயில்)

பெரிய காஞ்சீபுரத்தில், காஞ்சீபுரம் ரயிலடியிலிருந்து சற்று தூரத்தில் உள்ளது. காமாட்சியம்மன் கோயிலுக்குக் கிழக்கே பஸ் ஸ்டாண்டிற்குப் பின்புறமுள்ள கிழக்கு ராஜவீதியில் வலது புறம் செல்லும் சாலையில் உள்ளது.

**மூலவர்:** பரமபத நாதன், **வைகுந்தநாதன்**, வீற்றிருந்த திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** வைகுந்தவல்லி (தனிக்கோயில் நாச்சியார்)

**தீர்த்தம்:** ஐரம்மத தீர்த்தம்.

**விமானம்:** முகுந்த விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** பல்லவராஜன்

**விசேஷங்கள்:** விமானம் மூன்று அடுக்காக அஷ்டாங்க விமானமாக உள்ளது. கீழ் அடுக்கில் (அடியில்) பெருமாள் வீற்றிருந்த நிலையிலும், மத்தியில் (இரண்டாவது அடுக்கில்) ஸ்ரீதேவி பூதேவியுடன் ரங்கநாதன் சயனத்திருக்கோலத்திலும், மேல் அடுக்கில் நின்ற திருக்கோலத்திலும் உள்ளனர். ஆனால் இவர்களுக்குப் பூஜை

இல்லை. விதர்ப்ப தேசத்தை அரசாண்ட விரோசனனுக்கு புத்திர ஸந்ததி இல்லாமல் காஞ்சீபுரத்திலுள்ள கைலாஸநாதரை பூஜை செய்ய, அவருடைய அருளால் விஷ்ணுவின் த்வாரபாலர்கள் இருவரும் பல்லவன், வில்லவன் என்ற பெயரில் விஷ்ணு பக்தர்களாகப் பிறக்க, புத்திரர்கள் புண்யகோடி விமானத்துக்கு வாயு மூலையில் அச்வமேத யாகம் செய்ய, ஸ்ரீமந் நாராயணன் அவர்களுக்கு ஸ்ரீவைகுண்ட நாதனாக ஸேவை ஸாதித்தபடி வீற்றிருந்த திருக்கோலத்துடன் இன்றும் பக்தர்களுக்கு ஸேவை ஸாதிப்பதாக ஐதீஹம். விரஜையும் அங்கே புஷ்கரிணியாக அமைந்திருக்கிறது.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1128-1137

மொத்தம் 10 பாசுரங்கள்.

# 57. திருப்புட்குழி

காஞ்சீபுரத்திலிருந்து 11 கி.மீ. மேற்கே சென்னை-வேலூர் சாலையில், பாலுசெட்டி சத்திரம் என்ற ஊரிலிருந்து இடது புறம் ½ கி.மீ. (ஹைவே) தூரத்தில் "வெள்ளை கேட்" என்று சொல்லப்படும் லெவல் க்ராஸிங் தாண்டி வலது பக்கத்தில் உள்ளது. சென்னையிலிருந்து 50 மைல். காஞ்சீபுரத்திலிருந்து பஸ் வசதி உண்டு. சாலையில் இறங்கி, ½ கி.மீ. தூரம் தெற்கே நடந்து சென்று, கோயிலை அடைய வேண்டும். இவ்வூரில் வசதிகள் ஒன்றும் இல்லை.

**மூலவர்: விஜயராகவப் பெருமாள்**, ஜடாயு வேண்டுதலுக்கு இணங்கி பரமபதத்தில் இருக்கும் நிலையில் வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** மரகதவல்லித் தாயார் (தனிக் கோயில் நாச்சியார்)

**தீர்த்தம்:** ஜடாயு தீர்த்தம்.

**விமானம்:** விஜயகோடி விமானம் (வீரகோடி விமானம்).

**ப்ரத்யக்ஷம்:** ஜடாயு.

**விசேஷங்கள்:** பிள்ளைப் பேறு வேண்டும் பெண்கள், கொஞ்சம் பயிற்றை மடைப்பள்ளியில் கொடுத்து, வறுத்து, நனைத்து மடியில் கட்டிக்கொண்டு தூங்குவார்கள். வறுத்த பயிர் முளைத்தால் பிள்ளைப்

பேறு உண்டு என்று அர்த்தமாம். தாயார் மஹிமையால் வறுத்த பயிறு முளைப்பதால் "மரகதவல்லி" என்று திருநாமம் ஏற்பட்டதாகப் புராண வரலாறு.

ராமானுஜரின் குருவான யாதவப்ரகாசர் இங்குதான் சிஷ்யர்களுக்கு (குறிப்பாக ராமானுஜருக்கு) வேதாந்த பூர்வபக்ஷங்களைக் கற்பித்தார்.

வாமன புராணத்தில் இத்தலத்தைப் பற்றி விசேஷித்து சொல்லப் பட்டிருக்கிறது. இந்த ஸ்தலத்தில் ஸீதையைத் தேடப் போன போது ராமன் சிறிது காலம் தங்கி இருந்ததாகவும் அப்போது ஜடாயுவுக்குத் தர்ப்பணம் செய்து மோக்ஷமளிக்க, பூமியைக் கீறிக் கங்கையை ஆவாஹனம் செய்து ஜடாயு தீர்த்தத்தை உண்டாக்கிய தாகவும், எனவே, இத்தலத்திற்குத் திரு புள்குழி என்று பெயர் ஏற்பட்டதாகவும் வரலாறு. கோயிலுக்கு எதிரில் ஜடாயு ஸந்நிதி இருக்கிறது. மூலவர் தொடையின் மேல் ஜடாயுவை வைத்துக்கொண்டு ஸம்ஸ்காரம் செய்யும் நிலையில் எழுந்தருளி இருக்கிறார். அந்த தாபத்தை தாங்க முடியாத ஸ்ரீதேவியும் பூதேவியும் இடம்வலமாக மாறி எழுந்தருளியுள்ளனர். நம்பிள்ளையின் சிஷ்யரான பின்பழகாரம் பெருமாள் ஜீயர், திருப்புட்குழி ஜீயர் முதலிய மகான்கள் அவதரித்த ஸ்தலம் இதுவே. இந்த ஊர் குதிரை வாகனம் உண்மையான குதிரை போலவே அசையும் உறுப்புகள் கொண்டது. ஸ்ரீராமாநுஜரும், ஸ்ரீமணவாளமுனிகளும் பல முறை மங்களாசாஸனம் செய்த இடம். நிகமாந்த தேசிகனுக்கும் மணவாளமாமுனிக்கும் தனி சந்நிதிகள்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1115, 2674 (117)

மொத்தம் 2 பாசுரங்கள்.

## 58. திருநின்றவூர் (திண்ணனூர்)

சென்னை-அரக்கோணம் ரயில்பாதையில் திருநின்றவூர் என்ற ரயில்வே ஸ்டேஷனிலிருந்து சுமார் 2 கி.மீ. தெற்கே சென்று கோயிலை அடைய வேண்டும். (Pincode 602 024) சென்னையிலிருந்து இவ்வூருக்கே பஸ் வசதியும், இதர வசதிகளும் உண்டு. சென்னை-பூந்தமல்லி-திருவள்ளூர் பஸ் மார்க்கம். பூந்தமல்லியிலிருந்தும், அம்பத்தூர் எஸ்டேட்டிலிருந்தும் பஸ் வசதி உண்டு. காரிலும் திருமழிசை தாண்டி அடையலாம்.

**மூலவர்:** பக்தவத்ஸலப் பெருமாள், பத்தராவிப் பெருமாள், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ஸுதாவல்லி, சவித்ரி (என்னைப் பெற்ற தாயார்)

**தீர்த்தம்:** வருணபுஷ்கரிணி, விருத்தக்ஷீர நதி.

**விமானம்:** ஸ்ரீநிவாஸ (உத்பல) விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** வருணன்.

**விசேஷங்கள்:** ஸ்ரீமந்நாராயணன் முன் ஒரு காலத்தில் யோகநித்திரையில் இருந்த போது, "திரு"வான மஹாலக்ஷ்மி தேவஸ்த்ரீகளுடன் (பாதுகாவலாக சக்ரத்தாழ்வாரும், ஆதிசேஷனும் உடன்வர) இந்நகருக்கு எழுந்தருளி, அவள் கடாக்ஷத்தினால் இவ்வூரில் எல்லா செல்வங்களும் நிரம்ப, "திருநின்றவூர்" என்றாயிற்று. இதுவே திண்ணனூர் என மருவியதாகச் சொல்வர். பக்கத்தில் ஏரிகாத்த ராமர் கோயில் உள்ளது. வராஹப்பெருமாள் தோன்றியதால் வராஹ க்ஷேத்ரம் என்று இந்த ஸ்தலம் பாராட்டப்படுகிறது.

குறிப்பு: இக்கோயில் ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஆதீனத்துக்குட்பட்டது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1089, 1642

மொத்தம் 2 பாசுரங்கள்.

## 59. திருஎவ்வுள்

(திருவள்ளூர் - புண்யாவர்த்த, வீக்ஷாரண்ய க்ஷேத்ரம்)

சென்னை-அரக்கோணம் ரயில்பாதையில் திருவள்ளூர் ஸ்டேஷனிலிருந்து 4-5 கி.மீ. வண்டியில் அல்லது டவுன் பஸ்ஸில் போகவேண்டும். சென்னையிலிருந்து பல வெளியூர் பஸ்களில் நேராகக் கோயில் வாசலுக்கே செல்ல முடியும். காரில் திருப்பதி செல்பவர்கள் வழியில் இந்த ஸ்தலத்தில் சேவிக்கும் வசதிகளும் உண்டு. அஹோபில மட பரிபாலனம். (Pincode 602 001)

**மூலவர்:** **வீரராகவப் பெருமாள்**, புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** கனகவல்லி (வஸுமதி) (தனிக்கோயில் நாச்சியார்).

**தீர்த்தம்:** ஹ்ருத்தாபநாசினி புஷ்கரிணி.

**விமானம்:** விஜயகோடி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சாலிஹோத்ரமுனி, சதுர்முகன், சங்கரன்.

**விசேஷங்கள்:** மூலவர் (வீரராகவன்) வலது திருக்கையை சாலிஹோத்ர முனிவரின் தலைமீது வைத்தபடியும் நான்முகனுக்கு வேதங்களை உபதேசிக்கும் வண்ணமாக இடது திருக்கரத்தில் ஞான முத்திரையோடு எழுந்தருளியுள்ளார். அமாவாசையன்று இந்தப் புஷ்கரிணியில் ஸ்நாநம் செய்வது மிகவும் புண்யகரமானது. இது அஹோபிலமடம் ஜீயரின் மேற்பார்வையில் உள்ளது. திருமால் சாலிஹோத்ர மஹரிஷிக்கு ப்ரத்யக்ஷமாகி, "உறைதற்குரிய உள் எவ்வுள்" என்று வினவியதால் இத்தலத்திற்கு "திரு எவ்வுள்" என்று திருநாமமாயிற்று. மதுகைடபர்களைக் கொன்று வேதியர்களையும் தாபஸர்களையும் ரக்ஷித்த ஸ்தலம். ஹ்ருத்தாபநாச புஷ்கரிணியில் தீர்த்தமாடி, வீரராகவனையும், விஜயகோடி விமானத்தையும் ஸேவிப்பதனால் எல்லா நோய்களும் பூண்டோடு அழியுமாதலால் பகவானுக்கு 'வைத்ய வீரராகவன்' என்ற திருநாமமும் உண்டு. ராமலிங்க அடிகளார் தன் தீராத வயிற்றுவலியை நீக்கிய இப்பெருமாள் பேரில் "போற்றி பஞ்சகம்" பாடியுள்ளார்.

அருகில் ஸ்ரீநிவாஸப்பெருமாள், ஸ்ரீவராஹஸ்வாமி, காக்கவூரில் ஆஞ்சநேயர், மற்றும் வடக்கு குளக்கரையில் தீர்த்தஸ்வரஸ்வாமி கோயில்கள் உள்ளன.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1058-1067, 2674 (116)

**திருமழிசையாழ்வார்:** 2417

மொத்தம் 12 பாசுரங்கள்.

## 60. திருவல்லிக்கேணி

(ப்ருந்தாரண்ய க்ஷேத்ரம்)

சென்னை-எழும்பூர் ரயில் நிலையத்திலிருந்து 5 கி.மீ. திருமயிலை Metro ரயில் பாதையில் தனி ஸ்டேஷன் உண்டு. பல இடங்களிலிருந்து டவுன் பஸ்கள் செல்கின்றன. எல்லா வசதிகளும் உண்டு. இந்த ஆலயத்தில் 5 ஸந்நிதிகள் உள்ளன.

**(1) மூலவர்:** வேங்கடகிருஷ்ணன், ருக்மிணி பிராட்டியுடன்,

(பலராமன், ஸாத்யகி, அநிருத்தன், ப்ரத்யும்னன் இவர்களோடு) நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்**: பார்த்தஸாரதி.

(2) மூலவர்: ரங்கநாதன், மன்னாதன், புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம். [இந்த ஸந்நிதியிலேயே வராஹப்பிரானும் நரசிங்கப்பிரானும் (மூலவர்) எழுந்தருளியுள்ளனர்.]

தாயார்: வேதவல்லி (தனிக்கோயில் நாச்சியார்)

(3) மூலவர்: ஸீதா, லக்ஷ்மண, பரத, சத்ருக்ன, ஹனுமாருடன் ஸ்ரீராமர், நின்ற திருக்கோலம், தெற்கே திருமுக மண்டலம்.

(4) மூலவர்: வரதராஜன், தேவப்பெருமாள், கருடன் மீதமர்ந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

(5) மூலவர்: தெள்ளிய சிங்கர் (நரஸிம்ஹன்), வீற்றிருந்த திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

வடமேற்கு பக்கம் தனி ஆண்டாள் ஸந்நதியும் உண்டு.

**தீர்த்தம்**: கைரவினி ஸரஸ் (அல்லிக்கேணி) - இந்தப் புஷ்கரிணியில் இந்த்ர, ஸோம, மீன, அக்னி, விஷ்ணு என்ற ஐந்து தீர்த்தங்கள் சூழப்பட்டதாக ஐதீஹம்.

**விமானம்**: ஆநந்த விமானம், ப்ரணவ விமானம், புஷ்பக விமானம், சேஷ விமானம், தைவிக விமானம்.

**ப்ரத்யக்ஷம்**:ருக்மணிபிராட்டி, தொண்டைமான், ஸுமதிராஜன், அர்ஜுனன், ப்ருஹு மஹரிஷி, மார்க்கண்டேயர், மதுமான் மஹரிஷி, ஸப்தரோமா, அத்ரிமஹரிஷி, ஜாஜலிமஹரிஷி, அநிருத்தன், ப்ரத்யும்னன், பலராமன்.

**விசேஷங்கள்**: திருவேங்கடமுடையான், ஸுமதி என்னும் துண்டீர மண்டலாதிபதிக்கு, பாரத யுத்தத்தில் அர்ஜுனனுக்கு ஸாரத்யம் செய்த திருக்கோலத்துடன் ஸேவை ஸாதிக்கிறேன் என்று வாக்களித்தபடி, ஆத்ரேய மஹரிஷியைக் கொண்டு பார்த்தஸாரதியை, சங்கம் வலக்கையிலும் தான முத்திரை இடக்கையிலுமாக, ப்ரமாணப்படி அர்ச்சா விக்ரஹத்தை அமைத்து ருக்மணி, பலராமன், ஸாத்யகி, அநிருத்தன், ப்ரத்யும்னன், இவர்களோடு வைகாநஸ விதியாலே ப்ரதிஷ்டை செய்ததாக ஐதீஹம்.

மூலவருக்கு இரண்டே திருக்கரங்கள். வலது கையில் சங்கம், இடது கையில் கோல் (திருப்பதியில்போல்). தான் வளர்ந்த குல வழக்கத்திற்கேற்ப பெரிய மீசை உண்டு. திருவேங்கடநாதனே கண்ணனாக (பார்த்தஸாரதியாக) ஸேவை ஸாதிப்பதாகக்

கூறப்பட்டுள்ளது. வலது புறம் ருக்மிணி பிராட்டியும், இடதுபுறம் தம்பி சாத்யகியும், தெற்கே அண்ணா பலராமனும், வடக்கே பிள்ளை பிரத்யும்னனும் பேரன் அநிருத்தனும் எழுந்தருளி யிருக்கின்றனர்.

ஸ்ரீக்ருஷ்ணன் குடும்பஸமேதனாய் எழுந்தருளி இருப்பது இத்தலத்தில் மட்டுமே. அழகிய அல்லி மலர்கள் நிரம்பிய குளத்தை உடைய ஊர் என்ற காரணத்தினால் திருவல்லிக்கேணி என்று வழங்கி வருகிறது. திருப்பதி பெருமாள் ஸுமதி என்ற அரசனுக்கு இத்தலத்தில் வேங்கடக்ருஷ்ணனாக ஸேவை ஸாதித்தருளியபடியால் இரண்டாவது திருப்பதி என்று அழைக்கிறார்கள். புரட்டாசி சனிக்கிழமைகள் திருப்பதியைப்போல் விசேஷம் வாய்ந்தவை. கண்ணன் அர்ஜுனனுக்கு ஸாரதியாய் இருந்து பீஷ்மர் விட்ட அம்புகளை அர்ஜுனனுக்காக ஏற்றதைக் காண்பிக்க, இன்றைக்கும் ஸ்ரீபார்த்தஸாரதி (உத்ஸவர்) திருமுக மண்டலத்தில் வடுக்களைக் காணலாம்.

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் திருமலையைப் போலவே ஸ்ரீவேங்டக்ருஷ்ணனுக்கும் திருமஞ்சனம் நடைபெறுகிறது. இக்கோயிலில் ஐப்பசித் திருமூல நன்னாளில் நடைபெறும் கைத்தலஸேவை சிறப்பு வாய்ந்தது. திருமழிசையாழ்வார், ராமாநுஜர், ஸ்ரீமணவாள மாமுனிகள் இங்கேயே எழுந்தருளி இருந்து மங்களாசாஸனம் செய்துள்ளனர்.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1068-1077.

**பேயாழ்வார்:** 2297.

**திருமழிசையாழ்வார்:** 2416.

மொத்தம் 12 பாசுரங்கள்.

## 61. திருநீர்மலை (தோயாத்ரி க்ஷேத்ரம்)

சென்னை-தாம்பரம் ரயில் பாதையில் பல்லாவரம் ஸ்டேஷனிலிருந்து சுமார் 6 கி.மீ. தூரத்தில் உள்ளது. டவுன் பஸ் வசதியும், மற்ற வசதிகளும் உள்ளன. (Pincode 600 044) G.S.T. Road-இலிருந்து இப்போது நல்ல தார்ரோடு இருப்பதால் சென்னையிலிருந்து சௌகரியமாக வண்டியில் போகலாம். புதிதாக போடும் ரிங்க்ரோடும் ஊர் அருகிலேயே போகிறது. இங்கு ஒரு

சிறிய மலை இருக்கிறது. மலைக்கு செல்லும் படிக்கட்டுகள் முதலியன புதுப்பிக்கப்பட்டுள்ளன.* பெருமாள் கீழே ஒருவராகவும், மலை மேலே மூவராகவும் (நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தான் என்ற திருப்பெயர்களில்) நான்கு திருக்கோலங்களில் எழுந்தருளியிருக்கிறார்.

**மலை அடிவாரக் கோயில்**

(1) **மூலவர்:** நீர்வண்ணன், நீலமுகில்வண்ணன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** அணிமாமலர் மங்கை (தனிக் கோயில் நாச்சியார்).

**மலைமேல் கோயில்**

(2) **மூலவர்:** (இருந்தான்) சாந்த நரஸிம்மன், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

(3) **மூலவர்** (கிடந்தான்) ரங்கநாதன், மாணிக்க சயனம், தெற்கே திருமுக மண்டலம்

**தாயார்:** ரங்கநாயகி (தனிக் கோயில் நாச்சியார்), கிழக்கே திருமுக மண்டலம்.

(4) **மூலவர்:** த்ரிவிக்ரமன் (நடந்தான்), நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

மலை அடிவாரத்தில் சக்ரவர்த்தி திருமகனுக்குத் தனி ஸந்நிதி உண்டு. கிழக்கே திருமுக மண்டலம்.

**தீர்த்தம்:** மணிகர்ணிகா தடாகம் - க்ஷீர புஷ்கரிணி, காருண்ய புஷ்கரிணி, ஸித்த புஷ்கரிணி, ஸ்வர்ண புஷ்கரிணி என்று நான்கு தீர்த்தங்கள் அடங்கியது.

**விமானம்:** தோயகிரி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** தொண்டைமான், ப்ருகு, மார்க்கண்டேயர்.

**விசேஷங்கள்:** வால்மீகி மஹரிஷி இந்தத் தலத்திற்கு வந்து மலைமீது ஏறி ரெங்கநாதன், நரஸிம்மன், த்ரிவிக்ரமன் என்ற மூன்று மூர்த்திகளையும் வணங்கி வழிபட்டு, கீழே இறங்கி மலை அடிவாரத்தில் உள்ள ஸரஸ்ஸில் கிழக்கு முகமாக நின்று கொண்டு ஸ்ரீராமனை த்யானம் செய்ய, ரெங்கநாதன் ராமனாகவும், லக்ஷ்மீ ஜானகியாகவும், ஆதிசேஷன் லக்ஷ்மணனாகவும், சங்கு சக்ரங்கள்

* இத்திருப்பணியில் சிறிதளவு ஈடுபடக்கூடிய பாக்யம் **லிப்கோ** ஸ்தாபனத்தாருக்கும் கிடைத்தது.

சத்ருக்ன, பரதர்களாகவும், விஷ்வக்ஸேனர் ஸுக்ரீவனாகவும், கருடன் ஹநுமானாகவும் காக்ஷி தந்து மறைந்த பொழுது, ரிஷி பிரார்த்தனைப் படி அற்புதமான ரூபமான நீர்வண்ணனாக ஸேவை ஸாதித்ததாகவும் ஐதீஹம்.

மங்களாசாஸனம் செய்யத் திருமங்கையாழ்வார் எழுந்தருளிய போது இந்த மலையைச் சுற்றி நீர் அரண்போல் சூழ்ந்திருந்ததால், ஆறு மாதகாலம் ஊருக்கு வெளியே காத்திருந்ததாகவும், அதனால் இம்மலைக்கு 'நீர்மலை' என்று பெயர் உண்டானதாக புராண வரலாறு. ஆழ்வார் தங்கி இருந்த இடம் இன்றும் திருமங்கை ஆழ்வார்புரம் என்று அழைக்கப்படுகிறது. அருகே, 4 கி.மீ. மேற்கில் குன்றத்தூரில் புராதனக் கோயிலான திருஊரகப் பெருமாள் கோயில் உள்ளது.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1078-87, 1115, 1521, 1554, 1660, 1765, 1848, 2069, 2673 (73), 2674 (130).

**பூதத்தாழ்வார்:** 2227.

மொத்தம் 20 பாசுரங்கள்.

## 62. திரு இடவெந்தை (திருவடந்தை)

சென்னை-கோவளம் வழியாக மகாபலிபுரம் செல்லும் East Coast Highway இல் (மெயின்ரோடிலேயே மேற்கில்) சுமார் 40 கி.மீ. தூரத்திலுள்ளது. கோயில் வாசலிலேயே. இறங்கலாம். பஸ் வசதி உண்டு. வேறு வசதிகள் இல்லை.

**மூலவர்:** லக்ஷ்மீ வராஹப் பெருமாள், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** நித்யகல்யாணப் பெருமாள். (தாடையில் பொட்டுடன் எழுந்தருளி இருக்கிறார்).

**தாயார்:** கோமளவல்லி நாச்சியார். ஆண்டாள், ஸ்ரீரங்கநாதன், ஸ்ரீரங்கநாயகி ஸந்நிதிகளும் உண்டு.

**தீர்த்தம்:** கல்யாண தீர்த்தம், வராஹ தீர்த்தம்.

**விமானம்:** கல்யாண விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** மார்க்கண்டேயர்.

**விசேஷங்கள்:** காலவ மஹரிஷியின் 360 பெண்களையும் பகவான் ஒரே கன்னிகையாக்கி மடியில் வைத்துக் கொண்டு 360 கன்னிகைகளை 360 நாள் கல்யாணம் செய்து கொண்டதாக பாவிப்பதால் நித்ய கல்யாணன் என்றழைக்கப்படுகிறார். இடப் புறத்தில் பிராட்டியை ஏந்தியுள்ளபடியால் திருஇடஎந்தை எனப் பெயர் பெற்றது. மணவாள மாமுனிகளிடம் மங்களாசாஸனம் பெற்ற பெருமாள். பெருமாளை முறையாக ஸேவித்தால் தடைபட்டு வரும் திருமணம் சீக்கிரம் கைகூடுவதாக நம்பிக்கை.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1021, 1108-1117, 2673 (73), 2674 (119) — 13 பாசுரங்கள்.

## 63. திருக்கடல்மல்லை (மஹாபலிபுர க்ஷேத்ரம் அர்த்த சேது)

சென்னையிலிருந்து 55 கி.மீ. தூரத்திலும், திருவிடவெந்தையி லிருந்து சுமார் 15 கி.மீ.க்கு அப்பாலும் உள்ளது. கிழக்கு கடற்கரை சாலை, பழைய மஹாபலிபுரம் ரோடு இரண்டிலுமே பஸ் வசதியும் ஊரில் மற்ற வசதிகளும் உண்டு. (Pincode 603 104)

**மூலவர்: ஸ்தலசயனப் பெருமாள்,** சயனத் திருக்கோலம், புஜங்சயனம், கிழக்கே திருமுக மண்டலம். வலது திருக்கரத்தை திரு மார்பின் மீது உபதேசமுத்திரையாக வைத்து, 'ஞானத்தமிழ் புரிந்த நான்' என்பதை விளக்குகிறார்.

**உத்ஸவர்:** உலகுய்ய நின்ற பெருமாள்.

**தாயார்:** நிலமங்கைத் தாயார். (தனிக் கோயில் நாச்சியார், அமர்ந்த திருக்கோலம்)

**தீர்த்தம்:** புண்டரீக புஷ்கரிணி, கருடநதி.

**விமானம்:** ககனாக்ருதி விமானம் (அனந்த நிலை விமானம்)

**ப்ரத்யக்ஷம்:** புண்டரீக மஹரிஷி.

**விசேஷங்கள்:** பூதத்தாழ்வார் (கோயிலுக்கு எதிரேயுள்ள நந்தவனத்தில் குருகத்தி மலரில்) அவதாரஸ்தலம். இது கலைச் சிற்பங்கள் நிறைந்த ஸ்தலம். சிற்பங்களுள் முக்கியமானவை பகீரதன் தவம், பஞ்சபாண்டவர் மண்டபம், கோவர்த்தன மண்டபம்,

அர்ச்சுனன் தவம், பஞ்ச பாண்டவர்கள் ரதம் முதலியன. இதை அர்த்தஸேது என்று அழைக்கிறார்கள். இப்பெருமாள் கோயில் விஜயநகர அரசன் பராங்குசனால் கட்டப்பட்டது என்று அறியப்படுகிறது. கடற்கரையிலிலுள்ள பூஜையில்லாத கோயிலிலும் ஸ்தலசயனப் பெருமாள் அழகாகச் சயனித்திருக்கிறார். ஆண்டாள், ராமன் ஸந்நிதிகளும் உள்ளன. புண்டரீக மஹரிஷி, தாமரை புஷ்பங்களைக் கொண்டு க்ஷீராப்தி நாதனை அர்ச்சனை செய்ய நினைத்து, புஷ்பங்களைப் பறித்து ஒரு கூடையில் வைத்துக் கிழக்குப் பக்கமாகச் செல்ல, சமுத்ரம் வழியை அடைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்து பக்தி மேலீட்டால் சமுத்திர ஜலத்தை கைகளால் இறைத்து விடலாம் என்று நினைத்து இறைக்க ஆரம்பிக்க, பகவான் வ்ருத்த ப்ராம்மண வேடம் கொண்டு, அவரை ஆகாரம் கேட்டு, ஆகாரம் கொண்டு வருவதற்குள் (ரிஷி தான் ஆராதிக்க வேண்டும் என்று எண்ணிய திருப்பாற்கடலில் திரு ஆதிசேஷன் மேல் சயனித்திருக்கும் திருக்கோலத்தில்) புண்டரீகர் கூடையில் வைத்திருந்த வாடாமல் இருந்த தாமரை புஷ்பங்களை சாற்றிக்கொண்டு மிக கம்பீரமாக சயன திருக்கோலத்தில் ஸேவை ஸாதிக்க, 'ஸ்தலசயனப் பெருமாள்' என்ற பெயர் வழங்கி வருவதாக ஐதீஹம். கோயிலில் எம்பெருமான் வெறும் தரையிலேயே சயனித்து, திருவடியருகில் புண்டரீக ரிஷி கைகூப்பிய வண்ணம் ஸேவை தருகிறார். ஸ்ரீமணவாள மாமுனிகள், பிள்ளைலோகம் ஜீயர் மங்களா சாஸனம் செய்த ஸ்தலம்.

திருவிடவெந்தையில் பிராட்டி இடது புறத்தில் உள்ளதுபோல் இங்கு வலது புறம் உள்ளதால், இக்கோயிலை "வலவெந்தை" என்பர்.

**குறிப்பு:** இந்த ஸந்நிதி பிள்ளைலோகர் திருவம்சத்தினருக்கு உரியதாக விளங்குகிறது. கல்தேருக்குச் செல்லும் வழியில் ஞானப்பிரான் எழுந்தருளியுள்ளார். பழைய கோயில்கள் பல கடலால் சிதைந்துவிட, இப்போது காணும் கோயில் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் விஜயநகர வம்சத்தைச் சேர்ந்த பராங்குச மன்னனால் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. சமீபத்தில் 1998-ல் கோயில் புதுப்பிக்கப்பட்டு மஹாசம்ப்ரோக்ஷணம் நடைபெற்றது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1088-1107, 1195, 1551, 2050, 2060, 2673 (73), 2674 (120).

**பூதத்தாழ்வார்:** 2251.

மொத்தம் 27 பாசுரங்கள்.

## 64. திருக்கடிகை (ஷோளிங்கர்-சோளசிங்கபுரம்-சோளிங்கபுரம்)

சென்னை-பெங்களூர் ரயில் மார்க்கம், அரக்கோணத்திலிருந்து சுமார் 27 கி.மீ. வாலாஜாப்பேட்டையிலிருந்து சுமார் 23 கி.மீ. பஸ்ஸில் வரலாம். அதேபோல் திருத்தணியிலிருந்தும், சித்தூரிலிருந்தும் பஸ்ஸில் வரலாம். சோளிங்கர் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 12 கி.மீ. வருவது ஸெளகர்யமாக இராது. சென்னையிலிருந்து நேராக பஸ்ஸிலும் போகலாம். சுமாரான வசதிகள் உண்டு. இங்கு கீழே உத்ஸவருக்கு ஒரு கோயிலும், மலைமேல் மூலவருக்கு ஒரு கோயிலும், ஒரு சிறிய மலைமேல் ஆஞ்சநேயர் கோயிலும் உள்ளன. (Pincode 631 102).

1. **கீழேயுள்ள கோயில்**

**மூலவர்:** இல்லை.

**உத்ஸவர்:** பக்தவத்ஸலப் பெருமாள் (தக்கான்). இந்த ஸந்நிதியின் பின்புறமுள்ள ஆதிகேசவப் பெருமாளை சில குறிப்பிட்ட நேரங்களில் மட்டுமே ஸேவிக்க முடியும். ஆண்டாள், ஆழ்வார், ஆச்சார்யர்கள், எறும்பியப்பா, தொட்டாசாரியார் ஸந்நிதிகள் உள்ளன.

2. **பெரிய மலை:** (கடிகாசலம்) சுமார் 750 அடி உயரமுள்ளது. 1300 படிகள்.

**மூலவர்:** யோக நரஸிம்ஹர் (அக்காரக்கனி), வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்:** அம்ருதவல்லி. (தனிக் கோயில் நாச்சியார்)

**தீர்த்தம்:** பிரம்ம தீர்த்தம், தக்கான் குளம்.

**விமானம்:** ஸிம்ஹகோஷ்டாக்ருதி, ஹேமகோடி விமானம் (ஸிம்ஹாக்ர விமானம்).

**ப்ரத்யக்ஷம்:** சிறிய திருவடி.

3. **சிறிய மலை** (420 படிகள் உள்ள தனி மலை)

யோக ஆஞ்சனேயர், கையில் சங்கு சக்ரங்கள் (நான்கு திருக்கரங்கள்).

**விசேஷங்கள்:** இவ்வூரில் ஒரு கடிகை (சுமார் ½ மணி நேரம்) தங்கி இருந்தாலே மோக்ஷம் கிடைக்குமாதலால் கடிகாசலம், திருக்கடிகை என்ற பெயர்கள் ஏற்பட்டனவாம். விசுவாமித்திரர்

இங்கே கடிகையில் ந்ருஸிம்ஹனை ஒரு கடிகை (நாழிகை) துதி செய்து ப்ருஹ்மரிஷி பட்டத்தைப் பெற்றதாக ஐதீஹம்.

மலைக்குப் போகும் வழியில் குளக்கரையில் கருடாரூடரான வரதராஜப் பெருமாள் ஸந்நிதி உள்ளது. இக்கோயிலில் உச்சிக்கால வேளையில்தான் ஸேவை கிடைப்பது நிச்சயம். தொட்டாசாரியார் என்ற மஹாசாரியாருக்கு (16 ஆம் நூற்றாண்டில்) காஞ்சி வரதராஜன் தனது கருட ஸேவையைத் தந்தருளியதாக ஸ்தல வரலாறு. நரஸிம்ஹாவதாரத்தை தரிசிக்க விரும்பிய ஸப்தரிஷிகள் இவ்விடத்தில் தவம் செய்ய ஆரம்பிக்க, ஒரு நாழிகைக்குள் அவர்கள் பயன் பெற்றமையால், "கடிகாசலம்" என்று பெயர் பெற்றது. இத்தலத்தில் ஒரு கடிகைப்பொழுது தங்கினாலும் பீடைகள் தொலைந்து மோக்ஷம் சித்திக்கும் என்று புராணம் கூறுகிறது.

இது ஒரு விசேஷமான பிரார்த்தனை ஸ்தலம். பேய், பிசாசு, சூனியம் என்று சொல்லப்படும் அனேக வியாதிகள் தீர இங்கே வந்து விரதம் கடைப்பிடித்து, பிரதி தினமும் தக்கான் குளத்தில் நீராடி, மலைமீது ஏறி, எம்பெருமானை வலம் வந்து தங்கள் நோய்கள் தீர்ந்து மகிழ்ச்சியுடன் செல்லுகிறார்கள்.

ஸ்தலாசார்ய புருஷர்களான தொட்டாசாரியார் ஸ்வாமி திருவம்சத்தவர்களின் ஆதீனத்தில் இந்தக் கோயில் உள்ளது. இராமானுஜர், மணவாள மாமுனிகள், எறும்பியப்பா மங்களாசாஸனம் செய்த ஸ்தலம்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1731, 1736, 2673 (73)

**பேயாழ்வார்:** 2342

மொத்தம் 4 பாசுரங்கள். நம்மாழ்வார் 2882 இல்(எக்காலத் தெந்தையாய்) அக்காரக்கனியே என்று தலத்தின் மங்களாசாஸனம் செய்ததாக, கோயிலைச் சேர்ந்தவர்கள் சொல்கிறார்கள்.

# வடநாட்டுத் திருப்பதிகள் 11

## 65. திருவயோத்தி (அயோத்யா)

மொகல்சராய் (காசி-வாராணஸி) லக்னௌ ரயில் மார்க்கத்தில் பைசாபாத் ஸ்டேஷனிலிருந்து வண்டியில் போகவேண்டும். அங்கிருந்து அயோத்தி சுமார் 5 கி.மீ. உள்ளது. இவ்வூரில் தங்குவதற்கு பிர்லாமந்திரும் மற்றும் பல சத்திரங்களும் உள்ளன. சாப்பாட்டுக் கடைகளும் உள்ளன.

**மூலவர்:** ஸ்ரீராமன், சக்கரவர்த்தித் திருமகன், ரகுநாயகன், வீற்றிருந்த திருக்கோலம், வடக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ஸீதாபிராட்டி.

**தீர்த்தம்:** பரமபதஸத்ய புஷ்கரிணி, ஸரயூ நதி.

**விமானம்:** புஷ்கல விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** பரதாழ்வான், தேவர்கள், முனிவர்கள்.

**விசேஷங்கள்:** ஸரயூ நதிக்கருகில் தென்னிந்தியப் பாணியில் கட்டப்பட்டுள்ள அம்மாஜி மந்திர் என்ற கோயில் அதே பழைய இடத்தில் இருக்கிறது. ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதியுடன் கூடிய ராமர் ஸந்நிதி அதே பாணியில் உள்ளது. இங்கே தென்னிந்திய வைஷ்ணவர்கள் பூஜை செய்கின்றனர். இங்கேயும் அர்ச்சகரிடம் சொல்லிவிட்டுத் தங்கலாம். ப்ருஹ்மாவின் முதல் பிள்ளையாகிய ஸ்வாயம்புவமனுவுக்கு ஸ்ரீமந்நாராயணன் வைகுண்ட மத்தியிலிருந்து அயோத்தி என்னும் பாகத்தை ப்ருஹ்மா மூலமாக மனு சக்கரவர்த்தி கையில் கொடுக்க அவர் அதை பூலோகத்துக்குக் கொண்டுவந்து ஸரயூ நதியின் தென்கரையில் ஸ்தாபித்ததால் 'அம்புயத்தோன் அயோத்தி மன்னருக்கு அளித்த கோயில்' என்னும்படி ஆயிற்று. முத்தி தரும் ஏழு நகரங்களில் இதுவும் ஒன்று.

**குறிப்பு:** ஆழ்வார் பாடிய கோயிலும் மூர்த்திகளும் இல்லை.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 312, 314, 316, 321, 325, 399.

**குலசேகராழ்வார்:** 724, 725, 741, 748.

**தொண்டரடிப்பொடியாழ்வார்:** 920.

**திருமங்கையாழ்வார்:** 1875.

**நம்மாழ்வார்:** 3381.

மொத்தம் 13 பாசுரங்கள்.

## 66. திருநைமிசாரண்யம்

கல்கத்தா-டேராடூன் ரயில் மார்க்கத்தில் பாலமாவ் ஜங்ஷன் வந்து அங்கிருந்து சீதாப்பூர் போகும் கிளை ரயிலில் ஏறி வழியிலுள்ள நைமிசாரண்யா ஸ்டேஷனில் இறங்கி 4 கி.மீ. தூரம் வண்டியில் அல்லது நடந்து சென்று இவ்வூரை அடையலாம். தில்லி-லக்னோ ரயில் பாதையில் ஹர்தோய் என்ற ஸ்டேஷனில் இறங்கியும் இவ்வூரை அடையலாம். (156-ஆம் பக்கத்திலுள்ள வரைபடம் காண்க.) இங்கு அஹோபில மடமும் ஒரு ராமானுஜ கூடமும் தங்க வசதியளிக்கின்றன. அஹோபில மடத்தில்தான் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். அஹோபில மடத்தில் தேவனார்விளாக அழகிய சிங்கர் ப்ருந்தாவனம் உள்ளது. (Pincode 261 402).

**மூலவர்:** தேவராஜன் (ஸ்ரீஹரி), நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ஸ்ரீஹரிலக்ஷ்மி (புண்டரீகவல்லி)

**தீர்த்தம்:** சக்ரதீர்த்தம், கோமுகி நதி, நேமி, திவ்ய, விச்ராந்த தீர்த்தங்கள்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** தபோவனம்.

**விமானம்:** ஸ்ரீஹரி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** இந்திரன், சுதர்மன், தேவரிஷி, சூதபுராணிகர், வேதவ்யாஸர்.

**விசேஷங்கள்:** ஆழ்வார் பாடிய ஆலயமும் மூர்த்திகளும் இப்போது இல்லை. இங்கு, பகவான் ஆரண்ய ஸ்வரூபியாக இருப்பதாக நம்பி, காட்டையே வணங்குகிறார்கள். கோமுகி (கோமதி) நதியில் ஸ்நானம் செய்துவிட்டு சக்ரதீர்த்தத்தில் ஸ்நானம் செய்யலாம். இந்தத் தீர்த்தக்கரையில் சக்கரத்தாழ்வான் (சக்ரநாராயணன் என்கிறார்கள்), விநாயகர், ராம, லக்ஷ்மண, ஸீதை முதலியவர்களின் ஆலயங்கள் உள்ளன.

கோமுகி நதிக்குப் போகும் வழியில் வியாஸகட்டீ என்ற இடத்தில் வேதவ்யாஸர் ஆலயம் உள்ளது. இதுதான் வ்யாஸ பகவானும், சுகப்ரஹ்மமும் ப்ரவசனங்கள் செய்து, பாரதம், பாகவதம்

முதலிய இதிஹாஸ புராணங்களிற்றிய புண்யபூமி. விசாளாஸாசாரியார் அவதரித்த ஸ்தலம். அவருக்கு ஒரு சந்நிதியும் இருக்கிறது.

ஊரின் மற்றொரு புறத்தில், புராண மந்திர் என்ற சுகபகவான் ஆலயத்தில் அவருடைய வெண்கலச்சிலை (கிளிமூக்குடன்) பெரியதாக வைக்கப்பட்டுள்ளது. இதற்குச் சற்று அப்பால் ஒரு சிறிய குன்றின் மேல் ஹனுமான்கட்ட என்ற ஆலயத்தில் மிகப் பிரும்மாண்டமான உருவுள்ள ஹனுமார், ஸ்ரீராமலக்ஷ்மணர்களை இரு தோள்களிலும் எழுந்தருளிப் பண்ணிக்கொண்டு, நின்ற திருக்கோலத்தில் காக்ஷி அளிக்கிறார். பாலாஜி மந்திர் என்றழைக்கப்படும் பூசமேத வெங்கடேஸ்வர் ஸ்வாமி கோயில் ஒன்றும் நைமிசாரண்யத்தில் உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 998-1007 — 10 பாசுரங்கள்.

## 67. திருப்பிருதி (ஜோஷிமட்-நந்தப்ரயாக்)

ரிஷிகேசத்திலிருந்து பத்ரிநாத் செல்லும் வழியில் உள்ள ஜோஷிமட் என்ற இடந்தான் திருப்பிருதி என்பது பொதுவான அபிப்ராயம். ஹரித்வாரிலிருந்து 246 கி.மீ.

**மூலவர்:** பரமபுருஷன், புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பரிமளவல்லி நாச்சியார்.

**தீர்த்தம்:** இந்த்ர தீர்த்தம், கோவர்த்தனதீர்த்தம், மானஸஸரஸ்.

**விமானம்:** கோவர்த்தன விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** பார்வதி.

**விசேஷங்கள்:** இப்போது ஆதிசங்கரரால் கட்டப்பட்ட நரஸிம்மர் ஆலயமும், வாஸுதேவர் ஆலயமுமே உள்ளன. வாஸுதேவர் நின்ற திருக்கோலத்தில் ஸேவை ஸாதிக்கின்றார். இப்பெருமாளைத்தான் ஆழ்வார் பாடியுள்ளதாகக் கூறுகின்றனர். இக்கோயிலுக்கு சுமார் முக்கால் மைல் தூரம் படியிறங்கிச் செல்லவேண்டும்.

இது தவிர, நந்தப்பிரயாகைதான் திருப்பிருதி என்றும், இவை இரண்டுமே திருப்பிருதியில்லை, அது கங்கைக்கரையில் இல்லை, ஹிமயமலையின் உட்புறப் பகுதிகளில் எங்கோ இருக்கிறது என்றும்

பலவித அபிப்ராயங்கள் உள்ளன. ஆதிசங்கரர் இவ்விடத்தில் ஜ்யேஷ்ட பீடத்தை ஸ்தாபனம் செய்து ஒரு முசுக்கட்டை மரத்தடியில் தவம் இருந்து திவ்ய ஞானம் பெற்று, சங்கர பாஷ்யத்தை இயற்றியதாக ஐதீகம். சமுத்திர மட்டத்திலிருந்து 6150 அடி உயரம்.

**திருமங்கையாழ்வார்:** 958-967 — 10 பாசுரங்கள்.

## 68. திருக்கண்டமென்னும் கடிநகர்

(தேவப்ரயாகை)

ரிஷிகேசத்திலிருந்து பத்ரிநாத் போகும் வழியில் 70 கி.மீ. தூரத்திலும், ஹரித்வாரத்திலிருந்து பத்ரிக்குச் செல்லும் மார்க்கத்தில் 80 கி.மீ.லும் உள்ளது. பத்ரியிலிருந்து திரும்புகையில் இறங்கி ஸேவித்துவிட்டு அடுத்த பஸ்ஸில் வரலாம். சமுத்திர மட்டத்திலிருந்து 1700 அடி உயரம். ரகுநாத்ஜீ மந்திர் என்றால் தெரியும்.

**மூலவர்:** நீலமேகப்பெருமாள் (புருஷோத்தமன்), நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** புண்டரீகவல்லி.

**தீர்த்தம்:** மங்கள தீர்த்தம், கங்கைநதி.

**விமானம்:** மங்கள விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** பரத்வாஜமுனி.

**விசேஷங்கள்:** கோயிலுக்குப் பின்னால் அழகான சிறிய ஹனுமார் இருக்கிறார். இங்கு அளகநந்தா, பாகீரதி - இவற்றின் சங்கமம் ஆதி கங்கையாகப் போற்றப்படும் புண்ணிய ஸ்தலம். மிக்க ரமணீயமான க்ஷேத்ரம். மிகவும் ஜாக்ரதையாக ஸ்நாநம் செய்யவேண்டும். ஆழ்வார் பாடிய பெருமாளை **ரகுநாத்ஜீ** என்றழைக்கின்றனர். இது ப்ருஹ்மதேவ், தசரத மஹாராஜன், ராமன் முதலியோர் தவம் செய்த ஸ்தலம். இங்கே கோயில் கொண்டுள்ள ஸ்ரீரகுநாதனின் மூர்த்தியை ஆதிசங்கரர் ஸ்தாபித்தார். ரகுநாத்ஜீயின் கோயிலுக்கு அருகில் பத்ரிநாத், கால பைரவர், மஹாதேவர், ஹநுமார் முதலியோரின் அழகான மூர்த்திகளும் உள்ளன.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 391-401 — 11 பாசுரங்கள்.

## 69. திருவதரியாச்ரமம் (பத்ரிநாத்)

டெல்லியிலிருந்து ஸஹாரன்பூர், லக்ஸார் வழியாக அல்லது கல்கத்தா-டேராடூன் எக்ஸ்பிரஸில் ஹரித்வார் ஸ்டேஷனுக்கு வந்து அங்கிருந்து ரிஷிகேசில் தங்கி, அங்கிருந்து 300 கி.மீ. பஸ்ஸில் ஹிமாலய மலையில் பிரயாணம் செய்து, பத்ரிநாத்தை அடைய வேண்டும். இங்கு ஏராளமான சத்திரங்களும் பல வசதிகளும் உண்டு.

**மூலவர்:** பத்ரி நாராயணன், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** அரவிந்தவல்லி.

**தீர்த்தம்:** தப்தகுண்டம்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** பதரீ (இலந்தை) வ்ருக்ஷம்.

**விமானம்:** தப்தகாஞ்சந விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** நரன்.

**மார்க்கம்:** முதலில் ஹரித்வார் வந்து, அங்கு வசதியான தர்மசாலையில் தங்கி, ப்ரஹ்ம குண்டம் என்ற ஸ்நாந கட்டத்தில் நீராடி, யாத்திரையை துவக்குவது நலம். ஹரித்வாரத்திலிருந்து 24 கி.மீ. தூரமுள்ள ஹ்ருஷீகேசத்தை அடைய வேண்டும். ஹ்ருஷீகேசத்திலிருந்து பத்ரிநாத் போகும் பஸ் மூலம் தேவப்ரயாகையை அடையவேண்டும். இதுதான் "கண்டமென்னும் கடிநகர்" என்ற திவ்யதேசம். இங்கிருந்து புறப்பட்டு 1706 அடி உயரத்திலுள்ள ஸ்ரீநகர் என்ற ஊரை ராணுவ தளத்தின் வழியாக அடையவேண்டும். இங்கிருந்து ருத்ர ப்ரயாகை எனும் இடத்தை அடைய வேண்டும். பிறகு, கௌஸார் என்ற விமான தளத்தை அடைந்து, கர்ண பிரயாகையை அடைய வேண்டும். அதன்பின் நந்த ப்ரயாகையை அடைய வேண்டும். இங்கிருந்து 9 கி.மீ. தூரத்தில் ராவணன் சிவபெருமானைக் குறித்து தவம் செய்து கைலாஸ பர்வதத்தை தூக்கியதாக ஐதீஹம். திருப்பிருதி என்ற திவ்ய தேசம் இதுதான் என்றும் ஜோஷிமட் இல்லை என்றும் சிலர் கூறுகின்றனர். பிறகு, சமோலி என்ற இடத்தை அடையவேண்டும். இங்கிருந்து பீபல்கோடி அடைந்து, பிறகு ஜோஷி மடம் அடையவேண்டும். ஜோஷி மட்டிலிருந்து பத்ரிநாத் வரை ஒரு வழிப்போக்கு ஏற்பாடு உள்ளது. பிறகு, விஷ்ணுப்ரயாகை எனும் இடம் அடையவேண்டும். கடும் குளிர், கம்பளிப்போர்வைகள் தேவை, அளகாநந்தாவும் தோலிகங்காவும்

சங்கமம் ஆகும் இடம். மஹாவிஷ்ணு கோயில் கொண்டுள்ளார். நாரதமஹரிஷி அஷ்டாக்ஷர மந்த்ரத்தினால் விஷ்ணுவை பூஜை செய்த புண்ய ஸ்தலம். பிறகு, பாண்டுகேச்வர் என்ற ஊர் வரவேண்டும். பத்ரிநாத் கோயிலிலுள்ள உத்ஸவமூர்த்திகள், பனி மூடிய ஆறு மாத காலம், இங்குள்ள வாஸுதேவர் கோயிலில் வைத்துப் பூஜிக்கப்படுகின்றன. இது பாண்டவர்களின் ஜன்மஸ்தானமாகவும், பாண்டுமஹாராஜா தவம் செய்த இடமாகவும் கருதப்படுகிறது. இங்கிருந்து ஹனுமான்சட்டி (பீமசேனனும் ஹனுமாரும் சண்டையிட்ட கந்த மாதனபர்வதம்) சென்று அங்கிருந்து 15 மைல் வளைவுப் பாதைகளில் சென்று பத்ரிநாத்தை அடைய வேண்டும். ஹனுமான்சட்டியைத் தாண்டிய சுமார் 1.5 கி.மீ. தூரத்திலேயே பத்ரிகாச்ரமத்தின் காட்சி எதிரே தென்படுகிறது. பஸ் நிலையத்திலிருந்து ½ கி.மீ. தூரத்தில் அலகாநந்தாவின் கரையில் ஸ்ரீபத்ரிநாராயணன் கோயில் உள்ளது.

**விசேஷங்கள்:** ஸ்வயம்வ்யக்த க்ஷேத்ரம். இது கடல் மட்டத்திலிருந்து 10,404 அடி உயரத்திலும் ஹரித்வாரத்திலிருந்து 323 கி.மீ. தூரத்திலும் உள்ளது. இங்கு பல தர்மசாலைகளும் திருப்பதி தேவஸ்தானத்தின் விடுதிகளும் உள்ளன. கங்கைக்கரையிலேயே உள்ள கீதாமந்திர் வசதியான {

கங்கையின் எதிர்க்கரையில் தப்தகுண்டம் என்ற வெந்நீர் ஊற்றும், எதிரே பத்ரிநாராயணன் ஆலயமும் உள்ளன. ஆலயத்துக்கு எதிர்புறம் நரநாராயண பர்வதங்களும், வலப்புறம் நீலகண்ட பர்வதமும் உள்ளன. தப்தகுண்டத்திலிருந்து சில படிகள் மேலேறி ஸிம்ஹத்வாரத்தில் இருக்கும் கருடாழ்வானுக்கு அஞ்சலி செலுத்திவிட்டு கோயிலின் பிராகாரத்தை அடைய வேண்டும். கோயிலில் ஸ்ரீபத்ரிநாராயணன், அரவிந்தவல்லித்தாயார், கருடன், நாரதன், நரநாராயணர்கள் முதலியவர்களுடன் மிக அழகாக அலங்கரிக்கப்பட்டுக் காட்சி தருகிறார். பெருமாள் மட்டும் ஸாளக்கிராமச் சிலையாலான மூலமூர்த்தி, மற்றவையெல்லாம் உத்ஸவ மூர்த்திகளே, உரிய கட்டணத்தை முன்னாடியே செலுத்தி விசேஷ அபிஷேகங்களும் திருமஞ்சனமும் அர்ச்சனையும் கற்பூர ஆரத்தியும் செய்யலாம். "க்யூ" வரிசையில் எத்தனை தரம் வேண்டுமானாலும் சென்று ஸேவிக்கலாம். கர்ப்பக்ருஹத்திற்கு வெகு அருகாமையில் அமர்ந்து அபிஷேகங்களையும் அர்ச்சனைகளையும் முடியும்வரை அமர்ந்திருந்து பகவானை மனத்திருப்தியுடன் ஸேவிக்கலாம். இப்பெருமாளுக்கு எதிரில் திரை போடுவதே இல்லை. திருமஞ்சனம், சாத்துப்படி, நைவேத்யம் எல்லாம் மக்கள் எதிரிலேயே நடக்கின்றன. இரவில் வடநாட்டுப் பிராம்மணர்கள் சாந்திபஞ்சகம் போன்ற மந்திரங்களை

ஸேவிக்க, ஆடைகளையும் மாலைகளையும் "ராவால்" (இவர் கேரள தேசத்து நம்பூதிரிப் பிராம்மணர், பிரதம அர்ச்சகர்.) களைந்து சிறிய துண்டு சார்த்தும் காட்சிக்கு கீதகோவிந்தம் என்று பெயர். கோயில் பூஜை விதிமுறைகளை நன்றாகக் கற்றறிந்தவர் களாகவும் ஸம்ஸ்க்ருத பாஷையில் தேர்ந்தவர்களாகவும் நல்லொழுக்கம் பூண்டவர்களாகவும் உள்ளவர்களே இந்த ஸ்தானத்துக்கு நியமிக்கப்படுகிறார்கள். இங்கு ஸ்வாமியின் அருகில் அமர்ந்து பார்க்கக் கட்டணம் உண்டு. மற்றவர்கள் தூர இருந்து பார்க்கலாம். மஹாலக்ஷ்மிக்கு ப்ரியமான இருப்பிடமான பத்ரீ (இலந்தை) விருக்ஷத்தின் கீழேதான் ஸ்ரீபத்ரீநாராயணன் வீற்றிருப்பதாக ஐதீஹம். தென்புறம் ப்ராகாரத்தில் அரவிந்தவல்லித் தாயார் தனி ஸந்நிதி உள்ளது. வட இந்தியர் மஹாலக்ஷ்மி என்றே அழைப்பர். சற்று மேற்கே ஆதிசங்கரரின் ஸந்நிதி. ஸ்ரீ பத்ரீநாராயணன் பத்ரீ மரத்தின் கீழ், ஜடாபரிதனாய் சதுர்புஜனாய் மேல் வலக்கையில் சக்கரமும் மேல் இடக்கையில் சங்கமும் தரித்து கீழ் வலது, இடது கைகளை யோக முத்திரையாகக் கொண்டு பத்மாஸனத்தில் வீற்றிருந்து தபஸ்வி வேஷத்தில் ஸேவை ஸாதிக்கிறார். பகவானின் வலப்புறம் தனபதி குபேரனும், கருடனும் அமர்ந்திருக்கிறார்கள். இடப்புறத்தில் தேவரிஷி, நாரதர், உத்தவர், நாராயணர், நரர், முதலியோர் உள்ளனர்.

கோயிலுக்கு சிறிது வடக்கே கங்கையின் கரையில் ப்ரஹ்ம கபாலம் என்ற பெரிய பாறையொன்று இருக்கின்றது. இங்கு, பித்ருக்களுக்கு சிராத்தம் செய்தால் ஈரேழு தலைமுறைகளும் மோக்ஷமடைவதாகவும் பிறகு சிராத்தங்கள் செய்யாவிட்டாலும் பரவாயில்லை என்றும் நம்பப்படுகிறது. கோயில் ப்ராகாரத்திற்குள் லக்ஷ்மீ தேவிக்கும் ஆதி சங்கரருக்கும் தனிக்கோயில்கள் உள்ளன. கோயிலின் பின்புறம் லக்ஷ்மீந்ருஸிம்ஹ மந்திர் என்கிற தனிக்கோயிலில் ஸ்ரீ ஸ்வாமிதேசிகன், ஸ்ரீமத்ராமானுஜர் முதலியோருக்கு ஸந்நிதிகள் உள்ளன. கோயிலுக்கு நாற்புறமும் பனிமலைகளும் எதிரே நரநாராயண பர்வதங்ளும் வலப்புறத்தில் நீலகண்ட பர்வதமும் உள்ளன. இது தவிர, இவ்வூரில் வஸுதாரா என்ற பனிமலை நீர்வீழ்ச்சியின் திவலைகள் தன்மேல் பட்டுப் புனிதமாவதற்குப் பல யாத்ரிகர்கள் அங்கே செல்வதுண்டு.

**குறிப்புகள்:** திருவஷ்டாக்ஷரமந்திரத்தின் அவதாரஸ்தலமான இவ்வூரின் பெருமை எல்லையற்றது. விசாலபுரி என்று பெயர் பெற்றது. பனி பெய்யும் பிரதேசமாகையால் இக்கோயில் தீபாவளியன்று மூடப்பட்டுவிடும். தொடர்ந்து 6 மாத காலம் மூடியிருந்து சித்திரை மாதம் சித்ரா பௌர்ணமியன்றே திறக்கப்படும். யாத்திரைக்கு மழையில்லாத காலமாகிய மே மாதமும் ஸெப்டெம்பர் பிற்பகுதியும்

தான் ஏற்றவை. எப்பொழுதும் கடுங்குளிர் நிறைந்த பிரதேசமாகையால் கம்பளி உடைகள் எடுத்துச் செல்வது அவசியம்.

கோயிலுக்கருகே Vyasa Cave சென்று ஸேவிக்கலாம். வேதவ்யாஸருக்குக் கோயில் உள்ளது. மஹாபாரதம் இங்கு எழுதப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. வழியில் கண்டாகரணனுக்கும் கோயில் உள்ளது.

**மங்களாசாஸனம்:**

பெரியாழ்வார்: 399. **திருமங்கையாழ்வார்:** 968-87, 2673 (74). மொத்தம் 22 பாசுரங்கள்.

## 70. திருச்சாளக்ராமம் (ஸாளக்ராமம் முக்திநாத்)

இந்த திவ்ய தேசம் நேபாள நாட்டில் உள்ளது. இந்திய எல்லையைக் கடப்பதற்கு ஸனோலி, ராக்ஸால் என்ற இரண்டிடங்கள் தான் சிறப்பானவை. போகும் வழியில் எங்கும் தங்குமிடமோ, உணவு வசதிகளோ கிடையாது. மலையேறுபவர்கள் சொந்த வசதிகளுடனே கூட்டமாகச் செல்ல வேண்டும். போக்ராவிலிருந்து 1 மணி நேரத்தில் ஹெலிகாப்டர் மூலம் அடையலாம்.

**மூலவர்:** ஸ்ரீ மூர்த்தி, **முக்தி நாராயணன்,** நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம். பழைய சில நூல்களில் வடக்கே என்று எழுதப்பட்டுள்ளது.

**தாயார்:** ஸ்ரீதேவி நாச்சியார்.

**தீர்த்தம்:** சக்ர தீர்த்தம், (கண்டகி நதி-இது கோயிலுக்கு வெகு தூரத்தில் உள்ளது; என்றாலும் அருகிலுள்ள கால்வாயையும் கண்டகி என்றே சொல்கிறார்கள்).

**விமானம்:** கனக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ரஹ்மா, ருத்ரர், கண்டகி.

**விசேஷங்கள்:** இந்த ஸ்தலம் இருக்குமிடத்தைப் பற்றி மாறுபாடான கருத்துக்கள் உள்ளன. எனினும், நேபாள தலைநகரான காட்மண்டு நகரிலிருந்து 272 கி.மீ. தூரத்திலுள்ள முக்திநாராயண (முக்திநாத்) க்ஷேத்ரத்திலிருந்து 3 கி.மீ. தூரத்தில் சுமார் 600 அடி உயரத்தில் இக்கோயில் உள்ளது. ஸாளக்ராமம் என்பது

வேறு இல்லை, முக்தி நாராயண க்ஷேத்ரமேதான் — சாளக்ராமம் என்று கூறுவோரும் உண்டு. கண்டகீ நதிக்கரையில் காட்மண்டு விலிருந்து சுமார் 104 கி.மீ. தூரத்தில் உள்ள "தாமோதரகுண்ட்" என்னும் இடம்தான் ஸாளக்ராமம் என்றும் கூறுகிறார்கள்.

ஸாளக்ராம க்ஷேத்ரத்தில் கண்டகீ நதியில்தான் நாம் பூஜை செய்யும் ஸாளக்ராமங்கள் (ஸாளக்ராவா) கிடைக்கின்றன என்பது பற்றி கருத்து வேற்றுமையில்லை. ஸ்ரீ ராமாநுஜர் மங்களாசாஸனம் செய்த இடம். இந்த ஸ்தலத்திற்குச் சென்று தரிசித்தபின்னர் இங்கிருந்து சற்று இறக்கத்தில் ஜ்வாலாமுகீ என்கிற துர்க்கை கோயில் அருகில் புத்தர் சிலை, மற்றும் என்றும் அணையாமல் பாதுகாக்கப்பட்டு வரும் தீபம் உள்ளன. நேபாளத்திற்குச் செல்பவர்கள் சௌகரியப்படி, ஜனகபுரி (காட்மண்டிலிருந்து 375 கி.மீ.), புதநீல நாராயணன் என்கிற சயனநாராயணன் (காட்மண்டிற்கு அருகில்), தனுஷதாம் (Dhanushadham) (ஜனகபுரி அருகில்), வராக க்ஷேத்ரம் (Barahchhetra) (விராட்நகர்/தாரண் அருகில்) வால்மீகி ஆச்ரமம் மற்றும் காட்மாண்டு அருகில் தக்ஷிணகாளி, பசுபதி நாதர், ஸ்ரீக்ருஷ்ணமந்திர் போன்ற கோயில்களுக்குச் செல்லலாம்.

**மங்களாசாஸனம்:**

பெரியாழ்வார்: 206, 399

திருமங்கையாழ்வார்: 988-997

மொத்தம் 12 பாசுரங்கள்

## 71. திரு வடமதுரை (மதுரா)

(ப்ருந்தாவனம், கோவர்த்தனம் அடங்கியது)

டெல்லியிலிருந்து ஆக்ரா போகும் ரயில்பாதையில் மதுரா என்ற ஜங்ஷனிலிருந்து சுமார் 3 கி.மீ. தூரத்தில் ஊரும் கோயில்களும் உள்ளன. இங்கு தங்கும் வசதிகள் அதிகமாக இல்லாததால் இங்கிருந்து 10 கி.மீ. தூரத்திலுள்ள பிருந்தாவனம் என்ற ஊரில் தங்கிக்கொள்ளலாம். அல்லது டெல்லியில் தங்குபவர்கள் நேராக ரயிலிலோ பஸ்ஸிலோ வந்து ஸேவித்துத் திரும்பலாம்.

**மூலவர்:** கோவர்த்தநேசன், பாலக்ருஷ்ணன். நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ஸத்யபாமா நாச்சியார்.

**தீர்த்தம்:** இந்த்ர தீர்த்தம், கோவர்த்தன தீர்த்தம், யமுனா நதி.

**விமானம்:** கோவர்த்தன விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** இந்த்ராதி தேவர்கள், ப்ருஹ்மா, வஸுதேவர், தேவகி.

**விசேஷங்கள்:** இங்கிருந்து சுமார் 2 கி.மீ. தூரத்தில் ஜன்மபூமி என்ற புதிய கோயில், ஸ்ரீகிருஷ்ணன் பிறந்த சிறைச்சாலை இருந்த இடமாகக் கருதப்படும் இடத்தில் கட்டப்பட்டிருக்கிறது. சுமார் 12 கி.மீ. தூரத்தில் கோவர்த்தனகிரி உள்ளது.

மைய இடமாகக் குறிப்பிடப்பட்டுள்ள ப்ருந்தாவனத்தில் தென்னாட்டுப் பாணியில் அமைக்கப்பட்ட ரங்கமந்திர் என்ற விசாலமான கோயில் உண்டு. இங்கே தமிழ்நாட்டு வைஷ்ணவர்களே கைங்கர்யம் செய்வதுடன் தங்குவதற்கும் சாப்பாட்டுக்கும் ஏற்பாடு செய்து தருகிறார்கள். இக்கோயிலில் ரங்க மன்னார், ஆண்டாள், கருடாழ்வார் மூவரும் ஸேவை ஸாதிக்கின்றனர். வெங்கடாசலபதிக்கும் உடையவர்க்கும் ஸந்நிதிகள் உண்டு.

வடமதுரை திவ்ய தேசங்களின் எண்ணிக்கையில் ஒன்றானாலும் மதுரை, ப்ருந்தாவனம், கோவர்த்தனம் என்ற மூன்று இடங்கள் அடங்கியதாகும். ஒரு காலத்தில் ரிஷிகள் பிரார்த்தனைப்படி ராமன் தன் தம்பி சத்ருக்னனை மது நகரத்தின் அசுர அரசனான லவணாஸுரனைக் கொல்லச் சொல்லி, ஸ்வயம்புவால் மது கைடபாஸுர ஸம்ஹாரத்திற்கு உபயோகித்த பாணத்தைக் கொடுத்து அனுப்ப, அதன்படியே சத்ருக்னன் லவணாஸுரனை ஸம்ஹாரம் செய்து யமுனை நதிக்கரையில் அர்த்தசந்த்ர வடிவமாக மிக அழகிய மாடமாளிகை மண்டப கோபுர ப்ராகாரவீதி தடாகாதிகள் சூழ்ந்த மதுரா நகரத்தை ஏற்படுத்தியதாக ஐதீஹம். சத்ருக்னன் வம்சம் ஆண்ட பிறகு, மதுரா நகரம், யாதவர்கள் வசமாகி வஸுதேவர் பரம்பரை இந்த நகரை ஆள ஆரம்பித்ததாக புராண சரித்திரம். ஸ்ரீக்ருஷ்ணன் அவதாரஸ்தலம், "ஸ்ரீக்ருஷ்ணஜன்ம பூமி" என்று விசேஷ வைபவத்துடன் அமைந்துள்ளது. ஒரே ஸமயத்தில் பல லக்ஷம் பேர் ஸேவை செய்வதற்கும் தங்குவதற்கும் இடம் கட்டி இருக்கின்றார்கள். பூஜைகள் க்ரமப்படி நடந்து ஸ்ரீக்ருஷ்ண ஜன்மாஷ்டமி முதல் ஒரு வாரம் ஸ்ரீக்ருஷ்ண சரிதம் முழுவதையும் நாடகமாக நடிக்கிறார்கள். இதை வருடம் தோறும் பல லக்ஷக் கணக்கான ஜனங்கள் கண்டு களிக்கிறார்கள்.

**குறிப்பு:** இவ்வூரில் ஆழ்வார்களால் பாடப்பட்ட கோயில்களும் மூர்த்திகளும் இப்போது இல்லை. பிற்காலத்தில் கட்டப்பெற்ற

துவாரக்நாத்ஜீ, மதுராநாத்ஜீ என்ற இரண்டு ஆலயங்கள்தான் இருக்கின்றன.

<u>**மங்களாசாஸனம்:**</u>

**பெரியாழ்வார்:** 16, 277, 264-74, 341, 399, 430.

**ஆண்டாள்:** 478, 538, 539, 560, 569, 617, 624, 634, 637-46.

**தொண்டரடிப்பொடியாழ்வார்:** 916.

**திருமங்கையாழ்வார்:** 1512, 1527, 1833, 2673 (74)

**நம்மாழ்வார்:** 3439, 3499, 3559-66

மொத்தம் 50 பாசுரங்கள்.

## 72. திருவாய்ப்பாடி (கோகுலம், கோகுல்)

மதுரா ஜங்ஷனிலிருந்து வண்டி பிடித்துக்கொண்டு 4½ கி.மீ. தூரமுள்ள யமுனைப் பாலத்தைக் கடந்து அங்கிருந்து 7½ கி.மீ. பஸ்ஸில் சென்று இவ்வூரை அடையலாம். வசதிகள் ஒன்றுமில்லை.

**மூலவர்:** மனமோஹன கிருஷ்ணன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ருக்மிணி, ஸத்யபாமா பிராட்டியார்கள்.

**தீர்த்தம்:** யமுனா நதி.

**விமானம்:** ஹேமகூட விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** நந்த கோபர்.

**குறிப்பு:** ஆழ்வார்கள் பாடிய கோயில்களோ மூர்த்திகளோ ஒன்றும் இப்போது இல்லை. இப்போது உள்ளவை எல்லாம் பிற்காலத்தவை. கோகுல் என்ற இடத்துக்கு சுமார் முக்கால் மைல் தூரத்தில் "புரானா கோகுல்" (பழைய கோகுலம்) என்ற ஓர் ஆலயத்தை ஸ்தாபித்துள்ளனர். கோயில் வாசலிலேயே யமுனை ஓடுகிறது. நந்தகோபர், யசோதா, பலராமர் விக்ரஹங்களுக்கடியில் குழந்தை கிருஷ்ணன் ஒரு சிறிய மரத்தொட்டிலில் ஸேவை ஸாதிக்கிறார். இவை எல்லாம் மர விக்ரஹங்கள். இந்த இரண்டு

கோகுலங்களில் எது உண்மையானது என்று தெரியாததால் இரண்டையும் ஸேவித்துவிடுவது நல்லது.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 14, 16, 132, 145, 231, 235, 237, 239, 263, 281

**ஆண்டாள்:** 474, 618, 630, 636, 638

**திருமங்கையாழ்வார்:** 1021, 1392, 1435, 1993, 1994, 1995, 2673 (28).

மொத்தம் 22 பாசுரங்கள்.

## 73. திருத்வாரகை (துவரை, துவாரபதி)

பம்பாய், ஆமதாபாத், வீரம்காம், ராஜ்கோட், ஜாம்நகர் வழியாக ஓகா துறைமுகம் செல்லும் ரயில் பாதையில் துறைமுகத்துக்கு சுமார் 32 கி.மீ. தூரத்தில் துவாரகா ரயில்வே ஸ்டேஷன் உள்ளது. அங்கிருந்து 4 கி.மீ. வண்டியில் போய், கோயிலை அடையலாம். வசதிகள் எல்லாம் உண்டு. ஆமதாபாத்திலிருந்தும் நேராகத் துவாரகைக்கு பஸ்கள் செல்கின்றன. பேட் துவாரகை (ஓகா துறைமுகம்), ப்ரபாஸ தீர்த்தம் (வராவல் ஸ்டேஷன்), ரைவத மலை (கிரினார், ஜூனாகட்ஸ்டேஷன்), க்ருஷ்ணன் ஆலயம் (பாலகா ஸ்டேஷன்) (Dwaraka Mandir Pincode 361 335).

**மூலவர்:** கல்யாண நாராயணன், த்வாரகாதீசன் (த்வாரகா நாத்ஜீ), நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** கல்யாண நாச்சியார் (லக்ஷ்மீஸ்ரீ), ருக்மிணி, அஷ்டமஹிஷிகள்.

**தீர்த்தம்:** கோமதீ நதி, ஸமுத்திர ஸங்கமம்.

**விமானம்:** ஹேமகூட விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** த்ரௌபதி.

**விசேஷங்கள்:** இது முக்தி தரும் ஏழு ஸ்தலங்களுள் ஒன்றாகும் 5000 வருஷங்களுக்கு முன்னர் நிர்மாணிக்கப்பட்டு அவ்வப்போது ஜீர்ணோத்தாரணம் செய்யப்பட்ட கோயிலாம். 1982இல் பாகிஸ்தான் குண்டுகள் வீழ்ந்தும் கோயிலுக்கு சேதம் ஏதும் ஏற்படவில்லை

என்றும், சமுத்திரக்கரையில் இருப்பதால் அவ்வப்போது ஏற்படும் புயல்களாலும் கோயிலுக்கு எவ்வித பாதிப்பும் ஏற்படுவதில்லை என்று உள்ளூர்வாசிகள் பெருமையாகப் பேசுகிறார்கள். ஜராஸந்தன், ஜனங்களுக்குத் தொந்திரவு கொடுக்காமல் இருக்க, ஸ்ரீக்ருஷ்ணன் சமுத்திர ராஜனிடம் இடம் கேட்டு, வாங்கி, விசுவகர்மாவைக் கொண்டு துவாரகையை ச்ருஷ்டித்ததாக ஐதீஹம். மோக்ஷத்துக்கு த்வாரமாக இருப்பதால் த்வாரகை என்ற பெயர் உண்டாயிற்று. கோயிலிலிருந்து பல படிகள் இறங்கிச் சென்றால் எதிரே கோமதி நதி கடலில் சங்கமமாகும் இடத்திலிருந்து பஸ்ஸில் ஒகா துறைமுகம் சென்று, அங்கிருந்து விசைப்படகில் பேட் த்வாரகா (தீவு துவாரகை) என்ற தீவுக்குப் போகலாம். இதுதான் க்ருஷ்ணன் திருமாளிகை. சுமார் 1,500 க்ருஹங்கள் இங்கே இருக்கின்றன. காலை 5 மணிமுதல் பகல் 1 மணி வரையிலும் மாலை 4 மணி முதல் இரவு 8 மணி வரையிலும் ஸேவையாகும். இங்குள்ள மூலவர் (த்வாரக்நாத்ஜீ) சங்குசக்ர கதாதாரியாக ஸேவை ஸாதிக்கிறார். மூன்று மைல் தூரத்தில் சங்க தீர்த்தம் அற்புதமாயிருக்கிறது. அலங்காரம் நம் எதிரிலேயே நடக்கிறது. திருமார்பில் லக்ஷ்மீ ஸேவை ஸாதிக்கிறாள். ருக்மிணி உத்ஸவத் தாயார். இன்றும் கல்யாணராயர் (க்ருஷ்ணன்), த்ரிவிக்ரமமூர்த்தி, தேவகீ, ஜாம்பவதி, லக்ஷ்மீ நாராயணன் போன்ற பலருடைய ஸந்நிதிகள் உள்ளன. காலை 5 மணி முதல் ஸேவை ஆகும். பிரதி தினமும் பகவானுக்கு குழந்தை போலவும் ராஜாவைப் போலவும் வைதிகோத்தமன் போலவும் அலங்காரம் செய்கிறார்கள். திருமஞ்சனமும் தினமும் நடக்கிறது. ஏகாந்த ஸேவையும் உண்டு. த்வாரகையிலிருந்து ஓகா போகும் வழியில் சுமார் 4 கி.மீ. தூரத்தில் ருக்மிணி பிராட்டியின் தனிக்கோயில் உள்ளது. இங்கேதான் க்ருஷ்ணன் ருக்மிணியை விவாஹம் செய்துகொண்டதாக ஐதீஹம்.

**குறிப்பு:** கையில் ஆஹாரம் கொண்டு செல்வது நல்லது. த்வாரகை ஸமீபம் தோதாத்திரி மடத்தில் தங்கலாம். திரும்பும் போது விராவல் ஸ்டேஷனில் இறங்கி ப்ரபாஸ தீர்த்தம், சலவைக்கல் சிற்பங்களால் அழகு பெற்ற சரித்திரப்பிரசித்தி வாய்ந்த ஸோமநாதர் கோயில், பாலகா என்ற இடத்தில் க்ருஷ்ணன் ஆலயம், பஞ்சஸ்ரோதா ஹிரண்யா, ஸமுத்திர ஸங்கம ஸ்நான கட்டம் இவைகளைக் காணலாம். விரும்பும் யாத்ரீகர்கள் 16 கி.மீ. தூரத்திலுள்ள ஜ்யோதிர் லிங்கங்களில் ஒன்றான நாகேச்வர் என்ற ஆலயத்துக்கு போய்வரலாம். போகும் போதோ திரும்பும்போதோ ஜுனாகட் ஸ்டேஷனில் இறங்கி 160 கி.மீ. போனால், கிரிநார் என்ற ரைவத மலையையும் பல கோயில்களையும் மடங்களையும் காணலாம். க்ருஷ்ணன்

வைகுண்டம் போவதற்கு முன் ஸேவை ஸாதித்த அரச மரத்தடி சயனத் திருக்கோலத்தை பாலகா என்ற இடத்தில் காணலாம்.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 333, 398, 399, 415, 472

**ஆண்டாள்:** 507, 541, 594, 625

**திருமங்கையாழ்வார்:** 1504, 1524

**திருமழிசையாழ்வார்:** 2452

**நம்மாழ்வார்:** 3144

மொத்தம் 13 பாசுரங்கள்.

## 74. திருச்சிங்கவேள்குன்றம் (அஹோபிலம்)

சென்னை-பம்பாய் ரயில் பாதையிலுள்ள கடப்பா ஸ்டேஷனில் இறங்கி, அங்கிருந்து பஸ்ஸில் (பஸ் ஸ்டாண்டு 2 கி.மீ. தூரத்தில் உள்ளது) 85 கி.மீ. தூரம் சென்று அர்லகட்டா என்ற ஊரில் இறங்கி, அங்கிருந்து வேறு பஸ்ஸில் 1 மணி நேரத்தில் 25 கி.மீ. தூரத்தில் உள்ள அஹோபிலம் போய்ச் சேரலாம். நந்தியாலில் இருந்து 65 கி.மீ. ஹைதராபாதிலிருந்து பஸ்ஸில் வரலாம். இவ்வூரில் திருப்பதி தேவஸ்தானத்தாரால் நடத்தப்படும் விடுதி ஒன்றும், அஹோபில மடத்தைச் சேர்ந்த 50 ரூம்கள் உள்ள விடுதியும், மற்ற பல வசதிகளும் உள்ளன. (Pincode 518 545)

இங்கு அஹோபில நரஸிம்ஹன், வராஹ நரஸிம்ஹன், மாலோல நரஸிம்ஹன், யோகாநந்த நரஸிம்ஹன், பாவந நரஸிம்ஹன், காரஞ்ச நரஸிம்ஹன், சக்ர வட நரஸிம்ஹன், பார்கவ நரஸிம்ஹன், ஜ்வாலா நரஸிம்ஹன் என்ற 9 நரஸிம்ஹர்களின் கோயில்கள் இருப்பதால் இதற்கு நவந்ருஸிம்ஹ க்ஷேத்ரம் என்று வேறு பெயரும் உண்டு. மலைமீது ப்ரஹ்லாத நரஸிம்ஹர், வராஹ நரஸிம்ஹர், உக்ர நரஸிம்ஹர் ஸந்நிதிகள் உண்டு. எல்லா சந்நிதிகளிலும் சேவிக்க இரண்டு நாட்களாவது தங்க வேண்டும்.

ப்ரஹ்லாத வரதன் ஸந்நிதி: (கிழே அஹோபிலம்) இதைக் கீழ் அஹோபிலம் என்றும் சொல்வார்கள். அஹோபில மடத்தின் தலைமை ஸ்தலமே இந்தக் கோயில்தான்.

**மூலவர்:** ப்ரஹ்லாதவரதன், லக்ஷ்மீ ந்ருஸிம்ஹன், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** மாலோல நரஸிம்ஹர் தவிர, மற்ற 8 நரஸிம்ஹர்களின் உத்ஸவ மூர்த்திகளும் இங்கே உள்ளனர். மாலோல உத்ஸவர் அஹோபில மடத்து அழகிய சிங்கரின் திருவாராதனத்தில் உள்ளது.

**தாயார்:** அம்ருதவல்லி, செஞ்சுலக்ஷ்மீ.

**தீர்த்தம்:** இந்த்ர, ந்ருஸிம்ஹ, பாபநாச, கஜ, பார்க்கவ தீர்த்தங்கள்.

**விமானம்:** குகை விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** அஹோபில மடத்து முதல் அழகிய சிங்கருக்கு யோகி ரூபத்தில் ப்ரத்யக்ஷம்.

**அஹோபில நரஸிம்ஹர்:** (மேல் அஹோபிலம்)

கீழ் அஹோபிலத்திலிருந்து 14 கி.மீ. தூரம் தார்சாலை வழியாக மலையேறி மேல் அஹோபிலத்தை அடையலாம். சில சமயங்களில் பஸ் போவதும் உண்டு. இது ஒரு குடைவரைக் கோயில்.

**மூலவர்:** அஹோபில நரஸிம்ஹர்

**தாயார்:** லக்ஷ்மீ.

**தீர்த்தம்:** பவநாசினி.

**விமானம்:** குகை விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ருஹ்லாதாழ்வார்.

**விசேஷங்கள்:** ஸீதையைத் தேடிவரும் ராமன் தம்பி லக்ஷ்மணனுடன் அஹோபிலம் வந்து ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹனை 5 ச்லோகங்களால் துதித்ததால் ஸீதை கிடைத்துவிடுவதாக ஐதீஹம். அஹோபில மடத்தில் மூலவர் லக்ஷ்மீ ந்ருஸிம்ஹராகவும் உத்ஸவர் சக்ரவர்த்தி திருமகனாகவும் ஸேவை ஸாதிக்கிறார்கள். இந்த மூர்த்தி ஸ்வயம்பு மூர்த்தியாம். நரஸிம்ஹன் வேடுவனாக வந்து செஞ்சுலக்ஷ்மித் தாயாரை மணந்ததாக புராண வரலாறு. மாமனார் வேடுவர் குலமானபடியால் இன்றும் மாசி மாதம் நடக்கும் ப்ருஹ்மோத்ஸவத்தின்போது, மறவர்கள் கூற்றும், ஆர்ப்பாட்டங்களும், சீர்வரிசைகளும் நடைபெறுகின்றன. மலை கருடாத்ரி, கருடாசலம், காருடசைலம் என்றழைக்கப்படுகிறது. பவநாசினி என்ற நீர்வீழ்ச்சியின் கரை வழியாக மலைமேல் ஏறிச்சென்று வராஹநரஸிம்மனை ஸேவித்துவிட்டு, இன்னும் மேலே சென்று (மேல் அஹோபிலத்திலிருந்து மொத்தம் 2-2½ கி.மீ.) செங்குத்தான மலைமேல் ஒரு சிறிய ஸந்நிதியில் உள்ள மாலோல நரஸிம்ஹனை ஸேவிக்கலாம்.

இங்கிருந்து சுமார் 4 கி.மீ. தூரத்தில் ஸ்ரீநரஸிம்ஹன் வெளிப்பட்டதாகக் கூறப்படும் தூண் உள்ளது. ("அஹோ, என்ன பலம்" என்று தேவர்கள் வர்ணித்ததால் ஸ்தலத்துக்கு அஹோபலம் என்று ஏற்பட்டு, இப்போது மருவியுள்ளது.) இவ்விடத்திற்குத் தகுந்த துணையுடன்தான் செல்ல வேண்டும்.

**ஜ்வாலா நரஸிம்ஹன்:** இவரை ஸேவிக்கச் செல்லும் வழி மிகவும் கடினம். மற்ற நரஸிம்ஹர்களை ஸேவிக்கவும் (முக்கியமாக மாலோல, பாவன, ஜ்வாலா ஸந்நிதிகளுக்கு) தகுந்த வழித்துணையுடன் தான் செல்லவேண்டும்.

**குறிப்பு:** இது காட்டு மிருகங்கள் நடமாட்டமுள்ள பிரதேசமாகையால் ஸேவைகளை எல்லாம் பிற்பகலுக்குள் முடித்துக் கொள்ளவேண்டும்.

இந்த ஸ்தலத்தில்தான் அஹோபில மடத்து முதலாவது அழகிய சிங்கர், அஹோபில மலையில் எழுந்தருளியிருக்கும் ந்ருஸிம்ஹனை ஸேவிக்கும் தருணம், பெருமாள் சந்யாசி ரூபத்தில் வந்து, கடாக்ஷித்து பின்னர் அவருக்கு ப்ரேஷ மந்திரத்தை தானே உபதேசித்தருளி, அவரைத் துறவறத்தில் சேர்த்து, அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமாநுஜ ஸந்நிதியிலிருந்து காஷாய வஸ்த்ரங்களையும் த்ரிதண்டத்தையும் அநுக்ரஹித்து, ஸ்ரீசடகோப ஜீயர் என்ற நாமமிட்டு ஒரு வைஷ்ணவ ஸ்தாபனத்தை நிறுவுமாறு நியமித்தருளியதாக புராண வரலாறு. பதினேழு வயதுகளே நிரம்பிய சடகோப ஜீயர் எந்த உத்ஸவ மூர்த்தியைத் தான் ஸ்வீகரிப்பது என்று தெரியாமல் திகைத்து பெருமாளை தியானம் செய்ய, ஸ்ரீபெரிய பிராட்டியாருடன் விளங்கும் ஓர் உத்ஸவ மூர்த்தியான மாலோல நரஸிம்ஹன் அவர்கையில் வரப்பெற்று அன்று முதல் அஹோபில மடத்து ஜீயர்கள், பரம்பரை பரம்பரையாக அந்த மூர்த்தியை அவர்கள் ஸஞ்சரிக்குமிடமெல்லாம் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு ஆராதித்து வருகிறார்கள்.

அஹோபில் மடத்து ஜீயர்களில் ஒருவரான 6வது பட்டம் அழகிய சிங்கர் ஸ்ரீஷஷ்டபராங்குச யதீந்த்ர மஹாதேசிகன் மேல் அஹோபிலத்திலுள்ள அஹோபில ந்ருஸிம்ஹர் ஸந்நிதியில் குகையில் ப்ரவேசித்து த்யானத்திலிருப்பதாக ஐதீஹம். மேல் அஹோபிலம் ஸந்நிதியின் நடுவில் இந்தக் குகையை சிமெண்ட் போட்டு மூடி இருப்பதை இன்றைக்கும் அங்கே காணலாம். அங்கே சிரஞ்சீவியாக இருக்கிறார் என்று பெரியவர்கள் சொல்லுகின்றனர்.

ஒரு ஸமயம் கருடன் கடும் தவம் செய்து பகவானிடம், "முன்பு செய்த ந்ருஸிம்ஹாவதாரத்தை இப்பொழுது மீண்டும்

விபவத்தில் காணவேண்டும்" என்று வரம் கேட்டு அவருக்காக காடுகள் நிறைந்த ஸ்ரீஅஹோபில மலையில் ஸ்ரீந்ருஸிம்ஹனாக அவதரித்து, ஹிரண்ய ஸம்ஹாரம் செய்தும், ப்ரஹ்லாதனை காத்தும் காட்டில் அர்ச்சா ரூபமாக ஒன்பது விதத் திருக்கோலங்களில் கோயில் கொண்டு விட்டதாகவும், கருடன் இருந்து தவம் செய்தமையால், இந்த மலைக்கு கருடாத்ரி, கருடாசலம், காருட சைலம் என்று பெயர் வழங்கியதாகப் புராண வரலாறு. பகவான் ஸ்ரீவைகுண்டத்தையும் மறந்து இங்கேயே எழுந்தருளிவிட்டபடியால் மஹாலக்ஷ்மியும் வேடர் (செஞ்சு) குலத்தில் பிறந்து பகவானை மணந்ததாக ஸ்தல வரலாறு. இங்குள்ள அஹோபிலமடம் பெரியதாக கட்டப்பட்டுள்ளபடியால் எவ்வளவு யாத்ரீகர்கள் வேண்டுமானாலும் வசதியாகத் தங்கலாம். கீழ் அஹோபிலம் ராஜகோபுரத்துக்கு எதிரில் 80 அடிகளுக்கு மேலான உயரத்தில் ஒரே கல்லாலான தூண் இருக்கிறது. பூமிக்குக் கீழேயும் 30 அடி ஆழத்திற்குப் புதைந்துள்ளது. இதை ஜய ஸ்தம்பம் என்று கூறுகிறார்கள்.

சுற்று வட்டாரத்தில் பல குளங்கள், மண்டபங்கள் உள்ளன. ஆதிசங்கர பகவத்பாதாளை இந்த மலையில் ஒரு காபாலிகன் கொலை செய்ய முயலும்போது ஸ்ரீந்ருஸிம்ஹர் காப்பாற்றியதாக ஸ்தல வரலாறு.

**குறிப்பு**: ஸ்வாதி நக்ஷத்ரதினங்களில் எல்லா உற்சவ நரஸிம்ஹர்களையும் கீழே சேவிக்கலாம்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்**: 1008-1017—10 பாசுரங்கள்.

## 75. திருவேங்கடம் (திருப்பதி, திருமலை, ஆதிவராஹ க்ஷேத்ரம்)

சென்னை-பம்பாய் ரயில்பாதையிலுள்ள ரேணிகுண்டாவிலிருந்து சுமார் 12 கி.மீ. தூரத்திலுள்ள ரயில்வே ஸ்டேஷன் திருப்பதி. சென்னையிலிருந்து நேராக வரும் ரயில் வண்டிகளும் உண்டு. வேறு பல ஊர்களிலிருந்தும் நிறைய பஸ்கள் உண்டு. திருப்பதி, திருமலை, திருச்சானூர் ஆகிய மூன்று ஊர்களிலும், தேவஸ்தான சத்திரங்களும் ஹோட்டல்களும் மற்ற எல்லா வசதிகளும் உள்ளன. கீழ்த்திருப்பதியிலிருந்து திருச்சானூருக்குச் செல்ல பஸ் முதலிய வாஹன வசதிகள் நிறைய உள்ளன.

1. **கீழ்த்திருப்பதி**: கோவிந்தராஜப் பெருமாள் கோவில்.

**மூலவர்:** கோவிந்தராஜப் பெருமாள், புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** புண்டரீகவல்லி.

**விசேஷங்கள்:** இங்கு ஆண்டாள், உடையவர் முதலியவர்களின் ஸந்நிதிகள் உள்ளன.

2. **திருமலை:** (Pincode 517504)

**மூலவர்:** திருவேங்கடமுடையான், ஸ்ரீநிவாஸன், வெங்கடாசலபதி, பாலாஜி, நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** கல்யாண வெங்கடேசுவரர், மலையப்பசுவாமி.

**தீர்த்தம்:** சேஷாசல ஸ்வாமி புஷ்கரிணி, பாபவிநாச நீர்வீழ்ச்சி, ஆகாசகங்கை, கோனேரி தீர்த்தம். 14 தீர்த்தங்கள்: வைகுண்ட தீர்த்தம், சக்ர தீர்த்தம், ஜாபாலி தீர்த்தம், வருண தீர்த்தம், ஆகாசகங்கை, பாபவிநாசம், பாண்டவ தீர்த்தம், குமாரதாரை, இராமக்ருஷ்ண தீர்த்தம், தும்புரு தீர்த்தம், சேஷ தீர்த்தம், ஸனகஸனந்தன தீர்த்தம், யுத்தகள தீர்த்தம், சீதம்ம தீர்த்தம் உள்ளன.

**விமானம்:** ஆநந்த நிலய விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** தொண்டைமான், ஆறுமுகன்.

**ஆதிவராஹர் ஸந்நிதி:** ஸ்வாமி புஷ்கரிணியின் வடமேற்கு மூலையில் கோவில் கொண்டுள்ள இப்பெருமாளுக்குத் தளிகை ஸமர்ப்பித்த பிறகே, அது ஸ்ரீநிவாஸனுக்கும் ஸமர்ப்பிக்கப்படுகிறது

ஏழு பர்வதங்கள்: வெங்கடாத்ரி, சேஷாசலம், நீளாத்ரி, கருடாசலம், வ்ருஷபாத்ரி, அஞ்சனாத்ரி, நாராயணாத்ரி என்ற பெயர்களுடன் இருக்கின்றன. இதன் மத்தியில் கோயில் அமைந்துள்ளது. ஸ்ரீநிவாஸன் எழுந்தருளுவதற்கு முன் ஆதிவராஹன் இத்தலத்தில் ஸேவை ஸாதித்ததனால் ஆதிவராஹரை ஸேவித்த பிறகுதான் ஸ்ரீநிவாஸனை ஸேவிக்க வேண்டும்.

3. **திருச்சானூர்** (அலர்மேல்மங்காபுரம்):

**மூலவர்:** தாயார்: அலர்மேல்மங்கை (பத்மாவதி), கிழக்கே திருமுக மண்டலம்.

**தீர்த்தம்:** பத்மஸரோவரம்.

**விசேஷங்கள்:** இக்கோயிலில் ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் ஸௌந்தர ராஜனுக்கும் ஸந்நிதிகள் உள்ளன. இந்தக் கோயிலை ஸ்ரீநிவாஸன்

நியமனப்படி தொண்டைமான் என்ற அரசர் கட்டி பகவான் மிக்க ஆனந்தத்துடன் எழுந்தருளியதால் ஆனந்த விமானம் என்று பெயர் உண்டானதாக ஸ்தல வரலாறு. ப்ருஹ்மா லோகக்ஷேமார்த்தம் இரண்டு விளக்குகளை ஏற்றி வைத்ததாகவும், அந்த தீபம் இப்பொழுதும் பிரகாசிப்பதாகவும் வரலாறு. அஹோபில மடத்து முதல் ஜீயர் ஸ்ரீ ஆதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் திருமலைக்குப் படிக்கட்டுகளை கட்டி வைத்தாராம்.

**குறிப்பு:** பண வசதி இல்லாதவர்களுக்குத் தர்ம சத்திரங்களும் தர்மஸேவையும் உண்டு. திருமலைமேல் கல்யாண உத்ஸவம், ப்ருஹ்மோத்ஸவம் நடைபெறுகின்றன. முடியளிப்பது போன்ற ஏராளமான பிரார்த்தனைகள் செலுத்தப்படுகின்றன. காணிக்கைகளின் காரணமாக உலகத்திலேயே இரண்டாவது பணக்காரக் கோயில் இதுதான். சந்திரகிரி பக்கம் ஸ்ரீநிவாஸமங்காபுரம் என்ற ஊர் மலை அடிவாரத்தில். மலைமேல் ஏற முடியாதவர்கள் மலைமேல் உள்ள ஸ்ரீநிவாஸனைப் போல் அழகாக அமைந்திருக்கும் மூர்த்தியை தரிசித்துச் செல்கிறார்கள்.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 56, 104, 180, 184, 207, 247, 463

**ஆண்டாள்:** 504, 506, 535, 546, 577-586, 601, 604

**குலசேகராழ்வார்:** 677-87

**திருமழிசையாழ்வார்:** 799, 811, 832, 2415, 2420-29, 2471

**திருப்பாணாழ்வார்:** 927-929.

**திருமங்கையாழ்வார்:** 1018-1057, 1275, 1312, 1371, 1388, 1404, 1518, 1572, 1640, 1660, 1811, 1836, 1849, 1946, 1978, 2001, 2038, 2059, 2060, 2067, 2673 (69), 2674 (6, 124)

**பொய்கையாழ்வார்:** 2107, 2118-21, 2149, 2157, 2158, 2163, 2180.

**பூதத்தாழ்வார்:** 2206, 2209, 2214, 2226, 2227, 2234, 2235, 2253, 2256.

**பேயாழ்வார்:** 2295, 2307, 2311, 2313, 2320, 2321, 2326, 2339, 2342-44, 2349-54, 2356, 2370.

**நம்மாழ்வார்:** 2485, 2487, 2492, 2508, 2527, 2537, 2544, 2558, 2754, 2848, 2849, 2861, 2919-29, 2948, 2985, 3061, 3282-92, 3326-36, 3458, 3586, 3716, 3740.

மொத்தம்: 202 பாசுரங்கள்

# மலைநாட்டுத் திருப்பதிகள் 13

## பொதுவான குறிப்புகள்

இத்தலங்கள் வைணவத் தலங்களாயினும் போத்திகளால் பூஜை செய்யப்படுகின்றன. தினந்தோறும் அபிஷேகமும் ஸ்ரீவளி என்று சொல்லப்படும் பிராகார ஊர்வலமும் உண்டு. ப்ரஸாதமாக சந்தனம், துளஸி, புஷ்பம் முதலியவற்றையும் கைபடாமல் தருகின்றார்கள். பெருமாளை ஆழ்வார்கள் அழைத்த பெயர்களை விட்டு வேறு பெயரால் அழைப்பார்கள். பெரும்பாலும் தாயார் ஸந்நிதிகளே கிடையாது. பெருமாள் அருகிலேயே தாயாரின் சிறிய உத்ஸவ மூர்த்தி இருக்கும். சிலவிடங்களில் இதுவும் இராது. திருவல்லவாழில் விபூதி ப்ரஸாதம் கூடக் கொடுக்கிறார்கள். போத்தி என்னும் மலையாள பிராமணர்கள் ஸ்நாநம் செய்து ஈரத்துணியோடு பூஜை செய்கிறார்கள். கர்ப்பக்ருஹத்தின் பக்கத்தில் மேடை ஒன்று இருக்கும். அதைத் தாண்டி யாரும் உள்ளே போகக்கூடாது. ஒருவரும் சட்டையோடோ, வேஷ்டி அணியாமலோ உள்ளே செல்லலாகாது. மஹாராஜாக்கள் உள்பட பெரிய மனிதர்கள்-சிறிய மனிதர்கள் என்கிற பாகுபாடின்றி வேஷ்டியும் துண்டும் அணிந்துதான் செல்லுகிறார்கள். கையிலும் மூட்டை முடிச்சு எதுவும் எடுத்துச்செல்லக் கூடாது. கொண்டு போனால் அவைகளை வாயிற் காப்போனிடம் கட்டணம் எதுவும் செலுத்தாமல் கோயில் நுழைவாயிலிலேயே வைத்து விட்டு எடுத்துச் செல்லலாம். பொதுவாகவே கேரள நாட்டில் உள்ள மற்ற கோயில்களிலும் ஆண்கள் சட்டை அணிந்து உள்ளே செல்லலாகாது. சில கோயில்களில் கடைகளில் வேஷ்டிகள் வாடகைக்குக் கொடுக்கிறார்கள் என்றாலும் பக்தர்கள் வேஷ்டி துண்டுடன் தயாராகப் போவது நல்லது. கோயில்களை மிகவும் தூய்மையாய் வைத்திருக்கிறார்கள்.

# 76. திருநாவாய்

சென்னை-கள்ளிக்கோட்டை ரயில் மார்க்கத்தில் உள்ள இந்த ஸ்டேஷனிலிருந்து ஊரும் கோயிலும் 2 கி.மீ. தூரத்தில் உள்ளன. ஷோரனூரிலிருந்து பஸ்ஸில் குட்டிபுரம் வந்து அங்கிருந்து வேறு பஸ்ஸில் திருநாவாய் வந்ததும் கோயிலை அடையலாம். சிறிய ஊர். வசதிகள் கிடையாது.

**மூலவர்:** நாவாய் முகுந்தன், நாராயணன், நின்ற திருக்கோலம் கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** மலர்மங்கை நாச்சியார், சிறுதேவி.

**தீர்த்தம்:** செங்கமல ஸரஸ்.

**விமானம்:** வேத விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** லஷ்மி, கஜேந்த்ரன், நவயோகிகள்.

**விசேஷங்கள்:** கோவில் பாரதப்புழை ஆற்றை ஒட்டியுள்ளது. எதிர்க் கரையில் சிவனுக்கும் ப்ரஹ்மாவுக்கும் கோயில்கள் உள்ளன. இதைக் காசிக்கு ஸமானமாகக் கருதி சிராத்தங்கள் முதலியன செய்கின்றனர். இவ்விடத்தில் 9 யோகிகள் யாகம் செய்ததால் இந்த ஸ்தலம் திருநவயோகி என்று பெயர் பெற்று நாளடைவில் திருநாவாய் என்று மக்கள் வழக்கில் மாறுபட்டதாக ஐதீஹம்.

ஒரு சமயம் மஹாலக்ஷ்மியும் கஜேந்திரனும் தாமரைப்பூக்களை பறித்து பகவானை அர்ச்சனை செய்ய, கஜேந்திரனுக்கு, பூ கிடைக்காமல் பகவானிடம் முறையிட பகவான் லக்ஷ்மியை பூ பறிக்க வேண்டாம் என்று சொல்லி, லக்ஷ்மியை தன்னுடன் ஏக சிம்மாஸனத்தில் அமரச்செய்து கஜேந்த்ரன் பூஜையை ஏற்றுக் கொண்டதாக வரலாறு. மலை நாட்டில் இந்த ஒர் இடத்தில்தான் லக்ஷ்மிக்குத் தனி ஸந்நிதி உண்டு.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**திருமங்கையாழ்வார்:** 1520, 1856.

**நம்மாழ்வார்:** 3634-44

மொத்தம் 13 பாசுரங்கள்.

# 77. திருவித்துவக்கோடு
(திருவிச்சிக்கோடு, திருவிஞ்சிக்கோடு)

ஷோரனூர்-கள்ளிக்கோட்டை மார்க்கத்தில் பட்டாம்பி ரயில் நிலையத்திலிருந்து 3 கி.மீ. தூரம். ஷோரனூரிலிருந்து குருவாயூர் போகும் பஸ்ஸில் 15 கி.மீ. தூரம் சென்று இறங்கி ஒரு குறுகிய சாலையில் 2 கி.மீ. நடக்க வேண்டும். பட்டாம்பி ரயில்வே ஸ்டேஷனில் இறங்கிப் பாரதப்புழை ஆற்றைக் கடந்து, 2 கி.மீ. நடந்தும் கோயிலை அடையலாம். பஞ்ச பாண்டவர்கள் தவம் செய்த இடம்.

**மூலவர்:** உய்யவந்த பெருமாள், அபயப்ரதன், நின்ற திருக்கோலம், தெற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** வித்துவக்கோட்டு வல்லி, பத்மபாணி நாச்சியார்.

**தீர்த்தம்:** சக்ர தீர்த்தம்.

**விமானம்:** தத்வகாஞ்சன விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** அம்பரீஷன்.

**விசேஷங்கள்:** கோயிலில் நுழைந்ததும் எதிரே சிவன் ஸந்நிதியும் அதன்பின் பெருமாள் ஸந்நிதியும் இருக்கின்றன. அம்பரீஷன் "பரதேவதையை ஸேவிக்க வ்யூஹாவதாரத்தை அநுக்ரஹிக்க வேண்டும்" என்று பகவானைப் பிரார்த்தித்தபடியால் பகவான் இங்கு நான்கு வடிவம் கொண்டு எழுந்தருளி இருப்பதாக ஐதீஹம். நடுவில் இருக்கும் மூர்த்தியை தர்மபுத்திரரும், மேற்கில் இருக்கும் மூர்த்தியை அர்ஜுனனும், இடப்புறத்திலுள்ள மூர்த்தியை பீமஸேனனும், வலப்புறத்திலுள்ள மூர்த்தியை நகுலனும், நகுலன் பூஜைசெய்ததையே ஸஹாதேவனும் பூஜித்ததாக புராண வரலாறு. அம்பரீஷன் முக்தி அடைந்த ஸ்தலம் என்றும் வரலாறு. பஞ்சபாண்டவர்கள் ஐவரும் சேர்ந்து ஸேவித்த ஸ்தலம். ஆஹாராதிகளுக்கு வசதி இல்லை.

**மங்களாசாஸனம்:**

**குலசேகராழ்வார்:** 688-97 - 10 பாசுரங்கள்.

## 78. திருக்காட்கரை (த்ரிக்காக்கரா)

ஆலவாய்-திருச்சூர் ரயில் மார்க்கத்தில் இருஞாலக்கொடி (இரிஞ்சாலக்குடா) ஸ்டேஷனிலிருந்தும் அங்கமாலி ஸ்டேஷனிலிருந்தும் வடகிழக்கே சுமார் 15 கி.மீ. தூரத்திலிருக்கிறது. ஆலவாய் போகும் பாதையில் 7 கி.மீ. சென்று, அங்கிருந்து வேறு பஸ்ஸில் ஒரு கிளைப்பாதையில் போகவேண்டும். வசதிகள் ஒன்றுமில்லை. கொச்சி, எர்ணாகுளத்தில் தங்கிப் போகலாம்.

**மூலவர்:** காட்கரையப்பன், நின்ற திருக்கோலம், தெற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பெருஞ்செல்வநாயகி, வாத்ஸல்யவல்லி.

**தீர்த்தம்:** கபில தீர்த்தம்.

**விமானம்:** புஷ்கல விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** கபிலமுனி.

**விசேஷங்கள்:** இப்பெருமாளை வாமனன் என்று மலையாளர்கள் சொல்கின்றனர். ஓணம் பண்டிகையன்று இக்கோயிலில் பெரிய உத்ஸவம் நடக்கின்றது. இத்தலத்தில் ஒரு தனிகன் வாழைத்தோட்டங்கள் ஏற்படுத்தி, குலை தள்ளாமலே பலமுறை அழிந்துபோய், அந்த தனிகன் பொன் வாழைக்குலை செய்து திருக்காட்கரை அப்பனுக்கு ஸமர்ப்பிக்க, பகவான் அநுக்ரஹத்தால் தோட்டங்களில் வாழை மரங்கள் உயர்ந்து வாழைக்குலைகள் இட்டதாகவும், அவையே 'நேந்திரம் வாழை' என்று பிரஸித்தமாக இருப்பதாகவும் ஐதீஹம். பொன் வாழைக்குலை ஒரு சமயம் காணாமல் போனதாகவும், அரசன் ஒரு யோகியைத் தீர விசாரியாமல் சந்தேகித்துத் துன்புறுத்தியதாயும், அந்த வாழைக்குலை கர்ப்ப க்ருஹத்திலேயே இருந்ததைக் கண்டு, யோகி தற்கொலை செய்து கொண்டு சாபம் இட்டதாகவும், சாபம் நீங்க ஜனங்கள் யோகி சொல்லியபடி மூங்கில் கூரை ஏற்படுத்திக்கொண்டு கோரைக் கொள்ளியை வெளிச்சத்திற்கு ஏற்படுத்தி கொண்டதாக ஸ்தல வரலாறு. யோகி ப்ருஹ்மராக்ஷஸாகி ஊரில் திரிந்ததாகவும், மக்கள் யோகிக்கு சிறு கோயில் கட்டி நைவேத்தியம் தினமும் ஏற்படுத்தியதாகவும் புராண வரலாறு.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**நம்மாழ்வார்:** 3612-22 - 11 பாசுரங்கள்.

# 79. திருமூழிக்களம் (மூழிக்களம்)

ஆல்வாய் டவுனில் தங்கி அங்கிருந்து பஸ் ஏறி திருமூழிக்களம் வரலாம். சாலையிலிருந்து சற்று தூரத்தில் பாரதப்புழை ஆற்றங்கரையில் கோயில் உள்ளது. ஆல்வாயில் தங்காமல் எர்ணாகுளத்திலிருந்தும் பஸ்ஸில் வரலாம். அங்கமாலி ரயில்வே ஸ்டேஷனிலிருந்தும் இங்கு பஸ்ஸில் வரலாம். இங்கு வசதிகள் எதுவும் இல்லை.

**மூலவர்:** திருமூழிக்களத்தான், அப்பன், ஸ்ரீஸூக்திநாதப்பெருமாள், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** மதுரவேணி நாச்சியார்.

**தீர்த்தம்:** பெருங்குளம், சங்க தீர்த்தம், சிற்றாறு.

**விமானம்:** ஸௌந்தர்ய விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ஹாரீதமஹரிஷி.

**விசேஷங்கள்:** இப்பெருமாளை லக்ஷ்மணன் என்று கூறுகிறார்கள். ஹாரீதமஹரிஷி பல வருஷங்கள் தவமிருந்து பகவான் ப்ரத்யக்ஷமான போது அவர் வர்ணாச்ரம தர்மங்களையும் ஐந்து காலங்களில் செய்ய வேண்டிய அனுஷ்டான பிரகாரங்களையும் யோகத்தையும் ப்ரதிபாலிக்கிற ஸம்ஹிதையை - ஸ்ரீஸூக்தியை-திருமொழியை- இயற்றியபடியால் இந்த ஸ்தலத்திற்கு 'திருமொழிக்களம்' என்று பெயர் வழங்க வேண்டும், பெருமாளுக்கு திருமொழிக் களத்தான் என்ற திருநாமம் இருக்க வேண்டும் என்று பிரார்த்தித்தபடி பெயர் உண்டாகியதாகப் புராண வரலாறு.

ராமன் சித்திரகூடத்திலிருந்த போது, பரதன் ராமனைத் திரும்ப அயோத்திக்கு அழைத்துப்போக வந்ததை ஸந்தேகித்து, லக்ஷ்மணன், பரதனைக் கொல்ல முயன்ற பாவத்தைப் போக்க திருமூழிக்களத்தானை அடிபணிந்ததாகவும், அப்போது பரதனே வந்து, இன் சொல்லுடன் ஆனந்த பரவசனாய், லக்ஷ்மணனை ஆலிங்கனம் செய்துகொள்ள, பகவானை இருவரும் துதித்ததாகவும், இன்சொல் விளைந்த ஸ்தானமாகையாலே இதற்குத் 'திருமூழிக்களம்' என்று பெயர் உண்டானதாக ஸ்தல வரலாறு. லக்ஷ்மணன் இவ்விடத்தில் கோபுர மண்டப ப்ராகாராதிகளை ஜீர்ணோத்தாரணம் செய்ததாக வரலாறு.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1553, 2061, 2674 (129).

**நம்மாழ்வார்:** 3623-33.

மொத்தம் 14 பாசுரங்கள்.

## 80. திருவல்லவாழ் (திருவல்லா-ஸ்ரீவல்லப க்ஷேத்ரம்)

கொல்லம்-எர்ணாகுளம் ரயில் மார்க்கத்தில் திருவல்லா ரயில் நிலையத்திலிருந்து 5 கி.மீ. தூரம்; பஸ் வசதிகளும் உண்டு. திருவல்லாவில் சத்திரம் இருக்கிறது. தளிகை செய்து கொண்டு பக்கத்தில் உள்ள, எண் 80 முதல் 85 வரை உள்ள, ஆறு க்ஷேத்திரங்களையும் ஸேவிக்கலாம்.

**மூலவர்:** கோலப்பிரான், திருவாழ்மார்பன், ஸ்ரீவல்லபன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** செல்வத்திருக்கொழுந்து நாச்சியார், வாத்ஸல்யதேவி.

**தீர்த்தம்:** கண்டாகர்ண தீர்த்தம், பம்பா நதி.

**விமானம்:** சதுரங்ககோல விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** கண்டாகர்ணன்.

**விசேஷங்கள்:** இக்கோயிலில் ஸுதர்சன சக்ரம் ஸ்தாபிக்கப் பட்டுள்ளது. த்வஜஸ்தம்பம் பொன் தகடு வேயப்பட்டுள்ளது. பெண்கள் ஸந்நிதிக்கு வெளியிலிருந்தே ஸேவிக்க வேண்டும். இத்தலத்தில் சங்கர மங்கலத்தம்மை என்கிற பதிவிரதை ஏகாதசி விரதம் இருந்து துவாதசியன்று ப்ருஹ்மசாரிக்கு பாரணை செய்வித்து வந்ததாகவும், தோலகாசுரன் இதற்கு இடையூறு செய்ததாகவும், பகவான் ப்ருஹ்மசாரி வேடத்தில் வந்து அசுரனைக் கொன்று பாரணைக்கு வந்த போது க்ருஷ்ணாஜினத்தினால் திருவாழ் மார்பை மறைப்பதைக் கண்ட அப்பதிவ்ரதையின் ப்ரார்த்தனைப்படி திருவாழ் மார்பை இன்றும் பக்தர்களுக்கு ஸேவை ஸாதிப்பதாக

கண்டாகர்ணன் என்பவன், முதலில் சிவபக்தனாக இருந்து, பிறகு சிவன் உபதேசித்தபடி அஷ்டாக்ஷர மந்திரத்தை ஜபிக்கும்போது தன் செவியில் க்ருஷ்ண நாமம் தவிர மற்ற எதுவும் விழாதிருக்க, தன் காதில் இரண்டு பொன்மணிகளை அணிந்து அது சப்திக்கும்படி அசைத்துக்கொண்டு தவம் செய்து மோக்ஷம் அடைந்தாக ஸ்தல வரலாறு.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1808-17, 2674 (118)

**நம்மாழ்வார்:** 3205-15

மொத்தம் 22 பாசுரங்கள்.

## 81. திருக்கடித்தானம்

திருவல்லாவிலிருந்து கோட்டயம் சாலையில் 8 கி.மீ. பஸ்ஸில் சென்று, செங்கணச்சேரியில் இறங்கி, அங்கிருந்து வேறு சாலையில் கிழக்கே இரண்டு மைல் சென்று இவ்வூரை அடையலாம். இங்கு வசதி ஒன்றும் கிடையாது. தங்குவதானால் செங்கனாச்சேரியிலேயே தங்கவேண்டும். அல்லது திருவல்லவாழில் தங்கி இங்கே பஸ்ஸில் வந்து ஸேவித்துவிட்டுத் திரும்பலாம்.

**மூலவர்:** அத்புத நாராயணன் (அம்ருத நாராயணன்), நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** கற்பகவல்லி.

**தீர்த்தம்:** பூமி தீர்த்தம்.

**விமானம்:** புண்யகோடி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ருக்மாங்கதன்.

**விசேஷங்கள்:** இங்கே நரஸிம்ஹன், க்ருஷ்ணன் ஸந்நிதிகளும் இருக்கின்றன. ருக்மாங்கதன் என்கிற ஸூர்ய வம்சத்து அரசன் ஆண்ட இடம். ஏகாதசி வ்ரதம் இருந்து, அதன் பலனை தேவர்களுக்குக் கொடுத்து, அவர்களை தேவலோகம் அனுப்பித்த ஸ்தலம். இந்த ஸந்நிதியை ஸஹதேவன் ஜீர்ணோத்தாரணம் செய்ததால், ஸஹதேவ ப்ரதிஷ்டை என்பர்.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3502-12 - 11 பாசுரங்கள்.

## 82. திருச்செங்குன்றூர் (திருச்சிற்றாறு)

திருவனந்தபுரத்திலிருந்து கொல்லம் வழியாக எர்ணாகுளம் செல்லும் ரயில் பாதையில் **செங்கண்ணூர்** ஸ்டேஷன் இருக்கிறது.

வெளியூர் பஸ்கள் பல வருகின்றன. ஹோட்டல்கள், சத்திரங்கள் உண்டு. தர்மர் தவம் செய்த இடம், பெரிய டவுன். திருவல்லாவிலிருந்து தெற்கே 10 கி.மீ.

**மூலவர்:** இமையவரப்பன், நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** செங்கமலவல்லி.

**தீர்த்தம்:** சங்க தீர்த்தம், திருச்சிற்றாறு.

**விமானம்:** ஜகஜ்ஜோதி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ருத்ரன் (சிவன்).

**விசேஷங்கள்:** சூரன், பத்மன் என்றிருவர் சிவன் வரம் பெற்று ஓர் உடலாய் சூரபத்மன் என்ற பெயர் பூண்டு, தேவர் உள்பட எல்லாரையும் இம்சை செய்ததால், ஸுப்ரஹ்மண்யன் இவர்களை ஸம்ஹாரம் செய்து, அவர்களைக் கொடியில் சேவலாகவும் மயிலாகவும் ஆக்கிக்கொண்டதாக வரலாறு. தன் குருவான துரோணரை யுத்தத்தில் கொல்வதற்கு "அச்வத்தாமா ஹத:" என்று உரக்கச் சொல்லி "குஞ்ஜர:" என்று மெதுவாக சொன்னது தர்மபுத்ரரின் மனதை வருத்தியபடியால், இத்தலத்திற்கு வந்து ஆலய ஜீர்ணோத்தாரணம் செய்து, திருசிற்றாற்றில் ஸ்நானமும் பகவத் பூஜையும் செய்து. மன நிம்மதி அடைந்ததாக ஸ்தல வரலாறு. தர்மபுத்ரர் ஜீர்ணோத் தாரணம் செய்ததால், தர்மபுத்ரர் ப்ரதிஷ்டை என்பர்.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3480-90 - 11 பாசுரங்கள்.

## 83. திருப்புலியூர் (குட்டநாடு)

செங்கண்ணூரிலிருந்து (மார்க்கம் 82 காண்க) மேற்கே 5 கி.மீ. தூரத்திலுள்ளது. வண்டியில் போகலாம். பஸ் வெகு அரிதாகப் போகிறது. வசதி ஒன்றுமில்லை.

**மூலவர்:** மாயப்பிரான், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பொற்கொடி நாச்சியார்.

**தீர்த்தம்:** ப்ரஜ்ஞாஸரஸ், பூஞ்சுனை தீர்த்தம்.

**விமானம்:** புருஷோத்தம விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ஸப்தரிஷிகள்.

**விசேஷங்கள்:** இக்கோயிலை பீமன் ஜீர்ணோத்தாரணம் செய்ததால் பீமசேனனால் ப்ரதிஷ்டை என்றழைக்கப்படுகிறது. சிபி குமாரன் வ்ருஷாதர்பி அரசாண்ட போது, க்ஷாமம் உண்டானதாகவும், அப்போது அங்கு வந்த ஸப்தரிஷிகளுக்கு அரசன் தானம் செய்வதாகச் சொல்ல, அரசர்களிடம் தானம் பெறுவது மஹாபாபம் என்று ரிஷிகள் போக, மந்திரிகள் மூலம் பொன் கலந்த பழங்களை அனுப்ப, ஞானத்ருஷ்டியால் ரிஷிகள் அதை உணர்ந்து மறுக்க, அரசன் ஹோமம் செய்து க்ருத்யை என்ற மாரக ஸ்த்ரீயை உண்டாக்கி ரிஷிகளைக் கொல்ல ஏவ பகவான் இந்திரனை அனுப்பி க்ருத்யையைக் கொன்று ரிஷிகளை ஸ்வர்க்கத்துக்கு அழைத்துப் போய் ஸுகாநுபவம் செய்துவைத்ததாக ஸ்தல புராணம். ஸப்தரிஷிகள் ஸ்ரீமந்நாராயணன் தான் தேவதைகளுக்குள் உத்தமன் என்று பரதேவதா நிர்ணயம் செய்ததால் பகவான் ப்ரத்யக்ஷமாகி மாயப்பிரானாகக் காட்சி கொடுப்பதாக ஐதீஹம்.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3535-45

**திருமங்கையாழ்வார்:** 2673 (71)

மொத்தம் 12 பாசுரங்கள்.

## 84. திருவாறன்விளை (ஆரம்முளா)

செங்கண்ணூரிலிருந்து (மார்க்கம் 82 காண்க) கிழக்கே 9 கி.மீ. பஸ்ஸில் போகலாம். வசதிகள் குறைவு. ஆனால் தேவஸ்தான சத்திரம் இருக்கிறது. தளிகை செய்து கொள்ளலாம்.

**மூலவர்:** திருக்குறளப்பன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பத்மாஸநி நாச்சியார்.

**தீர்த்தம்:** வேதவ்யாஸ ஸரஸ், பம்பா தீர்த்தம்.

**விமானம்:** வாமன விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ரஹ்மா, வேதவ்யாஸர்.

**விசேஷங்கள்:** யுத்தத்தில், கர்ணனின் தேர் இடது சக்கரத்தை பூமிவிழுங்கிய பொழுது, கர்ணன், தன் ரதத்தைத் தூக்கிவிட்டு வரும்வரை பூமியில் இருக்கும் தன்னைக் கொல்ல வேண்டாம் என்று சொல்லியும், வஞ்சகமாக பாணத்தைப் போட்டுக் கொன்றதால், மனது வருந்திய அர்ஜுனன், இவ்விடம் வந்து தவம் செய்து இந்த கோவிலை ஜீர்ணோத்தாரணம் செய்ததாக ஸ்தல புராணம். ஒரு பெரிய மேட்டின் மேலுள்ள இப்பெரிய கோயில் அர்ஜுனனால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டதாம். பக்கத்தில் கோயில் மதிலைத் தொட்டுக்கொண்டு அழகிய பம்பாநதி ஓடுகிறது. முன்பு ப்ருஹ்மதேவரிடமிருந்து வேதங்களை மதுகைடபர்கள், அபகரித்த போது ப்ருஹ்மா ஸ்ருஷ்டி ஞான சூனியராக, பகவானைக் குறித்து தவம் செய்ய, பகவான் ஸ்ருஷ்டி ஞானத்தை ப்ருஹ்மாவுக்கு திரும்பி அருளிய ஸ்தலம். இந்த ஸ்தலத்தில்தான் சபரிமலை ஐயப்ப ஸ்வாமியின் ஆபரணங்கள் பத்திரமாக வைக்கப்பட்டு மகர ஜோதியின்போது ஊர்வலமாக சபரிமலைக்கு பக்த கோஷ்டியுடன் எடுத்து செல்லப்பட்டு வருகின்றன.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3436-46 - 11 பாசுரங்கள்.

## 85. திருவண்வண்டூர் (திருவமுண்டூர்)

செங்கண்ணூரிலிருந்து (மார்க்கம் 82 காண்க) வடக்கே 6 கி.மீ. தூரத்தில் இருக்கிறது. தங்கும் வசதிகள் ஒன்றுமில்லை. டவுன் பஸ் வசதி உண்டு. திருவல்லாவில் தங்கி ஸேவிக்கலாம்.

**மூலவர்:** பாம்பணையப்பன், கமலநாதன், நின்ற திருக்கோலம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** கமலவல்லி நாச்சியார்.

**தீர்த்தம்:** பாபநாச தீர்த்தம், பம்பா தீர்த்தம்.

**விமானம்:** வேதாலய விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** மார்க்கண்டேயர், நாரதர்.

**விசேஷங்கள்:** இக்கோயிலை நகுலன் ஜீர்ணோத்தாரணம் செய்ததால் இத்தலம் நகுலனால் பிரதிஷ்டை என்று அழைக்கப் படுகிறது. இவ்வூரில் பூமியைத் தோண்டுகையில் புதிய பெருமாள் விக்ரஹங்கள் கண்டெடுக்கப்பட்டுப் புதிய ஸந்நிதிகள்

மண்டபங்களுடன் ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. நாரதர் ப்ருஹ்மாவினால் சபிக்கப்பட்டு இவ்விடம் வந்து ஸ்ரீமந் நாராயணனை பூஜித்து பகவானிடமிருந்து தத்வ ஞானம் உபதேசிப்பதே தொழிலாக வேண்டும் என்ற வரத்தைப் பெற்ற ஸ்தலம். நாரதர் இங்கே நாரதீய புராணத்தை இயற்றியதாகவும், ஸ்ரீமஹாவிஷ்ணுவே பரதத்துவம் என்று ஸ்தாபித்து அவரைப் பூஜிக்கும் முறை, துதி முதலியன அடங்கிய பெருநூலை இருபத்தையாயிரம் க்ரந்தங்களில் செய்து முடித்ததாக ஸ்தல புராணம்.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3227-37 - 11 பாசுரங்கள்.

## 86. திருவனந்தபுரம்

சென்னை-திருவனந்தபுரம் ரயில் மார்க்கத்தில் திருவனந்தபுரம் ஸெண்ட்ரல் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து சுமார் 1 கி.மீ. தூரத்தில் கோயில் இருக்கிறது. எல்லா வசதிகளும் உள்ள பெரிய நகரம். பஸ் வசதிகள் உண்டு. கேரள ராஜ்யத்தின் தலைநகர்.

**மூலவர்:** அநந்தபத்மநாபன், புஜங்கசயனம் (அநந்த சயனம்), கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ஸ்ரீஹரிலக்ஷ்மி.

**தீர்த்தம்:** மத்ஸ்ய தீர்த்தம், பத்ம தீர்த்தம், வராஹ தீர்த்தம்.

**விமானம்:** ஹேமகூட விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** இந்த்ரன், சந்த்ரன், ஏகாதச ருத்ரர்கள்.

**விசேஷங்கள்:** மிகப் பெரிய திருமேனியாதலால், சிரஸ், உடல், திருவடிகள் இவற்றை 3 வாசல்கள் வழியே தனித்தனியே தரிசிக்க வேண்டும். தென்புறம் பிராகாரத்தில் யோக நரஸிம்ஹனும், ஸந்நிதிக்கு முன்னால் ஹனுமானும், ஸந்நிதிக்குப் பின்னால் க்ருஷ்ணனும் காட்சியளிக்கின்றனர். ஹனுமான்மீது சாத்தப்படும் வெண்ணெய் எவ்வளவு நாளானாலும், எந்த வெயிற்காலத்திலும உருகுவதுமில்லை; கெட்டுப்போவதுமில்லையாம். லக்ஷ்மீவராஹர் கோயிலும் ஸ்ரீநிவாஸர் கோயிலும் தெற்குப் பக்கத்தில் உள்ளன. தேசிகன் மங்களாசாஸனம் செய்த ஸ்தலம். திவாகரயோகி என்பவர்ஆசாபாசங்களை விட்டு, க்ஷீராப்திநாதனைக் கண்டு முக்தி அடைய, ஸதா ஹரி பூஜை செய்து கொண்டிருந்தார். அவரை

அநுக்ரஹிக்க பகவான் திருவுள்ளம் கொண்டு இரண்டு வயதுள்ள குழந்தையாக யோகிமுன் தோன்றி யோகி பிரார்த்தித்தபடி இருக்க, ஒருநாள் யோகி பூஜை செய்யும்போது ஒரு ஸாளக்ராமத்தை குழந்தை வாயில் போட்டுக்கொண்டதை யோகி பார்த்துக் கண்டிக்க, குழந்தை ஓட, யோகி துரத்த, குழந்தை ஒரு மரப்பொந்தில் புகுந்து மரம் விழுந்து பகவான் பெரிய உருவத்துடன் ஸேவை ஸாதித்ததாகவும், யோகி பிரார்த்தனைப்படி பகவான் த்ரிதண்டத்தளவு வடிவமெடுத்து திருமுகமண்டலம், நாபி, பாதம் இப்படி மூன்று த்வாரத்தால் ஸேவிக்கும்படி திருக்கோலம் பூண்டதாகவும் ஐதீஹம். இங்கு அனந்தசயன விரதம் இருப்பது விசேஷமாக கருதுகிறார்கள்.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3678-88 - 11 பாசுரங்கள்.

## 87. திருவாட்டாறு

திருவனந்தபுரத்திலிருந்து நாகர்கோயில் போகும் பஸ்ஸில் சென்று தொடுவெட்டி என்ற இடத்தில் இறங்கி அங்கிருந்து வேறு பஸ்ஸில் 9 கி.மீ. சென்று இவ்வூரை அடைய வேண்டும். சுமாரான வசதிகள் உண்டு. திருவனந்தபுரம்-கன்னியாகுமரி ரயில் பாதையில் உள்ளது. நாகர்கோவிலிலிருந்து 28-30 கி.மீ.

**மூலவர்:** ஆதிகேசவப் பெருமாள், புஜங்கசயனம், மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** மரகதவல்லி நாச்சியார்.

**தீர்த்தம்:** கடல்வாய்த் தீர்த்தம், வாட்டாறு, ராமதீர்த்தம்.

**விமானம்:** அஷ்டாங்க விமானம், அஷ்டாக்ஷர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** பரசுராமன், சந்திரன்.

**விசேஷங்கள்:** இக்கோயில் திருவனந்தபுரம் கோயிலைப் போலவே கட்டப்பட்டுள்ளது. இங்கும் பெருமாளை ஸேவிக்க மூன்று வாசல்களும், பெரிய ப்ராகாரங்களும் உண்டு. க்ருஷ்ணன் ஸந்நிதியும் உண்டு. கர்ப்பக்ருஹத்தில் மூலவர் திருமுகமண்டலத்தில் மலை வேளைகளில் இயற்கையாக சூரிய வெளிச்சம் விழும்படி கோயிலை அமைத்திருக்கிறார்கள். கேசி என்ற அசுரன் தேவர்களை இம்ஸிக்க, தேவர்கள் பகவானிடம் முறையிட, பகவான் கேஸியுடன் யுத்தம் செய்து, கேஸியைத் தள்ளி மேலே படுத்துக்கொள்ள,

கேஸியின் பத்னி, ஆஸுரி, கங்கையை பிரார்த்திக்க, கங்கை தாம்பரபரணியுடன் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடிவர, பகவான் உத்திரவுப்படி, பூமிதேவி பகவான் இருக்கும் இடத்தை மலைபோல் மேடாக்க, கங்கையும் தாம்பரபரணியும் பகவானை வணங்கி மாலை ஸமர்ப்பித்ததாற்போல் இரண்டாகப் பிரிந்து வட்டமாக சென்றபடியால் இந்த ஸ்தலம் 'திருவட்டாறு' என்ற பெயர் பெற்றதாக ஸ்தல புராணம். ஆதிகேஸியை பகவான் நிக்ரஹம் செய்தபடியால் பகவானுக்கு ஆதிகேஸர் என்கிற திருநாமம் உண்டாயிற்று. நதிகள் பிரியுமிடம் "மூவாத்து முகம்" என்றும், "தோதை பிரளி" என்றும் வழங்கப்படுகிறது. நதிகளை அநுக்ரஹிக்க இங்கே தீர்த்தவாரி நடக்கிறது.

<u>மங்களாசாஸனம்:</u>

**நம்மாழ்வார்:** 3722-32 - 11 பாசுரங்கள்.

## 88. திருவண்பரிசாரம் (திருப்பதிசாரம்)

திருவாட்டாற்றிலிருந்து தொடுவெட்டி (மார்க்கம் 87 காண்க) வந்து, பஸ் மாறி, நாகர்கோயில்-திருநெல்வேலி பஸ் மார்க்கத்தில் நாகர்கோயில் வந்து, அங்கிருந்து 4 கி.மீ. தூரம் வடக்கே சென்று இவ்வூரை அடைய வேண்டும். வசதிகள் சுமார்.

**மூலவர்:** திருக்குறளப்பன், திருவாழ்மார்பன், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** கமலவல்லி நாச்சியார்.

**தீர்த்தம்:** லக்ஷ்மீ தீர்த்தம் என்ற அழகிய பெரிய புஷ்கரிணி.

**விமானம்:** இந்த்ரகல்யாண விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** விந்தை, காரி, உடையநங்கை, கருடன்.

**விசேஷங்கள்:** நம்மாழ்வாரின் தாயார் உடையநங்கை அவதரித்த ஸ்தலம்; திருமாளிகை கோயிலுக்கு வாயுமூலையில் இருக்கிறது. நம்மாழ்வார் குழந்தையாகத் தவழ்வது போல் ஓர் அழகிய விக்ரஹம் இருக்கிறது.

பகவான் ஹிரண்யனை ஸம்ஹாரம் செய்துவிட்டு உக்ரரூபமாக இருந்தபோது, லக்ஷ்மியும் பயந்து தவம் செய்ய வந்ததாகவும், ப்ரஹலாதன் பிரார்த்தனைக்கிணங்கி சாந்த வடிவத்துடன் லக்ஷ்மியைத்

தேடிவர, லக்ஷ்மீ ஆனந்தமடைந்து பகவானின் திருமார்பில் நித்யவாஸம் செய்ததாகவும், அதனால் பகவானுக்கு 'திருவாழ்மார்பன்' என்ற திருநாமம் ஏற்பட்டதாகவும், "ச்ரிய: பதி" ஸஞ்சரித்தபடியால் "திருப்பதிசாரம்" என்ற பெயர் இந்த ஸ்தலத்துக்கு ஏற்பட்டதாகவும் ஐதீஹம்.

திருப்பதிசாரத்தில் உடையநங்கை என்ற பெண் விஷ்ணு பக்தையாகி குருகூரில் காரி என்ற விஷ்ணு பக்தருக்கு பத்தினியாகி அவர்கள் இந்த ஸ்தலத்தில் 41 நாள் விரதமிருந்து ஆவணி சுக்ல ஏகாதசியான வாமநஜயந்தி தினம் ஊஞ்சலுத்ஸவம் நடத்தி, உடையநங்கை கர்ப்பவதியாகி கலி-43-வது நாள், வைகாசி விசாகத்தன்று, நம்மாழ்வார் அவதரித்து, குருகூரில் ஆதிநாதன் ஸந்நிதியில்விட, அந்தக் குழந்தை தவழ்ந்து புளியமரப் பொந்தில் புகுந்து யோக முத்திரையுடன் பத்மாஸன யோகத்தில் அமர்ந்துவிட, மதுரகவி தமக்கு ஹிதோபதேசம் செய்யும்படி பிரார்த்திக்க, நம்மாழ்வார் திருவாய் மொழியை அருளிச் செய்ததாக ஸ்தல புராணம். ஹநுமார் பிரார்த்தனைக்கிணங்க அகஸ்தியர் ராமாயணம் அருளியதாக ஸ்தல வரலாறு. குலசேகர மஹாராஜன் மண்டப கோபுர பிராகாராதிகளை நிர்மாணம் செய்து வாகனங்களைச் செய்து ப்ருஹ்மோத்ஸவம் செய்து வைத்ததாக வரலாறு.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3475 - 1 பாசுரம்.

## 89. திருக்குறுங்குடி (வாமன க்ஷேத்ரம்)

திருநெல்வேலியிலிருந்து நேர் பஸ் வசதியுள்ளது (அல்லது) திருநெல்வேலியிலிருந்து 25 கி.மீ. நாங்குனேரிக்கு பஸ்ஸில் வந்து அங்கிருந்து வேறு பஸ்ஸில் 12 கி.மீ. கடந்து இங்கு வரலாம். (அல்லது) நாங்குனேரியிலிருந்து களக்காடு போய், மறுபடி பஸ் மாறி திருக்குறுங்குடி வந்தால், விரைவில் வரலாம். நாகர்கோவில்/ கன்யாகுமரியிலிருந்து பாபநாசம், செங்கோட்டை பஸ் வழியில் உள்ளது. இவ்வூரில் ராமாநுஜ கூடங்களும் மடங்களும் உள்ளன. தண்ணீர்ப் பந்தல், ஹோட்டல் உள்ளன. அர்ச்சகரிடமே சொல்லி வைத்தால் பிரஸாதம் விலைக்குக் கொடுப்பார்.

**மூலவர்:** நின்றநம்பி (குறுங்குடி நம்பி, இருந்த நம்பி, வடுக நம்பி, வைஷ்ணவ நம்பி, திருப்பாற்கடல் நம்பி, மலை மேல் நம்பி என்ற பெயர்களுண்டு), நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** அழகிய நம்பி (இவ்வாறே உள்ளூரில் அறியப்படுகிறது) நவராத்திரி உற்சவத்தில் அழகிய நம்பி நாச்சிமார்களுடன் கொலுவாக எழுந்தருளியிருக்கும் சமயம் "அழகிய நம்பி உலா" தொன்று தொட்டு நடக்கிறது.

**தாயார்:** குறுங்குடிவல்லி நாச்சியார் (இரு தனிக் கோயில் நாச்சியார்கள் உண்டு).

**தீர்த்தம்:** திருப்பாற்கடல், பஞ்சதுறை, சிந்துநதி.

**விமானம்:** பஞ்சகேதக விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சிவன்.

**விசேஷங்கள்:** இது திருமங்கையாழ்வார் பரமபதித்த ஸ்தலம். தனிக் கோயில் நாச்சியார்களின் உத்ஸவர்கள் பெருமாளுடன் ஏகாஸனத்தில் இருப்பதால் தாயார் ஸந்நிதிகளில் அர்ச்சனை கிடையாது. நின்ற நம்பி, கிடந்த நம்பி இவர்களுடைய ஸந்நிதிகளுக்கு நடுவில் சிவன் (மஹேந்திரகிரி நாதர்) ஸந்நிதியும் பைரவர் ஸந்நிதியும் உள்ளன. பெருமாள் மடைப்பள்ளி பிரஸாதங்களே சிவனுக்கும்

நிவேதனம் செய்யப்படுகின்றன. "இருந்த நம்பி" ஸந்நிதியிலுள்ள பெருமாளை வைகுந்தநாதன் என்கிறார்கள். ஸ்ரீமணவாளமாமுனிக்கு ஸந்நிதி இருக்கிறது. இக்கோயிலிலிருந்து சுமார் ½ கி.மீ. தூரத்தில் திருப்பாற்கடல் என்ற ஓடையின் கரையில், திருப்பாற்கடல் நம்பி ஸந்நிதி உள்ளது. இவ்வூரிலிருந்து சுமார் 9 கி.மீ. தூரத்தில் உள்ள குன்றின்மேல் மலைமேல் நம்பி ஸந்நிதி உள்ளது. ஊருக்குக் கிழக்கே, ஆற்றின் அருகில் வயல்வெளிகளில் "திருமங்கையாழ்வார் திருவரசு" என்ற சிறிய கோயில் இருக்கிறது.

ஊரிலிருந்து சுமார் ஒரு கி.மீ. தூரத்தில் திருப்பாற்கடல் ஆற்றின் நடுவில் திருப்பரிவட்டப்பாறை என்ற பாறை மேல் உடையவர் ஸந்நிதியிருக்கிறது. விரோதிகள் உடையவரைக் கொன்றுவிட ஏற்பாடு செய்தபோது வடுகநம்பி என்ற பெயருடன் பெருமாள், இவரை இந்தப் பாறை மீது கிடத்திக் காப்பாற்றினாராம். பெருமாள் உடையவருக்கு ஸிம்ஹாஸனமிட்டு, தான் அருகில் சீடனாக நின்று திருமந்திரார்த்த உபதேசம் பெற்றதால் 'வைஷ்ணவ நம்பி' என்றழைக்கப்படுகிறார். கைசிக த்வாதசியன்று நம்பாடுவான் என்ற பக்தர் இத்தலத்தில் தன் புண்ணியத்தில் ஒரு பாகத்தை தன்னை பக்ஷிக்க வந்த ப்ரம்மராக்ஷஸனுக்குக் கொடுத்து இத்தலத்தை ரக்ஷித்தார் என்று வராஹபுராண வரலாறு. நம்பாடுவான் வெளியே நின்று சேவிப்பதற்காகவே கொடிமரம் சற்று விலகியிருப்பதாக வரலாறு. இன்றும் இந்த ஐதீஹம் வேஷங்கள் போட்டு நாடக ரூபமாக இங்கே ஒவ்வொரு வருஷமும் கைசிக ஏகாதசியன்று ராத்திரி நடக்கிறது. யமபட்டணம் இந்தத் தலத்திலிருந்து கூப்பிடு தூரத்தில் இருப்பதாக ஐதீஹம்.

இந்த ஸந்நிதி திருக்குறுங்குடி ஜீயர் ஆதிக்கத்தில் உள்ளது. (Pincode 627 115).

பகவான் வாமன த்ரிவிக்ரம அவதாரம் எடுத்து ஆகாயத்தை அளந்தபோது திருவடிச் சதங்கையிலிருந்து சிலம்பாறு உண்டானதாக ஸ்தல வரலாறு.

ஒரு ராக்ஷஸன் ஒரு ப்ராம்மணனைக் கொல்லவர, கொல்வது பாவம் என்று ப்ராம்மணன் சொல்ல, அது என் தொழில் என்று ராக்ஷஸன் சொல்ல, விவாதம் முற்றியதால், பகவான் வேடன் போல் வேஷம் பூண்டு வந்து, அவர்களுக்கு உபதேசித்தபடி, திருப்பாற்கடல் தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்து ரிஷிகள் உபதேசம் பெற்று அகஸ்தியரை வணங்கி இருவரும் துவேஷத்தை விட்டு, முக்தியடைந்ததாக ஸ்தல புராணம்.

சிவபெருமான் ப்ருஹ்மாவின் தலையைக் கிள்ளி, கபாலம் கையில் ஒட்டிக்கொள்ள பகவான் சொல்லியபடி, திருக்குறுங்குடிவல்லி யால் சாபம் நீங்கி பகவான் உபதேசித்த ஸுதர்சன மந்த்ரத்தை ஜபித்து சுத்தனானார்.

**குறிப்பு:** இங்கும் நாங்குநேரியிலும் மலைநாட்டு ஸந்நிதிகள் போல், புருஷ ஸேவார்த்திகள் சட்டை அணியக்கூடாது. புகழேந்தியும் ஒட்டக்கூத்தரும் பெருமாள் புகழ் பாடியுள்ளனர்.

**அருகிலுள்ள மற்ற கோயில்கள்:** வள்ளியூர் சிவஸ்தலங்கள், கன்னியாகுமரி.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 71.

**திருமழிசையாழ்வார்:** 813.

**திருமங்கையாழ்வார்:** 1005, 1399, 1470, 1788-1807, 2065, 2674 (114)

**நம்மாழ்வார்:** 2782, 2986, 3161-71.

மொத்தம் 40 பாசுரங்கள்.

## 90. திருச்சிரீவரமங்கை (திருச்சிரீவரமங்கல நகர், **வானமாமலை, நாங்குனேரி,** தோதாத்ரி க்ஷேத்ரம்)

திருநெல்வேலியிலிருந்து திருக்குறுங்குடி வரும் வழியில் நாங்குனேரியில் இறங்கியோ அல்லது திருக்குறுங்குடியிலிருந்து திரும்புகையிலோ பெருமாளை ஸேவிக்கலாம். இங்கு ராமானுஜ கூடங்கள், வானமாமலை ஜீயர் மடம் தவிர, தங்க வேறு வசதிகளும் உண்டு. (Pincode 627 108).

**மூலவர்:** தோதாத்ரிநாதன் (வானமாமலை), வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** தெய்வநாயகன்.

**தாயார்:** இருபுறமும் உபயநாச்சியார்கள்; தவிர, சிரீவர மங்கைத்தாயார் (இரண்டு தனிக்கோயில் நாச்சியார்களும் உண்டு).

**தீர்த்தம்:** இந்த்ர தீர்த்தம், சேற்றுத்தாமரைத் தீர்த்தம்.

**விமானம்:** நந்தவர்த்தந விமானம் என்ற ஸ்ரீவைகுண்ட விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ரஹ்மா, இந்த்ரன், ரோமசர், ப்ருகு, மார்க்கண்டேயர்.

**விசேஷங்கள்:** இது தானாகத் தோன்றிய (ஸ்வயம் வ்யக்த) ஸ்தலம். பெருமாளுக்குத் தினம் தைல அபிஷேகம் உண்டு, அந்த எண்ணெயை எடுத்து சுமார் 25 அடி நீளமும் 15 அடி அகலமுமுள்ள கிணற்றில் ஊற்றிவிடுகிறார்கள், இந்த எண்ணெயை நம்பிக்கையுடன் சாப்பிட்டால் எல்லா வியாதிகளும் நீங்கும்.

ஸிந்து தேசத்து அரசன் குசாஸன மஹரிஷியால் சபிக்கப்பட்டு நாயுருவத்துடன் வந்து சேற்றுத்தாமரை புஷ்கரிணியில் ஸ்நானம் செய்து பழைய அரச உருவத்தை அடைந்த ஸ்தலம். இங்கேயுள்ள சடாரியில் ஸ்ரீசடகோபனின் திருவுருவம் பொறிக்கப்பட்டுள்ளது. இந்த ஸ்தலம் வானமாமலை மடத்துக்குத் தலைமை இடம். வானமாமலை ஜீயர் இங்கேதான் எழுந்தருளியிருக்கிறார்.

பகவான் மதுகைடபர்களை ஸம்ஹரித்த போது, பூமிதேவி தன் இயல்பான தூய்மையை இழந்ததாகவும், இவ்விடத்தில் தவமிருந்து பகவான் ப்ரத்யக்ஷமாகி, பூமியும் "மேதினி ஆனேனே" என்று புலம்ப, பகவான் அருள்புரிந்து "மாசு கழுவப் பெற்றாய், 'மேதினி' என்ற பெயரும் வாய்க்கும்", என்று சொல்லி வைகுண்டத்தில் வீற்றிருப்பது போல் இத்தலத்தில் ஸ்ரீவைகுண்ட விமானத்தில் ஸ்ரீதேவி பூதேவி ஸமேதனாக ஆனந்தமயமாக காக்ஷி கொடுப்பதாக ஸ்தல வரலாறு. ஊர்வசியும் திலோத்தமையும் இத்தலத்தில் தவமிருந்து பகவான் அருளால் அவர்கள் இருவரும் பெருமாள் அருகில் இன்றளவும் இரு பக்கங்களிலும் நின்று வெண்சாமரம் வீசிக் கொண்டிருப்பதாகவும் ஐதீஹம்.

ஸ்ரீமணவாள மாமுனிகளால் ஸ்தாபிக்கப்பட்ட அஷ்டதிக் கஜங்களில் ஒருவர் ஸ்ரீவானமாமலைஜீயர் ஸ்வாமி. ஸ்ரீமணவாள மாமுனிகளின் தங்க மோதிரத்தை ஸ்ரீஜீயர் ஸ்வாமி ஐப்பசி மூலத்தன்று சாத்திக்கொள்ளும் வழக்கமுண்டு.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3183-93 - 11 பாசுரங்கள்.

## 91. திருவைகுண்டம்
(ஆழ்வார் நவதிருப்பதிகளில் ஒன்று)

இது திருநெல்வேலி - திருச்செந்தூர் லைனில் ஸ்ரீவைகுண்டம் ஸ்டேஷனில் இருந்து 3 கி.மீ. தூரம் உள்ளது. திருநெல்வேலியிலிருந்து

பஸ்ஸிலும் (28-30 கி.மீ.) வரலாம். சாப்பாட்டு வசதி நிறைய உண்டு. இங்கு தங்கும் இடங்கள் அவ்வளவு சிறப்பாக இல்லாவிட்டாலும், இங்கே தங்கி நவதிருப்பதிகளை ஸேவிப்பது வழக்கத்தில் உள்ளது.

**மூலவர்:** ஸ்ரீவைகுண்டநாதன், கள்ளப்பிரான், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** வைகுந்தவல்லி, பூதேவி (இரண்டு தனிக்கோயில் நாச்சியார்கள்).

**தீர்த்தம்:** ப்ருகு தீர்த்தம், தாம்பரபரணி நதி.

**விமானம்:** சந்த்ர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ருகு சக்ரவர்த்தி, இந்த்ரன்.

**விசேஷங்கள்:** ஆதிசேஷன் குடைபிடிக்க, பெருமாள் நின்ற திருக்கோலத்தில் இருப்பது தனிச்சிறப்பு, காலதூஷகன் என்ற சோரன் (திருடன்) தான் திருடிய பொருளில் பாதி வைகுண்டநாதனுக்கு ஸமர்ப்பித்ததாகவும், ஒருசமயம் அரண்மனையில் திருடுகையில் பிடிபட்டு வைகுண்டநாதனை த்யானம் செய்ய, பகவான் திருடன் வேடம் பூண்டு அரசனுக்கு தத்துவங்களை உபதேசித்து, காலதூஷகன் திருடன் அல்ல யோகி என்று அரசன் நினைக்க, பகவான் ப்ரத்யக்ஷமாகி திருடனுக்கும் அரசனுக்கும் நட்பு உண்டாக்கி அரசன் பிரார்த்தனைப்படி பகவான் "கள்ளப்பிரான்" என்ற திருநாமம் பெற்றார். ஸோமகன் என்னும் அசுரன் சதுர்முகனுடைய ஞானத்தை அபஹரித்ததாகவும், ப்ருஹ்மா இவ்விடத்தில் தவம் செய்து, பகவான் ப்ரத்யக்ஷமாகி, அசுரன் அபஹரித்த ஸ்ருஷ்டிஸாமர்த்திய ஞானத்தை கொடுத்ததாக வரலாறு. மணவாளமாமுனிகள் மங்களாசாஸனம் செய்த இடம்.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**நம்மாழ்வார்:** 3571, 3575 - 2 பாசுரங்கள்.

## 92. திருவரகுணமங்கை (ஆழ்வார் நவதிருப்பதிகளில் ஒன்று)

திருநெல்வேலி - ஸ்ரீவைகுண்டம் ரயில் பாதையில் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து, கிழக்கே 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. இங்கு வீடுகளே கிடையாது. **நத்தம்** என்றால் தான் பலருக்குத் தெரியும்.

**மூலவர்:** விஜயாஸனப் பெருமாள், ஆதிசேஷன் குடை பிடிக்க வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** வரகுணவல்லித்தாயார், வரகுணமங்கைத்தாயார், உபயநாச்சிமார் (தனிக்கோயில் நாச்சியார் இல்லை).

**தீர்த்தம்:** அக்நி தீர்த்தம், தேவபுஷ்கரிணி.

**விமானம்:** விஜயகோடி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** அக்னி, ரோமசமுனிவர், சத்தியவான்.

**விசேஷங்கள்:** வேதவித் என்னும் ப்ராஹ்மணன் இத்தலத்தில் விஷ்ணுவை குறித்து தவமிருந்து பகவான் ப்ரத்யக்ஷமானபோது அவர் பிரார்த்தித்தபடி 'விஜயாஸனர்' என்ற திருநாமம் பகவானுக்கு ஏற்பட்டதாக ஐதீஹம்.

மணவாள மாமுனிகள் மங்களாசாஸனம் பெற்ற இடம்.

**குறிப்பு:** ஸேவிப்பதற்கு முன் கூட்டியே ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**நம்மாழ்வார்:** 3571-1 பாசுரம்.

## 93. திருப்புளிங்குடி (ஆழ்வார் நவதிருப்பதி)

வரகுணமங்கையிலிருந்து சுமார் 1 கி.மீ. தூரம் அதே சாலையில் சென்று அடையலாம். (மார்க்கம் 91, 92 காண்க). ஸ்ரீவைகுண்டத்திலிருந்து வந்தால் 2-3 கி.மீ.

**மூலவர்:** காய்சினவேந்தன், புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** மலர்மகள் நாச்சியார், பூமகள் நாச்சியார், (பெரிய திருவுருவங்கள்), புளிங்குடிவல்லி என்ற சிறிய உத்ஸவத்தாயாரும் உண்டு. தனிக்கோயில் நாச்சியார் கிடையாது.

**தீர்த்தம்:** வருண, நிர்ருதி தீர்த்தம்.

**விமானம்:** வேதஸார விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** வருணன், நிர்ருதி, தர்மராஜன், நரர்.

**விசேஷங்கள்:** பெருமாள் திருவயிற்றிலிருந்து தாமரைக்கொடி தனியாகக் கிளம்பிச் சென்று சுவற்றிலுள்ள ப்ரஹ்மாவின்

தாமரைமலருடன் சேர்ந்து கொள்கிறது. பாதங்களை வெளி ப்ராகாரத்திலிருந்து ஒரு ஜன்னல் வழியாகப் பார்க்க வேண்டும். உள்ளேயே ஊன்றிப் பார்த்தால் ஒரு பாதம் ஸேவையாகிறது. இந்திரனுக்கு ப்ரஹ்மஹத்தி தோஷம் விடுபட்ட ஸ்தலம். வஸிஷ்ட புத்ரர்களால் ராக்ஷஸனாக சபிக்கப்பட்ட யக்ஞசர்மாஎன்ற ப்ராம்மணன், பகவான் அடிபட்டு சாப விமோசனம் ஆனதாக ஸ்தல வரலாறு.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3473, 3568-78 - 12 பாசுரங்கள்.

## 94. திருத்தொலைவில்லிமங்கலம் (ஆழ்வார் நவதிருப்பதிகளில் இரண்டு - இரட்டைத் திருப்பதி)

திருக்குளந்தையிலிருந்து 1½ கி.மீ. மங்கலக்குறிச்சி என்ற ஊர் வந்து அங்கிருந்து வாய்க்கால் கரைமேலே உள்ள சுப்பிப் பாதையில் 3 கி.மீ. வந்து வாய்க்காலைக் கடந்து இவ்வூருக்கு வரலாம். ஆழ்வார் திருநகரியிலிருந்து 3 கி.மீ. கிழக்கே வந்து தாம்பரபரணி ஆற்றைக் கடந்தும் இங்கு வரலாம். இங்குள்ள இரண்டு கோயில்களும் சேர்ந்தே ஒரு திவ்ய தேசமாகக் கருதப்படுகிறது.

(1) முதல் கோயில்: தாம்பரபரணி நதிக்கரையில் உள்ளது.

**மூலவர்:** ஸ்ரீநிவாஸன் (தேவப்பிரான்), நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** உபயநாச்சியார்கள் (தனிக்கோயில் இல்லை).

(2) இரண்டாவது கோயில்: முன்சொன்ன வாய்க்கால் கரையிலேயே உள்ளது.

**மூலவர்:** அரவிந்தலோசனன், செந்தாமரைக்கண்ணன், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** கருந்தடங்கண்ணி நாச்சியார்.

**தீர்த்தம்:** வருண தீர்த்தம், தாம்பரபரணி ஆறு.

**விமானம்:** குமுத விமானம்.

ப்ரத்யக்ஷம்: இந்த்ரன், வாயு, வருணன்.

விசேஷங்கள்: இக்கோயில்கள் காட்டில் உள்ளன. அரு வெகு தூரத்துக்கு வீடுகளோ மனித நடமாட்டமோ இர

அர்ச்சகர் இருக்கும் நேரம் தெரிந்து கொண்டோ அல்லது அவருடனோ போகவேண்டும். அத்திரேய ஸுப்ரபர் என்கிற முனி இத்தலத்தில் யாகசாலை ஏற்படுத்தி ரித்விக்குகளுடன் யாகசாலையை சோதித்தபொழுது அவ்விடத்தில் மிகவும் பிரகாசித்த தராஸையும் வில்லையும் கண்டு ஆச்சரியப்பட்டு எடுத்தபொழுது தராசு ஒருபெண்ணாகவும் வில் ஒரு புருஷனாகவும் குபேர சாபத்திலிருந்து விடுபட்டதாகவும், இங்கே துலையும் வில்லும் முக்தி அடைந்தபடியால் "துலைவில்லிமங்கலம்" என்று இந்த ஸ்தலத்திற்குப் பெயர் உண்டானதாகப் புராண வரலாறு.

இரண்டு திருப்பதிகள் இருப்பதால், இரட்டைத் திருப்பதி என்று அழைக்கப்படுகிறது. அச்வினி தேவர்களுக்கு பகவான் அருளால் யாகத்தில் பாகம் கொடுத்த ஸ்தலம். பக்கத்தில் சௌரமங்கலம் கிராமத்தில் நம்மாழ்வார் அவதார ஸ்தலம் (அப்பன் சந்நிதி).

மணவாள மாமுனிகள் மங்களாசாஸனம் செய்த பெருமாள் இவர்.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3271-81 - 11 பாசுரங்கள்.

## 95. திருக்குளந்தை

(பெருங்குளம், ஆழ்வார் நவதிருப்பதி)

திருப்புளிங்குடியிலிருந்து (மார்க்கம் 93 காண்க) அதே சாலையில் இன்னும் 6-7 கி.மீ. சென்று அடையவேண்டும். ஸ்ரீவைகுண்டத்திலிருந்து வடகிழக்கில் 11 கி.மீ. 'ஏரல்' பஸ்ஸில் வரலாம். இங்கு வசதிகள் எதுவும் இல்லை.

***மூலவர்:*** ஸ்ரீநிவாஸன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** மாயக்கூத்தன்.

**தாயார்:** அலமேலுமங்கைத் தாயார், குளந்தைவல்லி என்று இரண்டு உபயநாச்சியார்கள். (தனிக்கோயில் நாச்சியார் *கிடையாது.)*

**தீர்த்தம்:** பெருங்குளம்.

**விமானம்:** ஆநந்தநிலய விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ருஹஸ்பதி.

**விசேஷங்கள்:** கருடனும் உத்ஸவராகப் பெருமாள் பக்கத்தி எழுந்தருளியிருக்கிறார். வேதசாரன் என்ற அந்தணனுக்கு கமலா என்று ஒரு கன்னிகை பிறந்து, அவள் கடவுளையே கணவனா அடைய தவம் புரிந்து, மஹாவிஷ்ணு ப்ரத்யக்ஷமாகி, தம் கௌஸ்து மணியுடன் அவளைச் சேர்த்து ஆலிங்கனம் செய்து, விவாஹ செய்து கொண்டதாகவும், பாலிகை தவம் செய்த இடமாதலா 'பாலிகைவனம்' என்று பெயரடைந்ததாகவும் புராண வரலா

இத்தலத்தில் அச்மஸாரன் என்ற அசுரனை பாலிகாவனத்தி மாயாயுத்தம் செய்து அவன் காலைப் பிடித்து தரையில் மோத பகவான் அவன்போல் நாட்டியமாடி ஸம்ஹரித்து தேவர்க பிரார்த்தனைப்படி மாயக்கூத்தன் என்ற திருநாமம் பெற்றதா ஐதீஹம். இவ்வூர் அர்ச்சகர் சில சமயம் தொலைவில்லிமங்கல பூஜைக்குப் போய்விடுவதுண்டு. அவர் இருக்கும் நேரம் தெரிந் ஸேவிக்க வேண்டும்.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3561 - 1 பாசுரம்.

## 96. திருக்கோளூர் (ஆழ்வார் நவ திருப்பதி)

தென் திருப்பேரையிலிருந்து ஆழ்வார் திருநகரி (ஆழ்வா திருநகரி: மார்க்கம் 98 காண்க) வரும் வழியில் சுமார் 2 கி.மீ தூரத்தில் தெற்கே ஒரு கிளைப்பாதையில் திரும்பி 1 கி.மீ சென்று இதை அடையலாம். வசதிகள் ஒன்றுமேயில்லை.

**மூலவர்:** வைத்தமாநிதி பெருமாள், நிக்ஷேபவித்தன். புஜங்கசயனம் கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** குமுதவல்லி, கோளூர்வல்லி (2 தனிக்கோயில் நாச்சியார்கள்).

**தீர்த்தம்:** குபேர தீர்த்தம், தாமிரபரணியாறு.

**விமானம்:** ஸ்ரீகர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** குபேரன், மதுரகவி ஆழ்வார்.

**விசேஷங்கள்:** பார்வதியால் குபேரன் சபிக்கப்பட்டதால், நவநிதிகள் அவனை விட்டுப் பிரிந்து இத்தலத்தில் பகவானை நாதனாக அடைய தவம் செய்து, பகவான் ப்ரத்யக்ஷமாகி, நவநிதிகளின் பிரார்த்தனைப்படி 'நிக்ஷேபவித்தன்' (வைத்தமாநிதி) என்ற திருநாமம்

பூண்டு நிதிகளைக் காத்து வருவதாக ஐதீஹம். இது மதுரகவி ஆழ்வார் அவதாரஸ்தலம். குபேரனுக்கு சாப விமோசனம் ஆன ஸ்தலம். தர்மம் இந்த ஸ்தலத்திற்கு வந்து நித்ய வாஸம் செய்து கொண்டு எம்பெருமானை ஸேவித்துக் கொண்டிருந்தபொழுது, அதர்மம் தர்மத்துடன் யுத்தம் செய்து, தோற்று ஓடிவிட்டதால், இத்தலத்திற்கு "அதர்மபிசுனம்" என்ற நாமம் உண்டானதாக ஸ்தல வரலாறு.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3293-3303, 3473 - 12 பாசுரங்கள்.

## 97. திருப்பேரை (தென்திருப்பேரை - திருப்பொறை, ஆழ்வார் நவதிருப்பதி)

ஆழ்வார் திருநகரியிலிருந்து (மார்க்கம் 98 காண்க) 5-6 கி.மீ. தொலைவில்லி மங்கலத்திலிருந்தும் இந்த திவ்ய தேசத்துக்குப் போகலாம். ஒரு சத்திரமும் அங்கு உணவும் உண்டு. ஆனால் தங்க வசதி இல்லை.

**மூலவர்:** மகர நெடுங்குழைக்காதன், நிகரில் முகில்வண்ணன், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** குழைக்காதுவல்லி நாச்சியார், திருப்பேரை நாச்சியார் என்று இரண்டு தனிக்கோயில் நாச்சியார்கள் உண்டு.

**தீர்த்தம்:** சுக்ரபுஷ்கரிணி, சங்கதீர்த்தம்.

**விமானம்:** பத்ர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சுக்ரன், ஈசாந்யருத்ரர், ப்ரஹ்மா.

**விசேஷங்கள்:** இப்பெரிய ஆலயத்தின் கைங்கர்யங்கள் நேரம் தவறாமல் ஒழுங்காக கவனிக்கப்படுகின்றன. "திருப்பேரை" என்பது ஸ்தலப் பெயர் என்று சிலர் கருதுகிறார்கள். லக்ஷ்மியின் பிரார்த்தனைப்படி, தூர்வாஸ மஹரிஷி பூமிதேவியை லக்ஷ்மியைப்போல் ஆக சபித்ததாகவும், பூதேவி தூர்வாஸர் உபதேசித்த அஷ்டாக்ஷரத்தை ஜபித்துக் கொண்டு தவம் இருந்து "ஸ்ரீபேரை" (லக்ஷ்மியின் உடல்) என்னும் நாமத்தைத் தரித்து பங்குனி பூர்ணிமையில் தாம்பரபரணி தீர்த்தத்தில் தர்ப்பணம் செய்ய முயன்றபொழுது, மகராக்ருதியான (மீன்போல் வடிவமுள்ள) இரண்டு குண்டலங்களைக் கண்டு பகவானுக்கு ஸமர்ப்பிக்க 'மகரநெடுங்குழைக்காதன்' என்ற

திருநாமம் பூண்டதாகவும், பூதேவி ஸ்ரீபேரை (நாமத்தைத்) தரித்ததனால் இத்தலத்திற்கு 'ஸ்ரீபேரை' (திருப்பேரை) என்ற பெயர் ஏற்பட்டதாகவும் ஐதீஹம்.

வருணன் குருவை அவமானம் செய்த பாபம் நீங்க இங்கு பங்குனி பூர்ணிமையில் பகவானுக்கு திருமஞ்சனம் செய்து பாப விமோசனமடைந்ததாகவும், விதர்ப்ப தேசத்தில் அநாவ்ருஷ்டி உண்டாக அவ்வூர் அரசன் இங்கு பகவானை ஆராதித்து நாட்டில் மழை பெய்து சுபிக்ஷம் உண்டானதாக ஸ்தல வரலாறு.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3359-69 - 11 பாசுரங்கள்.

## 98. திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி- ஆழ்வார் நவதிருப்பதி)

திருநெல்வேலி-திருச்செந்தூர் ரயில் பாதையில் ஆழ்வார் திருநகரி ஸ்டேஷனிலிருந்து 1½ கி.மீ. தூரம் உள்ளது. ஸ்ரீவைகுண்டத்தில் தங்கினால், அங்கிருந்து 5 கி.மீ. பஸ்ஸில் வந்து ஸேவிக்கலாம். இங்கு சத்திரங்கள், அஹோபில மடம் மற்றும் ஸாதாரண ஹோட்டல்களும் உண்டு.

**மூலவர்:** ஆதிநாதன், ஆதிப்பிரான், பொலிந்து நின்ற பிரான், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ஆதிநாதவல்லி, குருகூர்வல்லி என்று 2 தனிக்கோயில் நாச்சியார்கள்.

**தீர்த்தம்:** ப்ரஹ்ம தீர்த்தம், தாம்பரபரணி நதி.

**ஸ்தல வ்ருக்ஷம்:** புளியமரம்.

**விமானம்:** கோவிந்த விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ரஹ்மா, மதுரகவி, நம்மாழ்வார்.

**விசேஷங்கள்:** தாமாகத் தோன்றிய பெரிய திருமேனியுடைய மூலவரின் பாதங்கள் பூமிக்குள் இருப்பதாக ஐதீஹம். நம்மாழ்வார் அவதார வரலாறு திருப்பதிசாரம் என்ற ஸ்தலத்திற்கு கீழே (எண் 88) கொடுக்கப்பட்டுள்ளது. அவருடைய ஸந்நிதி மிகுந்த முக்யத்வம் வாய்ந்தது. இங்கும் ஸ்ரீரங்கத்தில் உள்ளது போல் அரையர் ஸேவை நடக்கிறது. திருமஞ்சனத்தின்போது

ப்ரபந்தங்களையும், புருஷஸூக்தத்தையும் தாளம் போட்டுக்கொண்டே சொல்கின்றனர்.

இங்கு ஆழ்வார் பொந்தில் வீற்றிருந்த புளியமரம் (திருப்புளி ஆழ்வார்) காட்சியளிக்கிறது. இது தவிர, ஞானப்பிரான் என்ற திருநாமத்துடன், வராஹப்பெருமாள் எழுந்தருளியிருக்கிறார். மணவாள மாமுனிகளால் நிர்வஹிக்கப்பட்ட இக்கோயிலில், ஸ்ரீரங்கம் போல், மாதந்தோறும் ஒவ்வொரு ஆழ்வாரின் திருநக்ஷத்திரமும் கொண்டாடப்படுகிறது. இத்தலத்தில் தங்கி எல்லா எம்பெருமான்களையும் (நவதிருப்பதி பெருமாள்) ஸுலபமாக ஸேவிக்கலாம். வைகாசி மாத கருடஸேவையில் (விசாகத்தன்று) நவதிருப்பதி பெருமாள், மதுரகவி ஆழ்வார், நம்மாழ்வார் இவர்கள் மங்களாசாஸனம் மிகவும் விசேஷமாக இருக்கும். நம்மாழ்வார் ஹம்ஸவாகனத்தில் எழுந்தருளுவது விசேஷம். இந்திரன் தன் மாதா பிதாக்களை உபசரிக்காமல் சபிக்கப்பட்டு இத்தலத்திற்கு வந்து ஆதிநாதனை வழிபட்டு சாபவிமோசனம் அடைந்ததாகப் புராண வரலாறு. இவ்விடத்தில் லக்ஷ்மணன் புளியமரமாக ஆவிர்பவித்ததாகவும், பகவான் அவ்விடம் ப்ரஹ்மசர்ய யோகத்தில் இருப்பதாகவும் வரலாறு. லக்ஷ்மி பெருமாளை அடைய பிரார்த்திக்க, பகவான் ப்ருஹ்மசர்ய யோகத்தில் இருந்தபடியால் லக்ஷ்மியை மகிழமாலையாக மார்பில் தரித்துக் கொண்டதாகவும் ஐதீஹம்.

மணவாள மாமுனிகள் மங்களாசாஸனம் செய்த ஸ்தலம்.

**மங்களாசாஸனம்:**

**நம்மாழ்வார்:** 3106-3116 - 11 பாசுரங்கள்.

## 99. திருவில்லிபுத்தூர் (ஸ்ரீவில்லிபுத்தூர்)

தென்காசி-விருதுநகர் ரயில்பாதையில் ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்டேஷனிலிருந்து இப்பெரிய ஊர் 2-3 கி.மீ. தூரத்திலுள்ளது. மதுரையிலிருந்தும், மற்றும் பலவிடங்களிலிருந்தும் பஸ்களும் உண்டு. அஹோபில மடம், சத்திரங்கள், ஹோட்டல்கள் வசதிகள் உண்டு. மலைமீது ஸ்ரீநிவாஸர் கோயில்.

**மூலவர்:** வடபத்ரசாயீ (ரங்கமன்னார்), புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ஆண்டாள் (கோதா நாச்சியார்)

**தீர்த்தம்:** திருமுக்குளம்.

**விமானம்:** ஸம்சன விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** மண்டுகமுனி, பெரியாழ்வார்.

**விசேஷங்கள்:** ஆண்டாளும் பெரியாழ்வாரும் அவதரித்த ஸ்தலம். ஆண்டாள் ரெங்கநாதரை மணந்த ஸ்தலம். ரங்கமன்னாருக்கு வலதுபுறம் ஆண்டாளும் இடதுபுறம் கருடாழ்வாரும் உள்ளனர் பெருமாளுடன் கருடாழ்வார் நிற்பது இந்த ஸ்தலத்தின் விசேஷம் பெருமாள் வடபத்ரசாயீயாயிருந்தாலும் ஆதிசேஷன் உண்டு வழக்கம்போல் பெருமாளின் நாபிகமலத்திலிருந்து ப்ரஹ்மா, ஸ்ரீதேவி பூதேவியுடன், பக்தர்களான வில்லி, புத்தன் என்ற இரு வேடுவ அரசர்களுடனும் உள்ளார். இவ்வேடுவர்களால் இந்நகர் கட்டப்பட்டபடியால் வில்லிப்புத்தூர் என்று பெயர் வந்துள்ளது பெரியாழ்வார் ஸந்நிதி ஒன்றும், ஆண்டாள் கண்டெடுக்கப்பட்ட நந்தவனத்தில் துளசி செடி பக்கத்தில் ஆண்டாள் ஸந்நிதி ஒன்றும் உள்ளன. ஸ்ரீரங்கம்போல் இங்கும் "அரையர் ஸேவை" உண்டு.

பெரியாழ்வார் நந்தவனக் கைங்கர்யம் செய்துகொண்டு, பெருமாளுக்கு மாலை ஸமர்ப்பித்து வருகையில், ஆண்டாள், ஆழ்வாருக்குத் தெரியாமல் பெருமாளுக்கு ஸமர்ப்பிக்கும் மாலையை தான் அணிந்து கொண்டு கண்ணாடியில் அழகு பார்க்க, இதனைக் கண்ட ஆழ்வார் ஆண்டாளைக் கோபிக்க 'ஆண்டாள்' சூடிக் கொடுத்த மாலையே தனக்கு உகந்தது என்று பெருமாள் கனவில் சொல்ல, அது முதல் கோதை நாச்சியாருக்கு சூடிக்கொடுத்த சுடர்க்கொடி என்று பெயர் உண்டாயிற்று. சுமார் 40 கி.மீ. தூரத்தில் பஞ்ச பூதஸ்தலங்களில் ஒன்றான சங்கரன்கோயில் உள்ளது.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 133

**ஆண்டாள்:** 549

மொத்தம் 2 பாசுரங்கள்.

## 100. திருத்தண்கால் (திருத்தண்காலூர்)

ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்தும் விருதுநகரிலிருந்தும் இங்கு பஸ்ஸில் வரலாம். திருத்தண்கால் ரயில்வே நிலையம் விருதுநகர்-தென்காசி ரயில் பாதையில் உள்ளது. சிவகாசியிலிருந்தும் வரலாம். அருகில்

ராமானுஜகூடமும் சாப்பாட்டு ஹோட்டல்களும் உள்ளன. டவுன் பஸ் வசதி உண்டு. (Pincode 626130).

**மூலவர்: நின்ற நாராயணன்,** கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** திருத்தண்காலப்பன், நின்ற திருக்கோலம்.

**தாயார்:** செங்கமலத்தாயார் (தனிக்கோயில் நாச்சியார்), அன்னநாயகி, அனந்த நாயகி, அம்ருத நாயகி, ஜாம்பவதி என்ற திருநாமங்களும் உண்டு.

**தீர்த்தம்:** பாபவிநாச தீர்த்தம்.

**விமானம்:** தேவசந்த்ர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சல்யபாண்டியன், புலி, ஸ்ரீவல்லவன், ஸ்ரீதேவி.

**விசேஷங்கள்:** கோயில் குன்றின்மேல் உள்ளது. நின்ற நாராயணன் ஸந்நிதியில் வலதுபுறம் ஸ்ரீதேவி (அன்னநாயகி), நீளாதேவி (அனந்த நாயகி), இடதுபுறம் பூதேவி (அம்ருத நாயகி), ஜாம்பவதி உள்ளனர். எல்லாத் திருமேனிகளும் வர்ணம் பூசப்பெற்ற ஸுதையால் ஆனவை. எனவே திருமஞ்சனம் கிடையாது. கீழே, கிடந்த திருக்கோலப் பெருமாளும் அப்படியே. செங்கமலவல்லித் தாயாருக்கு மட்டும் தினந்தோறும் எண்ணெய்க் காப்பு திருமஞ்சனம் உண்டு. இங்கு, கருடாழ்வார் ஸர்ப்பத்துடனும் அம்ருத கலசத்துடனும் காணப்படுகிறார். முருகன் இங்கு தங்கியதால் இவ்வூருக்குத் **"திருத்தங்கல்"** என்ற பெயர் ஏற்பட்டதாம். ஸ்ரீக்ருஷ்ணனின் பௌத்ரன் அநிருத்தன் உஷையை மணந்த ஸ்தலம். அப்போது பெருமாளே எழுந்தருளியதாக புராணம். சந்த்ரகேது என்ற மன்னன் ஏகாதசி உபவாஸம் இருந்து துவாதசி பாரணைக்குமுன் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்தபடியால் புலியாகப் பிறந்து இந்த க்ஷேத்ரம் வந்து பூர்வஜன்ம ஞாபகம் ஏற்பட்டு பகவானைப் பூஜை செய்து மோக்ஷம் அடைந்த ஸ்தலம்.

ஸ்ரீதேவி இத்தலத்தில் தவம் செய்து பகவான் உகந்து "எல்லா மஹரிஷிகளையும் விட எனக்கு நீயே மிகவும் பிரியமானவள், இந்த நகரத்திற்கு ஸ்ரீபுரம் என்று பெயர் உண்டாக வேண்டியது" என்று வரம் கொடுத்ததாக வரலாறு. இங்கு தாயாருக்குப் புடவை (9 கெஜம்) சாத்தினால் கன்னிகைகளுக்கு விவாஹப்ராப்தி ஆவதாக நம்பப்படுகிறது.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1399, 2068, 2673 (71), 2674 (120).

**பூதத்தாழ்வார்:** 2251.

மொத்தம் 5 பாசுரங்கள்.

## 101. திருக்கூடல் (கூடலழகர் ஸந்நிதி-மதுரை)

மதுரை ஊருக்குள்ளே, பஸ் ஸ்டாண்டு அருகாமையில் கூடலழகர் ஸந்நிதி உள்ளது. ரயில், பஸ் வசதிகள் உள்ளன இங்கே ஹோட்டல்கள், சத்திரங்கள் உள்ளன.

**மூலவர்:** கூடலழகர், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** மதுரவல்லி (தனிக்கோயில் நாச்சியார்). இவருக்கு வகுளவல்லி, வரகுணவல்லி, மரகதவல்லி என்ற பெயர்களும் உண்டு.

**தீர்த்தம்:** ஹேமபுஷ்கரிணி, சக்ர தீர்த்தம், க்ருதமாலா நதி, வைகை நதி.

**விமானம்:** அஷ்டாங்க விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ருகு, ஸௌநகாதிகள், பெரியாழ்வார்.

**விசேஷங்கள்:** இது பெரியாழ்வார் பல்லாண்டு பாடிய இடம். மேல் தளத்துக்குச் சென்றால் அஷ்டாங்க விமானத்தைப் பார்க்கலாம். இதில் ஒரு தட்டில் பள்ளிகொண்ட பெருமாள் சயனத் திருக்கோலத்திலும், மற்றொரு தட்டில் ஸூர்ய நாராயணன் நின்ற திருக்கோலத்திலும் உள்ளனர். இவர்களுடைய திருமேனிகள் வர்ணம் பூசப்பெற்றவை. மிகவும் அழகான மூர்த்திகள். வைஷ்ணவ ஆலயங்களில் இங்கு மட்டுமே நவக்ரஹங்கள் ப்ரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. ஒரு சமயம் வையகமெங்கும் அதிகமாக மழை பெய்த பொழுது பக்தர்களின் பிரார்த்தனைக்கு கட்டுப்பட்டு பகவான் நான்கு மேகங்களை ஏவ, அவைகள் இத்தலத்தில் மாடங்கள்போல் ஒன்றுகூடி மழையைத் தடுத்துவிட்டன. மேகங்கள் ஒன்று கூடியதால் இத்தலத்திற்குத் திருக்கூடல் என்ற பெயர் ஏற்பட்டதாக ஐதீஹம்.

இத்திருக்கோயிலின், ப்ராகாரங்களில் இருக்கும் சுவர்களில் 108 திவ்ய தேசத்துப்பெருமாள்களின் சித்திரங்கள் அந்தந்த திவ்யதேசத்தில் ஸேவை ஸாதிக்கும்படியே வரையப்பட்டிருப்பது விசேஷம்.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1762.

**திருமழிசையாழ்வார்:** 2420.

மொத்தம் 2 பாசுரங்கள்.

## 102. திருமாலிருஞ்சோலை (அழகர் கோயில்)

மதுரையிலிருந்து 17-18 கி.மீ. பஸ்ஸில் போகவேண்டும். இங்கு தங்குவது கஷ்டமானது. மதுரையில் தங்கியே ஸேவிக்கலாம். டவுன் பஸ்கள் நிறைய போகின்றன.

**மூலவர்:** அழகர், **கள்ளழகர்,** மாலாங்காரர், மாலிருஞ்சோலை நம்பி என்ற பெயர்களுண்டு. நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ஸுந்தரவல்லி என்றும் ஸ்ரீதேவி என்றும் பெயர் (தனிக்கோயில் நாச்சியார்).

**தீர்த்தம்:** நூபுரகங்கை, சிலம்பு ஆறு.

**ஸ்தல வ்ருக்ஷம்:** வ்ருஷபகிரி, சந்தன வ்ருக்ஷம்.

**விமானம்:** ஸோமஸுந்தர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** மலயத்வஜ பாண்டியன், தர்மதேவதை.

**விசேஷங்கள்:** மூலவர், உற்சவர் இருவருமே பஞ்சாயுதங்களுடன் விளங்குகின்றனர். உத்ஸவர் முழுவதும் தங்கத்தால் ஆனவர் என்று சொல்லப்படுகிறது. பதினெட்டாம் படி கறுப்பு என்ற தேவதை காக்கும் கோபுர வாசல் இப்போது திறக்கப்படுவதில்லை. வடபுறமுள்ள பெரிய கதவு வழியாகவே உள்ளே போகவேண்டும். 4 கி.மீ. தூரம் மலை ஏறிச்சென்றால், அங்கு சிலம்பாறு (நூபுரகங்கை) என்ற சிறிய அருவியில் தீர்த்தமாடலாம். இப்போது இங்கு கார்களும் போகும்படி தார்போட்ட பாதை அமைக்கப்பட்டுள்ளது. இந்த மலைக்கு சுற்றுப்புறமுள்ள மலைகள் பசுப்போலவும் இந்த மலை ரிஷபம் போலவும் காட்சியளிப்பதால் 'வ்ருஷபாத்ரி' என்ற பெயர் உண்டாயிற்று. 'வனகிரி' என்ற பெயரும் உண்டு. திரிவிக்ரமாவதாரத்தின் பொழுது, ப்ருஹ்மா பகவான் பாதத்தில் கமண்டலத்தினால் தீர்த்தம் சேர்த்து பகவான் தண்டை சலங்கையில் பட்ட நீர் தெரித்து இங்கே விழுந்து நதியாகப் பிரவகித்தபடியால் சிலம்பாறு

என்று பெயர் உண்டாயிற்று. இங்கே க்ஷேத்ரபாலருக்கு ஒ ஸந்நிதி உண்டு. அர்ச்சகர்கள் கோவில் சாவியை இரவில் இவரிட ஒப்படைத்துப் போவதாக ஐதீஹம்.

ராமாநுஜர், ஸ்ரீமணவாள மாமுனிகள் மங்களாசாஸனம் செய் ஸ்தலம்.

ஸந்நிதியில் பணம் கட்டினால் பெருமாள் பிரஸாதங்க கிடைக்கும். நூபுரகங்கைக் கரையிலும் தளிகை செய்து சாப்பிடலா ஸந்நிதியிலேயே மண்டபத்தில் தங்கலாம்.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 71, 258, 338-59, 453-62.

**ஆண்டாள்:** 534, 587-96.

**திருமங்கையாழ்வார்:** 1022, 1114, 1329, 1573, 1634, 176( 1765, 1818-37, 1855, 1969, 2020, 2034, 2673 (74), 267 (125).

**பூதத்தாழ்வார்:** 2227, 2229, 2235.

**பேயாழ்வார்:** 2342.

**நம்மாழ்வார்:** 2886-2918, 3733-44, 3749.

மொத்தம் 128 பாசுரங்கள்.

## 103. திருமோகூர்

மதுரை பெரியார் பஸ் நிலையத்திலிருந்து டவுன் பஸ்கள் பல நேராக திருமோகூருக்குப் போகின்றன. ஊரில் வசதிகள் போதாது. (Pincode 625107).

**மூலவர்: காளமேகப் பெருமாள்,** நின்ற திருக்கோலம். வலதுகையில் வரதஹஸ்தம், இடது கையில் கதை, கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** திருமோகூர் ஆப்தன் (பஞ்சாயுதங்களுடன்).

**தாயார்:** மோகூர்வல்லி (மோஹனவல்லி, மேகவல்லி). (தனிக்கோயில் நாச்சியார்).

**தீர்த்தம்:** க்ஷீராப்தி புஷ்கரிணி.

**விமானம்:** சதுர்முக (கேதகி) விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ரஹ்மா, இந்த்ரன், அஜ ருத்ரர்.

**விசேஷங்கள்:** பள்ளிகொண்ட பெருமாள் ஸந்நிதி ஒன்றும் உண்டு. ஆதிசேஷனுக்கும் தங்கக் கவசங்கள் சாத்தப்பட்டுள்ளன. சக்கரத்தாழ்வார் சந்நிதி வெகு சிறப்புடையது.

**மற்ற கோயில்கள்:** ஒத்தக்கடை அருகில் நரசிங்கம், மாணிக்கவாசகர் அவதரித்த திருவாதவூர் (திருமறைநாதர்).

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 2673 (74).

**நம்மாழ்வார்:** 3667-77

மொத்தம் 12 பாசுரங்கள்.

## 104. திருக்கோட்டியூர் (கோஷ்டி க்ஷேத்ரம்)

மதுரையிலிருந்து பஸ்ஸில் திருப்பத்தூரையடைந்து அங்கிருந்து சுமார் 10 கி.மீ. தூரத்திலுள்ள திருக்கோட்டியூருக்கு சிவகங்கை பஸ்ஸில் செல்ல வேண்டும். காரைக்குடியிலிருந்தும் பஸ்ஸில் திருப்பத்தூர் வந்து இங்கு வரலாம். ஒரே ஒரு சத்திரம் உண்டு. காரைக்குடியிலேயே தங்கலாம்.

**மூலவர்:** உரகமெல்லணையான், புஜங்கசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** ஸௌம்ய நாராயணன், நின்ற திருக்கோலம்.

**தாயார்:** திருமாமகள் நாச்சியார் (தனிக்கோயில் உண்டு).

**தீர்த்தம்:** தேவ புஷ்கரிணி (திருப்பாற்கடல்).

**விமானம்:** அஷ்டாங்க விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** இந்த்ரன், கதம்பமுனி.

**விசேஷங்கள்:** இந்தக் கோவில் 4 மாடிகளாக உள்ளது. கதம்ப மஹரிஷி பிரார்த்தனைக்கிணங்க முதல் மாடியில் உரக மெல்லணையானின் (முக்யமான பெருமாளின்) சயனத் திருக்கோலம். தக்ஷிணேச்வர ந்ருஸிம்ஹன், உத்தரேச்வர ந்ருஸிம்ஹன், க்ஷீராப்திநாதன், ஸ்தித நாராயணன் ஸந்நிதிகளில் நின்ற, இருந்த, கிடந்த, நடந்த,

கூத்தாடிய திருக்கோலத்தைக் காணலாம். பெருமாள் சயனத்திலேயே வலதுகையால் ஆதிசேஷனுக்கு அபயமளிக்கிறார். இரண்டாவது மூன்றாவது மாடிகளில் நின்ற திருக்கோலமும் இருந்த திருக்கோலமும் உள்ளன. நான்காவது மாடியிலிருந்துதான் உடையவர் திருமந்த்ரார்த்தத்தை வெளிப்படையாக எல்லோருக்கும் உபதேசித்தாராம். அஷ்டாங்க விமானம் மயனாலும் விச்வகர்மாவினாலும் கட்டப்பட்டவை. இங்கு திருக்கோட்டியூர் நம்பி, உடையவர் சிலைகள் உள்ளன. பக்கத்திலுள்ள ப்ராகாரத்தில் இரண்டு நரஸிம்ம சிலைகள் உள்ளன. தரைமட்டத்தின்கீழ் நடனக்ருஷ்ணன் ஸேவை ஸாதிக்கின்றார். திருக்கோட்டியூர் நம்பிகளிடம் திருமந்த்ரரஹஸ்ய அர்த்தத்தை உபதேசமாக பெற்று, குருவின் ஆணையை மீறி, கோபுரத்தின்மீது ஏறி உலக ஜனங்கள் அனைவரும் முக்தியடைய இந்த ரஹஸ்யத்தை எம்பெருமானார் வெளியிட்ட ஸ்தலம். எம்பெருமானார் திருஉருவ விக்ரஹம் கோபுரத்தின் உச்சியில் ஊரை பார்த்தமாதிரி இருக்கிறது. தேவர்கள் பிறருக்கு தெரியாமல் கோஷ்டியாக இவ்விடம் வந்ததால் கோஷ்டீபுரம் என்று பெயர் உண்டாயிற்று. "த்வயம் விளைந்த திருப்பதி" என்று எம்பெருமானார் காலத்திலிருந்து ஸ்ரீவைஷ்ணவர்கள் அழைக்கிறார்கள். இரணியனைக் கொல்வது பற்றி பிரம்மா, விஷ்ணு, சிவன் இங்கு கோஷ்டியாகச் சந்தித்து ஆலோசனை நடத்தியதால் "கோஷ்டீபுரம்" என்று பெயர் வந்ததாகவும் கூறப்படுகிறது.

**<u>மங்களாசாஸனம்:</u>**

**பெரியாழ்வார்:** 13-22, 173, 360-370.

**திருமங்கையாழ்வார்:** 1550, 1838-1847, 1856, 2674 (125).

**பூதத்தாழ்வார்:** 2227, 2268.

**பேயாழ்வார்:** 2343.

**திருமழிசையாழ்வார்:** 2415.

மொத்தம் 39 பாசுரங்கள்.

## 105. திருப்புல்லாணி

(ராமநாதபுரம் - தர்ப்பசயனம்)

காரைக்குடியிலிருந்து ராமநாதபுரத்துக்கு நேராக பஸ்ஸில் வரலாம். திருப்பத்தூரிலிருந்து காரைக்குடி வராமலே நேராக பஸ்ஸில் ராமநாதபுரம் வரலாம். மானாமதுரை வழியாக ரயிலிலும்

வரலாம். ராமநாதபுரத்தில் ஸகல வசதிகளும் உண்டு. அங்கிருந்து திருப்புல்லாணிக்கு பஸ்ஸில் போகலாம். சேதுக்கரை பஸ்ஸில் போய் ஆதிஸேது என்ற இடத்தில் இறங்கி ஸமுத்ரஸ்நானம் செய்துவிட்டு திரும்பி பஸ்ஸில் 5 கி.மீ. வந்து திருப்புல்லாணி கோயிலை அடையலாம்.

**மூலவர்:** கல்யாண ஜகந்நாதன் (தெய்வச் சிலையார்), நின்ற திருக்கோலம், சக்ரவர்த்தி திருமகன், தர்ப்பசயனம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** கல்யாணவல்லி, பத்மாஸநி என்று இரண்டு தாயார்கள்.

**தீர்த்தம்:** ஹேம தீர்த்தம், சக்ர தீர்த்தம், ரத்னாகர ஸமுத்ரம்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** அச்வத்த வ்ருக்ஷம்.

**விமானம்:** கல்யாண விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** அச்வத்த நாராயணன், புல்லாரண்ய முனி, ஸமுத்ர ராஜன்.

**விசேஷங்கள்:** இந்த ஸந்நிதி தவிர வேறு ஸந்நிதிகள் உள்ளன.

(1) தர்ப்பசயன ராமனின் ஸந்நிதியில் லக்ஷ்மணன் ஆதிசேஷனாக நின்று கைங்கர்யம் செய்கிறார். (2) பட்டாபிஷேக ராமனின் ஸந்நிதி ஸம்ப்ரதாய முறையில் உள்ளது. இவ்வூரின் அருகேதான் ராமேச்வரமும் தனுஷ்கோடியுமுள்ளன.

ராமன் இங்கே அணைகட்ட வந்தபொழுது, இங்கே தவம் செய்த கண்வருக்கு திவ்யமான வில்லைக் கொடுத்தபடியால் 'தெய்வச் சிலையார்' என்ற நாமம் உண்டானதாக ஐதீஹம். ஆதிஸேது என்று வைஷ்ணவர்கள் கொண்டாடும் சமுத்திரஸ்நான கட்டம் இங்கிருந்து 3 கி.மீ. தூரத்தில் இருக்கிறது. பஸ்ஸில் சென்று வரலாம். குழந்தை இல்லாதவர்கள் திருப்புல்லாணியில் தங்கி தேவிபட்டினத்திலுள்ள நவக்ரஹசாந்தி செய்து ஸர்ப்பசாந்தி செய்து தர்பசயனரை ஸேவித்துக் கொண்டு பால்பாயஸம் சாப்பிட்டு சிலகாலம் வசித்து வந்தால் புத்திர பேறு ஏற்படும் என்று புராண வரலாறு கூறுகிறது. புல்லர் என்ற மஹரிஷியின் அஷ்டாக்ஷர ஜபத்தினால் பகவான் அச்வத்த மரத்தடியில் ஆவிர்பவித்ததாகவும், புல்லருக்கு ப்ரத்யக்ஷமானதால், "புல்லாரண்யம்" என்று பெயர் வந்ததாகவும் புராண வரலாறு.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1768-87, 2674 (131) - 21 பாசுரங்கள்.

# 106. திருமெய்யம்

புதுக்கோட்டைக்கும் காரைக்குடிக்கும் மத்தியிலிருக்கும் ரயில்வே ஸ்டேஷன். ஸ்டேஷனிலிருந்து கோவில் 1 மைல் தூரம். வண்டி கிடைக்கும். வசதிகள் அவ்வளவு நன்றாக இல்லை. காரைக்குடி, திருப்பத்தூரிலிருந்து நேர் பஸ் வசதி உண்டு. புதுக்கோட்டையில் இருந்தும் பஸ்ஸில் வரலாம் (20 கி.மீ.). கோயிலிலிருந்து பஸ் நிலையம் 1 கி.மீ. தூரத்தில் இருக்கிறது.

**மூலவர்:** ஸத்யகிரிநாதன், ஸத்யமூர்த்தி. நின்ற திருக்கோலம், தெற்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** அழகிய மெய்யர்.

**தாயார்:** உய்யவந்த நாச்சியார், உஜ்ஜீவனத் தாயார்

**தீர்த்தம்:** கதம்ப புஷ்கரிணி, ஸத்திய தீர்த்தம்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** ஆல வ்ருக்ஷம்.

**விமானம்:** ஸத்யகிரி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ஸத்யதேவதைகள்.

**விசேஷங்கள்:** இது ஓர் அழகிய வேலைப்பாடுள்ள குடைவரைக்கோவில். இந்தப் பெருமாள் ஸ்ரீரங்கம் ரங்கநாதனைவிடப் பெரிய திருமேனியுடன் சயனித்திருக்கிறார். சுவற்றில் ப்ரஹ்மா முதலிய ஸகலதேவர்களும் செதுக்கப்பட்டுள்ளனர். இங்கு வேறு பல ஸந்நிதிகளும் உள்ளன. ஆதிசேஷன் இந்த ஸ்தலத்தைப் பாதுகாப்பதாக ஐதீஹம்.

ஆதிசேஷன் பாதுகாப்பிலிருந்த பெருமாளைத் திருட்டுத்தனமாக அசுரர்கள் தாக்க வந்ததாகவும், ஆதிசேஷன் விஷக்காற்றை விட்டு அசுரர்களைக் கொன்றதாகவும் ஸ்தல வரலாறு.

இக்கோயில் எதிரிலேயே உள்ள ஸ்ரீ தேசிகர் கோயில் சரியான பூஜைகள் இல்லாமல் க்ஷீணித்துவிட்டது. புதுப்பிக்க ஏற்பாடுகள் நடைபெற்றுவருகின்றன.

**மங்களாசாஸனம்:**

**திருமங்கையாழ்வார்:** 1090, 1206, 1524, 1660, 1760, 1852, 2016, 2050, 2674 (126).

மொத்தம் 9 பாசுரங்கள்.

# நில உலகில் பார்க்க முடியாத திருப்பதிகள் 2

## 107. திருப்பாற்கடல் (வ்யூஹம்)

இங்கு இந்த ப்ராக்ருத சரீரத்துடன் போகமுடியாது. ஸூக்ஷ்ம சரீரம் பெற்ற பிறகே செல்லலாம். வேண்டுமானால் வணங்கி விட்டு வடகடலுக்குச் சென்று அதன் கரையில் நின்று வரலாம். நில உலகில் கண்ணால் பார்க்க முடியாது.

**மூலவர்:** க்ஷீராப்தி நாதன் (வ்யூஹ நிலை), ஆதிசேஷ சயனம், தெற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** கடல் மகள் நாச்சியார், ஸ்ரீபூதேவி.

**தீர்த்தம்:** அம்ருத தீர்த்தம், திருப்பாற்கடல்.

**விமானம்:** அஷ்டாங்க விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ரஹ்மா, ருத்ராதிகள் முதலிய தேவர்கள்.

**குறிப்பு:** மற்ற 106 திவ்ய தேசங்களையும் ஸேவித்தவர்களை அவர்கள் பரமபதித்தபின், பகவானே இந்தத் திவ்ய தேசத்துக்கு அழைத்துச் சென்று ஸேவை ஸாதிக்கின்றார் என்பது பெரியோர்கள் நம்பிக்கை.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 250, 427, 439, 452, 471; **ஆண்டாள்:** 475, 516, 551; **குலசேகராழ்வார்:** 665, 680; **திருமழிசையாழ்வார்:** 768, 769, 774, 779, 780, 832, 843, 846, 861, 2384, 2417, 2456, 2460; **தொண்டரடிப்பொடியாழ்வார்:** 889; **திருமங்கையாழ்வார்:** 1003, 1006, 1019, 1341, 1347, 1398, 1618, 1744, 1828, 2060, 2066; **பொய்கையாழ்வார்:** 2106; **பூதத்தாழ்வார்:** 2184, 2209; **பேயாழ்வார்:** 2292, 2312, 2313, 2342; **நம்மாழ்வார்:** 2556, 2618, 2661, 2835, 2844, 2963, 3454, 3465, 3470,

மொத்தம் 51 பாசுரங்கள்.

# 108. திருப்பரமபதம்
## (ஸ்ரீவைகுண்டம், திருநாடு, பரம்)

இது பூலோகத்தில் இல்லை. இது வைஷ்ணவர்களின் லக்ஷ்யமான மோக்ஷ நிலையாகும். எம்பெருமானின் பரத்வம் விளங்குமிடம். இங்கு ஜீவாத்மாக்கள் பகவானைப் போலவே ஸ்வரூபம் பெற்று, ஆனால் அவனுடன் இரண்டறக் கலவாமல் அவனுக்குக் கைங்கர்யம் செய்வார்கள்.

**பெருமாள்:** பரமபத நாதன், வீற்றிருந்த திருக்கோலம், தெற்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** பெரிய பிராட்டியார்.

**தீர்த்தம்:** விரஜா நதி, அயிரமத புஷ்கரிணி.

**விமானம்:** அநந்தாங்க விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** அநந்த கருடவிஷ்வக்ஸேநாதி நித்ய ஸூரிகள், முக்தர்கள்.

**குறிப்பு:** இங்கே சென்றவர் யாரும் திரும்புவதில்லையாகையால், "தெளிவிசும்பு திருநாடு", "நலமந்தமில்லாதோர் நாடு", "சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதி" என்றெல்லாம் ஆழ்வார்கள் வர்ணித்திருப்பதே நமக்குச் சான்று. ஸ்ரீமத் ராமானுஜர் தமது "வேதார்த்த ஸங்க்ரஹம்" என்ற க்ரந்தத்தில் இதனை வெகு விரிவாகவும், நேரில் பார்ப்பது போலவும் வர்ணித்துள்ளார். 106 திவ்ய தேசங்களையும் ஸேவித்த பக்தர்களை அவர்கள் பரமபதித்தபின், பகவானே இந்தத் திவ்யதேசத்தை அவர்களுடைய நிரந்தர வாஸஸ்தலமாக்கி மகிழ்விப்பான் என்பது பெரியோர் வாக்கு.

**மங்களாசாஸனம்:**

**பெரியாழ்வார்:** 190, 277, 399, 472; **ஆண்டாள்:** 482; **திருமழிசையாழ்வார்:** 796, 2476; **திருப்பாணாழ்வார்:** 927; **திருமங்கையாழ்வார்:** 2042; **பொய்கையாழ்வார்:** 2149, 2158; **பேயாழ்வார்:** 2342; **நம்மாழ்வார்:** 2543, 2545, 2552, 2652, 2867, 3000, 3040, 3431, 3465, 3585, 3627, 3740, 3747, 3755-65.

மொத்தம் 36 பாசுரங்கள்.

# புராண ஸ்தலங்கள் 19

## 1. **ராஜமன்னார்குடி** (செம்பகாரண்ய க்ஷேத்ரம், தஞ்சாவூர்-மன்னார்குடி மார்க்கம்)

**மூலவர்:** வாஸுதேவர், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்ஸவர்:** ராஜகோபாலன் - ருக்மணி ஸத்யபாமா ஸமேதராக.

**தாயார்:** செம்பகலக்ஷ்மீ (மூலவர்); செங்கமலத் தாயார் (உத்ஸவர்), ஹேமாப்ஜநாயகி, ரக்தாப்ஜநாயகி (தனிக்கோயில் நாச்சியார்).

**தீர்த்தம்:** பாம்பணி நதி, ஹரித்ரா நதி, புஷ்கரிணி, க்ருஷ்ண தீர்த்தம், கோப்ரளய தீர்த்தம்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** சண்பகம்.

**விமானம்:** சுயம்பு விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ரஹ்மா, ப்ருகு, அக்னி, கோபில-கோப்ரளய ரிஷிகள்.

**விசேஷம்:** கோப்ரளய மஹரிஷிக்கு க்ருஷ்ண லீலைகளை இவ்விடத்தில் காட்டி அருளியதால் தக்ஷிண த்வாரகை என்ற பெயரும் உண்டு. பங்குனி மாதம் ப்ரஹ்மோத்ஸவம் 18 நாட்களிலும், ஆனி மாதம் தெப்போத்ஸவம் 10 நாட்களிலும் நடக்கிறது. எல்லா வசதிகளும் உண்டு.

## 2. ஸ்ரீமுஷ்ணம்

விருத்தாசலத்திலிருந்து 20 கி.மீ. சிதம்பரத்திலிருந்து 40 கி.மீ. பஸ்கள் செல்கின்றன. நெய்வேலியிலிருந்தும் வரலாம். (Pincode 608 703)

**பெருமாள்:** பூவராஹன், நின்ற திருக்கோலம், தெற்கே திருமுக மண்டலம் (ஆனால் திருமேனி மேற்கு), அசுவத்த நாராயணன்; யஜ்ஞவராஹர் (உத்ஸவர்).

**தாயார்:** அம்புஜவல்லி.

**தீர்த்தம்:** நித்ய புஷ்கரிணி.

**விமானம்:** ஆனந்தநிலையம் பாவன விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** கமடன், ஜில்லிகை, ஸுத்யும்னன், பூமிதேவி, ஸுதர்மா.

**விசேஷம்:** பகவான் ஹிரண்யாக்ஷனை ஸம்ஹரித்து பூமி தேவியை ஆவிர்பவித்தபடியால் இந்த க்ஷேத்ரத்திற்கு பூவராஹ க்ஷேத்ரம் என்ற பெயர் உண்டாயிற்று. தாயாருக்கு ஸப்த கன்னிகைகள் தோழிகள். ஆகையால் இத்தலத்தில் ஸப்த கன்னிகைகளை வழிபடுவதுண்டு. வசதிகள் குறைவு.

ஸ்வயம்வ்யக்த ஸ்தலங்களில் ஒன்று.

## 3. ஸிம்ஹாசலம்

சென்னை - கல்கத்தா ரயில் மார்க்கத்தில் வால்டேர் ஸ்டேஷனிலிருந்து 8 கி.மீ. தூரத்தில் உள்ளது. தேவஸ்தான பஸ், ஸ்டேஷனிலிருந்து சென்று வருகிறது.

**பெருமாள்:** வராஹ ந்ருஸிம்ஹர், திருமால் ஸ்தம்பமாக நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** லக்ஷ்மீ (மார்பில் உள்ளதாக ஐதீஹம்).

**தீர்த்தம்:** ந்ருஸிம்ஹ தாரை.

**விமானம்:** தார்க்ஷ்யாத்ரி விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** தேவர்கள், ஸநக ஸனந்தன ஸனத்குமார நாரதாதி ரிஷிகள், யோகிகள்.

**விசேஷம்:** பக்தர்களின் பிரார்த்தனைப்படி ஹிரண்யாக்ஷ, ஹிரண்யகசிபுவை ஸம்ஹரித்த இரு அவதாரங்கள் ஒன்றாய் வராஹ நரஸிம்ஹ ரூபத்தில் ஸேவை ஸாதித்ததாகப் புராணம்.

## 4. ஸ்ரீகூர்மம்

வால்டேர் - கல்கத்தா ரயில் மார்க்கத்தில் ஸ்ரீகாகுளம் ஸ்டேஷனிலிருந்து 15 கி.மீ. வால்டேர் - ஸ்ரீகூர்மம் பஸ் பாதையில் ஸ்ரீராம க்ஷேத்ரம், ஸ்ரீபத்மநாபம் என்று இரண்டு புராதன வைஷ்ணவ ஸ்தலங்கள் இருக்கின்றன.

**பெருமாள்:** ஸ்ரீ கூர்மநாதன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ஸ்ரீ கூர்மநாயகி.

**தீர்த்தம்:** சக்ர தீர்த்தம், வம்சதாரை, லாங்கல தீர்த்தம்.

**விமானம்:** ஸ்ரீ கூர்ம விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ச்வேதபூபாலன், திலோத்தமை, வக்ராங்க மஹரிஷி, சுசிசித்தன், பைரவேசர்.

## 5. பூரிஜகந்நாதம் (புருஷோத்தம முக்தி க்ஷேத்ரம்)

சென்னை - கல்கத்தா ரயில் மார்க்கத்தில் குர்தா ரோடு ஜங்ஷனில் வண்டி மாறி கல்கத்தா - பூரி ரயில் மார்க்கத்தில் பூரி ஸ்டேஷனிலிருந்து 2 கி.மீ. தூரம்.

**பெருமாள்: ஜகந்நாதன்**, க்ருஷ்ணன், பலபத்திரன், சுபத்திரை ஸமேதராக நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தீர்த்தம்:** மார்க்கண்டேய, வருண, ரோஹிணி தீர்த்தங்கள், ஸமுத்திர ஸ்நானம்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** ஆலமரம்.

**விமானம்:** இந்த்ர, ஸ்ரீமந்த்ர விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** இந்த்ரத்யும்னன்.

**விசேஷங்கள்:** இத்தலத்தில் பகவான் வ்ருக்ஷ வடிவமாக எழுந்தருளியிருக்கிறார். இந்த்ரத்யும்ன சக்ரவர்த்திக்கு ஸ்வப்னத்தில் ஸேவை ஸாதித்தபடி பகவானே வ்ருத்த தச்சன் வேஷம் பூண்டு ஸமுத்திரத்திலிருந்து தாருவைக் கொண்டுவந்து, கதவைத் தாளிட்டுக்கொண்டு மஹாவாத்ய கோஷம் செய்ய, தேவர்கள் புஷ்ப வ்ருஷ்டி செய்ய, கர்ப்பக்ரஹ கதவைத் திறக்க, ஜகந்நாதன், பலபத்திரன், சுபத்திரை, ஸுதர்சனம் ஆக நான்கு வடிவம் கொண்டு பகவான் 15 நாட்களுக்குப் பிறகு ஸேவை ஸாதித்ததாகவும், தச்ச ரூபத்தில் வந்த உருவம் மறைந்துவிட்டதாகவும் ஐதீஹம். ஸ்ரீந்ருஸிம்ஹன்தான் இந்த ரூபத்தில் ஆவிர்பவித்ததாகவும், ப்ரஹ்மா பிரதிஷ்டை செய்ததாகவும் புராண வரலாறு. இங்கே ஜகந்நாதனுக்கு நிவேதித்த பிரஸாதம் யார் செய்தது என்றும், யாராவது பார்த்து

விட்டார்களா, தொட்டார்களா இத்யாதிகளை விசாரிக்கக் கூடாது என்றும் ஒரு நிபந்தனை உண்டு. சத்திரங்கள் உண்டு. தளிகை செய்து சாப்பிடலாம்.

## 6. கயா க்ஷேத்ரம்

கல்கத்தா - வாரணாசி ரயில் மார்க்கத்தில் கயா ரயில் நிலையத்திலிருந்து சுமார் 3 கி.மீ. தூரம்.

**பெருமாள்:** கதாதரர், நின்ற திருக்கோலம், வடக்கே திருமுக மண்டலம், விஷ்ணுபாதம், திருவடி.

**தீர்த்தம்:** உத்தர பங்குனி நதி.

**ஸ்தல வ்ருக்ஷம்:** அக்ஷயவடம் (ஆல வ்ருக்ஷம்).

**விமானம்:** வைகுண்ட விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** கயாஸுரன்.

**விசேஷங்கள்:** தக்ஷிணதேச வைஷ்ணவர்கள் இருக்கிறார்கள், சங்கரமடம் இருக்கிறது. பித்ருக்களுக்கு ச்ரார்த்தம் செய்து பிண்டம் போடுவது விசேஷம். "கயா" வாளிகளையே ச்ரார்த்த போஜனத்திற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இங்கே ச்ரார்த்தம் செய்தால் 7 தலைமுறை பித்ருக்கள் மோக்ஷம் அடைகிறார்கள் என்று ஸ்தல புராணம். அக்ஷயவடத்தில், ச்ரார்த்தம் செய்பவர்கள் தம் வாழ்நாள் முழுவதும் ஏதாவது ஒரு காய், ஒரு பழம், ஒரு இலையை உண்பதில்லை என்று வ்ரதம் கொள்ள வேண்டும். கயாஸுரன் என்பவன் இத்தலத்தில் விஷ்ணுவைக் குறித்து தவம் செய்து அவன் சரீரம் பிருஹ்மா, சிவன் இவர்களுடைய சரீரங்களைவிட பரிசுத்தமாக இருக்க பிரார்த்தித்து அடைந்து, ஸகல ஜனங்களும் கயாசுரனைத் தொட்டமாத்திரத்தில் புண்யாத்மாவாகி யமனுக்கு வேலை இல்லாமல் போகவே, தேவர்கள் விஷ்ணுவைப் பிரார்த்தித்து, அவரது கட்டளையின்படி ப்ரஹ்மா கயாஸுரன் சரீரத்தின்மீது யாகம் செய்ய அதற்கு தேவர்கள் ப்ரஹ்மா சிவனுடன் வந்து அசுரன் தலை ஆடுவது நிற்காமல் போகவே, விஷ்ணுவும் நேரில் வந்து அசுரன் தலைமீது பாதத்தை வைத்து அழுத்த, அவன் தலை ஆடாமல் இருந்து யாகம் பூர்த்தி அடைந்தது. அசுரன் பிரார்த்தித்தபடி மும்மூர்த்திகளும் ஸகல தேவதைகளும் இத்தலத்தில் நித்யவாஸம் செய்கிறார்கள். விஷ்ணு பாதம் வைத்து மிதித்த இடத்தில் யார் பிண்டம் போடுகிறார்களோ அவர்களுடைய 21 தலைமுறையிலுள்ள பித்ருக்கள் நற்கதி அடைவதாக புராணம்.

## 7. காசி (வாரணாசி)

சென்னை-வாரணாசி ரயில் மார்க்கத்தில் வாரணாசி ரயில் நிலையத்திலிருந்து 2 கி.மீ. தூரம்.

**பெருமாள்:** கேசவன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** லக்ஷ்மீ.

**தீர்த்தம்:** சக்ர தீர்த்தம், கங்கா, வாரணா நதி.

**விமானம்:** அவிமுக்த விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** சிவன்.

**விசேஷங்கள்:** காசிவிச்வநாதர், அன்னபூர்ணா, விசாலாக்ஷி ஆலயங்கள் விசேஷம். மைசூர் சத்திரம், த்வாரகாதீச மந்த்ரம், விச்வநாதசாஸ்த்ரி க்ருஹம், இங்கே சௌகர்யமாக தங்கலாம்.

காசி நகரத்தில் ப்ரஹ்மஹத்யா தோஷத்துடன் நுழைந்த சிவபெருமானுக்கு பிரஹ்மஹத்யா தோஷம் நிங்கி காசிமாநகரை விஷ்ணுவிடம் பிரார்த்தித்து தானமாக பெற்றபடியால் காசி சிவ க்ஷேத்திரம் என்று பிரஸித்தி அடைந்தது. பூர்வ ஜன்மங்களில் செய்த பாவங்களை பலன் கொடுக்காதபடி தடுக்கும் வாரா என்ற நதிக்கும், ஐம்புலன்களினால் நாம் செய்யும் பாவங்களை நாசம் செய்யும் நாசி என்ற நதிக்கும் மத்தியில் இத்தலம் இருப்பதால் இந்த க்ஷேத்திரத்திற்கு வாரணாசி என்ற பெயர் ஏற்பட்டதாக ஐதீஹம். சிவன் ராமநாம மஹிமையை பாடி ஆடிக்கொண்டிருக்கும் பொழுது. ராமசந்த்ரனைக் கண்டு ஆனந்தத் தாண்டவம் ஆடினதாகவும், சிவன் காதில் உள்ள மணிமயமான குண்டலம் சக்ர தீர்த்தத்தில் விழுந்ததாகவும், சிவன் வேண்டியபடி கங்கா தீர்த்தத்திலுள்ள இந்த க்ஷேத்திரத்தில் மரணமடைபவர்கள் மோக்ஷமடைகிறார்கள் (முக்தி க்ஷேத்ரம்) என்கிற ஐதீஹம். இங்கே 64 ஸ்நான கட்டங்கள் உள்ளன. அவைகளில் ஹரிச்சந்தர கட்டம், ஹனுமான் கட்டம், கேதார் கட்டம், விச்வநாத கட்டம், விசாலாக்ஷி கட்டம், அன்னபூர்ணா கட்டம், மணிகர்ணிகா கட்டம் விசேஷமானவை.

## 8. பிரயாகை (அலகாபாத்)

வாரணாசி - தரியாகஞ்ச் - அலகாபாத் ரயில் மார்க்கம் மீட்டர்கேஜ், பிராட்கேஜ் இரு ரயில் நிலையங்களும் உள்ளன.

**பெருமாள்:** மும்மூர்த்திகள் (பிரஹ்மா, விஷ்ணு, சிவன்) நதிரூபம்.

**தீர்த்தம்:** கங்கை, யமுனை, ஸரஸ்வதி நதிகள்; திரிவேணி சங்கமம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ரணிதி, தநுர்த்வஜன், பத்மாவதி.

**விசேஷங்கள்:** கங்கா நதி தனியாகவும் யமுனை நதி தனியாகவும் வந்து த்ரிவேணி என்கிற இடத்தில் சங்கமம் ஆகின்றன. ஸரஸ்வதி மறைவாகப் பூமிக்கடியில் கலப்பதாக ஐதீஹம். முதலில் சுத்த கங்கையில் ஸ்நானம் செய்து, பிறகு படகில் ஸங்கமம் ஆகும் இடம் சென்று நடுவில் கட்டப்பட்டிருக்கும் மூங்கில் பிளாட்பாரத்திலிருந்து இறங்கி ஸங்கல்பம் செய்து ஸ்நானம் செய்யவேண்டும். பால், எலுமிச்சம்பழம், பணம் முதலியவை அர்ப்பிக்க வேண்டும். எலுமிச்சம்பழம் மிதப்பதில்லை, திருதண்டி மடம், அஹோபில மடம், வெங்கட்ராம சாஸ்த்திரிகள் க்ருஹம், இங்கே தங்கலாம். ஆனால் யாத்திரைக்குமுன் விசாரித்துப் போவது நல்லது. கும்பமேளா வருஷம் மிகவும் விசேஷம், ப்ரணிதி என்ற தனவானும், பத்மாவதி என்ற அவன் மனைவியும் இத்தலத்தில் வசித்து தேவர்களையும், அந்தணர்களையும், அதிதிகளையும் பூஜை செய்து வந்தபொழுது ஒரு நாள் ப்ரணிதி வெளியூர் சென்றிருந்தபொழுது, தநுர்த்வஜன் என்ற பாபி கெட்ட எண்ணத்துடன் பத்மாவதியை அணுக, அவள் தோழிகள் அவனைத் தடுத்து கங்கையும் யமுனையும் சேரும் இடத்தில் விழச்செய்ய அதே மாதிரி அவன் விழுந்து பிறகு அந்த பாபி பத்மாவதியின் கணவனைப் போல் ரூபமெடுத்து, பத்மாவதியின் கணவனும், அவன் ரூபமெடுத்த பாபியும் இருவரும் பத்மாவதி வீட்டிற்கு வர, யார் தன் கணவன் என்று தெரியாமல் பகவானைப் பிரார்த்திக்க, பகவான் பத்மாவதியை தன் ஸ்தானத்துக்கு அழைத்துக் கொண்டதாகப் புராண வரலாறு.

## 9. மாயா க்ஷேத்ரம் (ஹரித்வார்)

கல்கத்தா-டேராடூன் ரயில் மார்க்கத்தில் ஹரித்வார் ரயில் நிலையத்திலிருந்து 1கி.மீ. ஸமுத்ர மட்டத்திலிருந்து 924 அடி உயரம்.

**பெருமாள்:** பரதனாகக் காட்சி கொடுத்த ஸ்தலம், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ஆதிலக்ஷ்மீ.

**தீர்த்தம்:** கங்கை நதி, கனகல தீர்த்தம், ரம்பா தீர்த்தம், குசாவர்த்த தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம்.

**ஸ்தல வ்ருக்ஷம்:** நந்தாகிரி, காஷ்டகிரி.

**விமானம்:** ஆனந்த விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ரைப்யர், சோம சர்மா.

**விசேஷங்கள்:** ஸ்ரீமந்நாராயணனாகிய ஹரியைக் கோயில் கொண்டுள்ள தபோ பூமிக்கு (த்வார்) வழியாக அமைந்திருப்பதால் ஹரித்வார் என்ற பெயர் ஏற்பட்டது. ப்ருஹ்மகுண்டம் என்ற ஸ்நான கட்டம் விசேஷம். கங்காநதி மலைப் பிரதேசத்தை விட்டு விசாலமாக பளிங்குபோன்ற தெளிவுடன் சமவெளியில் முதன்முதலாக பாய்ந்து வரும் இடம். கங்கா ஜலம் செம்புகளில் எடுத்து சீல் செய்து யாத்திரை முடிந்து எடுத்துச் செல்லும் இடம். தக்ஷபிரஜாபதி யாகம் செய்த இடம். புது கங்கா கால்வாய் ஏற்படுத்தி, கங்கா கால்வாய் நடுவில் கங்கா மாதாகோயில் அமைத்து, இரவில் இலைதொன்னைகளில் நெய்விளக்கேற்றி ஆற்றில் விட்டு, தீபங்கள் கோயிலைச் சுற்றி வலம் வருவது கண்கொள்ளாக் காட்சி, முக்தி தரும் ஏழு நகரங்களில் ஒன்று.

## 10. குருக்ஷேத்ரம் (டெல்லி - அம்பாலா மார்க்கம்)

ஜோதீஸ்வரர் ஆலயம், லக்ஷ்மீ நாராயணர் கோயில், திரௌபதி, ஹநுமார், பிர்லா கட்டிய கோயில் இங்கு உள்ளன. சூரியகுண்டம், பீஷ்மர் அம்புப் படுக்கை, மஹாபாரத யுத்தம் நடந்த இடம். பீஷ்மர் தர்மருக்கு உபதேசம் செய்த இடம். தர்மர் பித்ருக்களுக்கு ரத்தமாக உள்ள குளத்தில் தர்ப்பணம் செய்து பித்ருக்கள் மோக்ஷம் அடைந்ததாக ஐதீஹம்.

## 11. புஷ்கரம் (புஷ்கர் - ஆஜ்மீர் அருகில்)

டெல்லி - பம்பாய் ரயில் மார்க்கத்தில் ஆஜ்மீர் ரயில் நிலையத்திலிருந்து 18 கி.மீ. பஸ் வசதி உண்டு. வைகுண்டநாதர்

கோயிலிலேயே தங்கலாம். போஜன வசதி (ப்ரஸாதம்) உண்டு.

**பெருமாள்:** பரமபுருஷன், வீற்றிருந்த திருக்கோலம், கிழக்கே திருமுகமண்டலம்.

**தாயார்:** புண்டரீகவல்லி.

**தீர்த்தம்:** பத்ம ஸரஸ், ப்ரஹ்மகுண்டம், ந்ருஹிம்ஹகட்டம், ரூப தீர்த்தம்.

**விமானம்:** மங்கள விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** ப்ரஹ்மா.

**விசேஷங்கள்:** ப்ரஹ்மாவுக்குத் தனிக் கோயில் உண்டு. இங்கு உள்ள புஷ்கரிணியில் நீராடி ப்ரஹ்மா கோயிலில் ப்ரஹ்மாவை பூஜித்தால் தலையில் எழுதிய எழுத்து மறைந்துவிடுவதாக ஐதீஹம். 8 ஸ்வயம்வ்யக்த ஸ்தலங்களில் ஒன்று. இந்த க்ஷேத்திரத்தில் தாமரைப் பூ விழுந்ததனால், ப்ரஹ்மா **புஷ்கரம்** என்று பெயரிட்டதாக வரலாறு. இவ்விடத்தில் ப்ரஹ்மா தவம் செய்தபொழுது, நாரதர் கலஹத்தால் ப்ரஹ்மாவின் பத்னி கோபம் கொள்ள, ப்ரம்ஹா ஒரு கோப ஜாதி கன்னிகையை மணந்து யாகம் செய்ய, ப்ரம்மாவின் பத்னி மும்மூர்த்திகளுக்கும் தேவர்களுக்கும் சாபமிட, கோபஜாதி பெண்ணிற்கு காயத்ரி என்ற நாமதேயம் செய்து, அவள் தேவர்களை அநுக்ரஹித்ததாகவும், ப்ரஹ்மாவின் பத்னி சபித்தபடியால் ப்ருஹ்மாவுக்கு இத்தலத்தைத் தவிர வேறு இடத்தில் கோயில் )லை என்றும் வரலாறு.

## 12. அவந்தி (உஜ்ஜயினி)

டெல்லி - பம்பாய் மார்க்கத்தில் உஜ்ஜயினி ரயில் நிலையத்திலிருந்து 3 கி.மீ.

**பெருமாள்:** ஸ்ரீக்ருஷ்ணன் (கோபால மந்திரம்)

**தாயார்:** பத்மாவதி.

**தீர்த்தம்:** கோமதி தீர்த்தம், சிப்ராநதி.

**ப்ரத்யக்ஷம்:** ஸாந்தீபனி மஹரிஷி

**விசேஷங்கள்:** ஸாந்தீபனி ஆச்ரமத்தில் பலராமக்ருஷ்ணர்கள் எழுந்தருளியிருக்கிறார்கள். அங்காரக அவதார ஸ்தலம். க்ருஷ்ணனும் குசேலரும் குருகுலவாஸம் செய்த ஸ்தலம்.

முன்பு திரிபுரன் என்ற அசுரன் ப்ரஹ்மாவிடமிருந்து வரம் பெற்று உலகத்தை ஹிம்ஸிக்க, தேவர்கள் அவந்தியில் ருத்திரனை சரணடைய, ருத்திரன் க்ருத்யையை நோக்கி தவம் செய்து பாசுபதாஸ்த்ரத்தைப் பெற்று அதனால் அசுரனை ஸம்ஹரித்ததால் இத்தலத்திற்கு உஜ்ஜயினி என்று பெயர் ஏற்பட்டதாகப் புராண வரலாறு. ப்ரபாஸ தீர்த்தம் பம்பாய் - பரோடா - ராஜகோட் மார்க்கத்தில் விராவல் ஸ்டேஷனுக்கு அருகில் மேற்கு ஸமுத்திரக்கரையில் இருக்கிறது. இங்கே பஞ்சஸ்ரோதா, ஹிரண்யா என்ற நதி ஸமுத்திர சங்கமம் ஆகிறது. இங்கே க்ருஷ்ணன் ஜரன் என்ற வேடனால் அடிக்கப்பட்டு க்ருஷ்ணாவதார ஸமாப்தி செய்ததாகவும், பாலகா என்ற இடத்தில் க்ருஷ்ணனுக்கும் வேடனுக்கும் ஆலயம் மிகவும் அழகாக அமைந்திருக்கிறது. ரைவத மலை போகும் வழியில் இருக்கிறது. கிர்னார் என்று பிரஸித்தம்; பெரிய நகரம். கிருஷ்ணன் குரு காணிக்கையாக இறந்த ரிஷிகுமாரன் பஞ்சஜனன் என்ற அசுரனைக் கொன்று ஸமுத்திரத்திலிருந்து மீட்டு குருவிடம் திருப்பிக் கொடுத்த இடம் விக்ரமாதித்தன் 32 பதுமைகள் உள்ள ஸிம்மாசனத்தில் வீற்றிருந்து ஆட்சிபுரிந்த இடம். இதுவும் முக்தி க்ஷேத்ரமாகக் கருதப்படுகிறது.

## 13. பண்டரீபுரம் (பண்டர்பூர்)

சென்னை - பம்பாய் ரயில் மார்க்கத்தில் குர்துவாடி ஜங்ஷனில் இறங்கி நேரோகாஜ் ரயில் மார்க்கமாக இத்தலத்தை அடையலாம்.

**பெருமாள்:** பாண்டுரங்கன், நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்:** ருக்மாபாய்.

**தீர்த்தம்:** க்ருஷ்ண தீர்த்தம், சந்திரபாகா நதி.

**விமானம்:** ஞானானந்தம்.

**ப்ரத்யக்ஷம்:** புண்டரீகர்.

**விசேஷங்கள்:** இரண்டு திருக்கைகளையும் இடுப்பில் வைத்துக் கொண்டு பாகவதர்களுடன் பஜனை செய்யும் பாவம்.

புண்டரீகன் தாய் தந்தையர்களுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தபோது பகவான் அவன் பக்தியைச் சோதிக்க அவ்விடம் எழுந்தருள, விருத்ராசுரனைக் கொன்ற பாபத்திற்காக இந்திரன் புண்டரீகன் வீட்டில் ஒரு செங்கல்லாக மாறி இருக்க, பகவான்

வந்தபொழுது புண்டரீகன் அந்தச் செங்கல்லை பகவானிடம் விட்டெறிந்து அதன்மீது பகவானைச் சிறிது நேரம் இருக்கச் சொல்ல, பகவான் மிதித்தவுடன் அந்தச் செங்கல் இந்திர ரூபமாகி பகவானைத் துதிக்க, அது கண்டு புண்டரீகன், பெற்றோர் பணிவிடைகளை முடித்து பகவானைத் துதிக்க, புண்டரீகன் பிரார்த்தனைப்படி பகவான் விட்டலன் என்று திருநாமம் கொண்டு எழுந்தருளியிருக்கிறார் என்பது ஸ்தல புராணம். புண்டரீகனுக்கு வரம் அருளியதால் புண்டரீகவரதன் என்று பெருமாளுக்குத் திருநாமம் ஏற்பட்டது. அவன் பெயராலேயே புண்டரீகபுரம் (பண்டரீபுரம்) என்று வழங்கி வருகிறது.

## 14. பத்ராசலம் (பத்ராசலம் ரோடு)

பெஜவாடா - காஜிபெட் - ஹைதராபாத் ரயில் மார்க்கம் விஜயவாடாவிலிருந்து சுமார் 5 மணி பிரயாணம். பஸ் வசதிகள் உண்டு.

**பெருமாள்:** ராமன், நின்ற திருக்கோலம்.

**தாயார்:** ஸீதாதேவி.

**தீர்த்தம்:** கோதாவரி நதி, ராமகுண்டம்.

**ப்ரத்யக்ஷம்:** பக்தராமதாஸ், ஹைதராபாத் நிஜாம்.

**விசேஷங்கள்:** ஹைதராபாத் நிஜாமிடம் மந்திரியாய் வேலை பார்த்த அக்கன்னா - மாமன்னாவின் மருமகன் கோபன்னா. இவர் பத்ராசலம் தாசில்தாராக இருந்து சர்க்கார் பணத்தை ராமன் கோயில் கட்டுவதற்கும், விக்ரஹங்களுக்கு அலங்காரமாக நகைகள் செய்தும், ராமன் உத்ஸவாதிகள் நடத்தி பிராம்மணர்களுக்கு போஜனம் செய்வித்தும் செலவழித்ததற்காகச் சிறையில் அடைக்கப்பட்டு பல கஷ்டங்கள் அனுபவித்து, கடைசியில் ராம லக்ஷ்மணர்கள் சேவகர்களாக வேஷம் தரித்து நிஜாமுக்கு தரிசனம் கொடுக்க, கோபன்னா விடுதலையாகி, அன்று முதல் ராமதாஸ் என்ற திருநாமத்துடன், நவாப் ஆதரவுடன் பல காலம் பகவானுக்கு உத்ஸவாதிகள் நடத்திய ஸ்தலம்.

## 15. திருநாராயணபுரம் (மேல்கோட்டை யாதவாத்ரீ க்ஷேத்ரம்)

பெங்களூர் - மைசூர் ரயில் பாதையில் பாண்டவபுரா ரயில் நிலையத்திலிருந்து 18 கி.மீ. பஸ்கள் மலைமீதே போகின்றன. தேசிகன் சந்நிதியில் போஜன ஏற்பாடு செய்து கொள்ளலாம். மற்ற வசதிகளும் உண்டு.

**மூலவர்:** திருநாராயணன், மேற்கே நின்ற திருக்கோலம்.

**உத்ஸவம்:** செல்லப் பிள்ளை, ஸம்பத்குமார், ராமப்ரியர்.

**தாயார்:** யதுகிரி நாச்சியார், பெருமாளுடைய பாதத்தில் பூமிதேவி, (நாச்சியார்) வரநந்தினி.

**தீர்த்தம்:** கல்யாணி முதலான அஷ்ட தீர்த்தங்கள், தனுஷ் கோடி தீர்த்தம், வேதபுஷ்கரிணி.

**விமானம்:** ஆனந்தமயம்.

**ப்ரத்யக்ஷம்:** கருடன்.

**விசேஷங்கள்:** மலைமீது ந்ருஸிம்ஹன், தேசிகன், எம்பெருமானார் ஸேவை ஸாதிக்கிறார்கள். ஸ்ரீராமாநுஜர் உகந்த ஸ்தலம். பட்டர் திருவடிகளை சரணமடைந்த நஞ்சீயர் அவதார ஸ்தலம், சாண்டில்ய மஹரிஷிக்கு பகவான் அநுக்ரஹத்தால் பத்ரிகாச்ரம பெருமாளாகக் காட்சி கொடுத்தபடியால் இத்தலத்திற்கு தக்ஷிண பத்ரீகாச்ரமம் என்று பெயர் உண்டானதாக ஐதீஹம். பத்ரீ போக முடியாதவர்கள் இங்கே திருநாராயணனை பத்ரீநாராயணராக நினைத்து ஸேவிக்கலாம். பத்ரீ சென்ற புண்ணியம் உண்டு. ராமனுக்கு ப்ருஹ்மாவால் கொடுக்கப்பட்டு, ராமன் குமாரனான குசனுக்கு கனகமாலிகை என்ற பெண் பிறந்து கல்யாண காலத்தில் ஸ்த்ரீதனமாகக் கொடுக்கப்பட்டு, யதுசேகர மஹாராஜாவால் ஆராதிக்கப்பட்டு, அவள் பரம்பரையில் வந்த வசுதேவரால் ஆராதிக்கப் பெற்று, பிறகு பலராமக்ருஷ்ணரால் ஆராதிக்கப்பட்டதாக புராண வரலாறு. ஒரு காலத்தில் ப்ரஹ்லாதன் குமாரன் விரோசனன் பாற்கடலில் பள்ளி கொண்டிருந்த க்ஷீராப்திநாதனின் கிரீடத்தை அபகரிக்க, பகவான் கருடாழ்வாரை அதை மீட்கும்படி ஆஜ்ஞாபிக்க, அதன்படி கருடன் விரோசனனை ஜயித்து க்ரீடத்தை மீட்டு பூலோகத்தில் க்ருஷ்ணனைக் கண்டு அவர் தலையில் அதை வைக்க, சரியாக பொருந்தாமல், க்ருஷ்ணன் ஆராதித்த ஸ்ரீராமப்ரிய விக்ரகத்திற்கு சாத்த, அது பொருத்தமாக இருக்க, பிறகு கருடன் பாற்கடல்

சென்று பகவானிடம் இந்த விவரங்கள் சொல்ல, பகவான் கட்டளைப்படி திரும்பிவந்து க்ரீடத்தை ஸ்ரீராமப்ரியருக்கே சாத்தினதாக புராண வரலாறு. கருடன் க்ரீடத்தைச் சாத்தினதால் வைந(வைநதேயன்-கருடன்) முடி என்று பெயர் ஏற்பட்டதாகவும் நாளடைவில் வைரமுடி என்ற பெயர் வந்ததாகவும் புராண வரலாறு. இன்றும் இத்தலத்தில் பங்குனி மாதம் வைரமுடி உத்சவம் விசேஷமாக நடைபெறுகிறது. மைசூர் ராஜாவம்சத்தினர் பராமரிப்பில் உள்ளது.

**குறிப்பு:** நம்மாழ்வார் திருவாய்மொழியில், முக்கியமாக 3007 ("ஒரு நாயகமாய்....") இக்கோயிலின் பேரில் மங்களாசாஸனம் செய்துள்ளதாகக் கருத்து.

## 16. வர்க்கலா (திருவனந்தபுரம் - கொல்லம் மார்க்கம்)

**பெருமாள்: ஜனார்த்தனப் பெருமாள்,** நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம். ஜலத்தை ஆசமனம் செய்வதுபோல் வலது கை குழிவாக இருக்கும் காட்சி.

**தீர்த்தம்:** ஆஞ்சநேய புஷ்கரிணி, ஸமுத்திரஸ்தானம்.

**விமானம்:** க்ருஷ்ண விமானம்.

**ப்ரத்யக்ஷம்:** பட்டாத்திரீ.

**விசேஷங்கள்:** தக்ஷிண ஜனார்த்தனம் என்று பெயர். அர்ச்சா மூர்த்தி விக்ரஹத்திலுள்ள ஆசமனம் செய்யும் கை, வாய்வரை வந்தால், கலி முடிந்து உலகம் மூழ்கிவிடும் என்று ஐதீஹம். திருவோண நக்ஷத்திரத்தில் மாதாந்திரம் ராத்திரி கருட வாஹனம்.

## 17. ஸேதுக்கரை (ஆதிஸேது)

ராமநாதபுரத்திலிருந்து 8 மைல் தெற்கே உள்ளது, பஸ்ஸில் செல்லலாம்.

**பெருமாள்:** ஸ்ரீநிவாஸன், நின்ற திருக்கோலம்.

**தாயார்:** அலர்மேல்மங்கை தாயார்.

**தீர்த்தம்:** அகஸ்தியர் தீர்த்தம், ஹிரண்யநதி.

**விசேஷங்கள்:** வைஷ்ணவர்களுக்கு ஸமுத்ர ஸ்நானம் விசேஷம்.

ராமன் பாலம்கட்டிய இடமென்றும், ஸமுத்திரத்தில் சுவர் தெரிவதாகவும், அலைகள் மோதுவதாகவும் சொல்கிறார்கள். ஹநுமார் ஸந்நிதியும் சத்திரங்களும் இருக்கின்றன. வெண்சலவைக் கல்லில் மிகவும் புராதனமான அகஸ்தியர் சிலை உள்ளது. இவ்விடத்திற்கு இரண்டு மைல் தூரத்தில் கண்வர் ஆசிரமம் உள்ளது. அகஸ்தியர் கடல் நீரை பானம் செய்த ஸ்தலம்.

## 18. தநுஷ்கோடி (தற்போது ஸமுத்திரத்தில் மூழ்கிவிட்டது)

**பெருமாள்:** ராமன், நின்ற திருக்கோலம்.

**தாயார்:** ஸீதாபிராட்டியார்.

**தீர்த்தம்:** மூன்று சமுத்திரங்கள் சங்கமம்.

**ப்ரத்யக்ஷம்:** விபீஷணன்.

**விசேஷங்கள்:** தற்போது விக்ரஹங்கள் ராமேச்வரம் கோயில் பிரகாரத்தில் உள்ளன. விபீஷண சரணாகதி பண்ணிய இடம். ராவண ஸம்ஹாரம் ஆன பிறகு, விபீஷணன் பிரார்த்தனைக் கிணங்க ராமன் வில்லினால் தான் கட்டிய ஸேதுவை அழித்த படியினால். தநுஷ்கோடி என்ற பெயர் உண்டானதாக வரலாறு.

## 19. ராமேச்வரம்

**பெருமாள்:** ஸேது மாதவன், ராமநாதன், நின்ற திருக்கோலம்.

**தாயார்:** மஹாலக்ஷ்மீ.

**தீர்த்தம்:** அக்னி தீர்த்தம், ஸமுத்ர ஸ்நானம், ஸேது மாதவ தீர்த்தம்.

**விசேஷங்கள்:** ராமேச்வரம் தேவஸ்தானத்தில் இரண்டாவது மூன்றாவது பிரகாரத்தின் நடுவில் உள்ளது. பாண்டிய அரசனான புண்யநிதி ராமேச்வரத்தில் விஷ்ணுவுக்கு ப்ரீதியான யாகம் செய்ததால், அவனிடத்துக்கு பகவான் லக்ஷ்மீ தேவியை அனுப்பினார். 8 வயது கன்னிகையாக வந்தாள். பாண்டிய அரசன் அவளை "யார்" என்று கேட்க, தான் அனாதை என்றும் தன்னை பலாத்காரம் செய்பவர்களை சிக்ஷிக்கவேண்டும் என்றும் கேட்டுக் கொண்டாள்.

இதற்கு பாண்டிய அரசன் ஒப்புக்கொண்டான். ஒருநாள் மஹாவிஷ்ணு சைவ வேடம் பூண்டு பூந்தோட்டத்தில் பூ பறிக்கும் லக்ஷ்மியான கன்னிகையை கைபிடிக்க, அவளும் தோழிகளும் கூக்குரலிட, அரசன் அவ்விடம் வந்து விஷ்ணுவை அறியாமல் கட்டிப்பிடித்து, விலங்கிட்டு, ஒரு மண்டபத்தில் அடைத்தான். இரவில் அரசன் கனவில் சைவ வேடம் பூண்டவன் மஹாவிஷ்ணுவாகவும் கன்னிகை மஹாலஷ்மியாகவும் காட்சிதர, காலையில் மண்டபத்தில் வந்து பார்க்க, அப்படியே ஸேவை ஸாதிக்க, மன்னன் மன்னிக்க வேண்டி திவ்ய தம்பதிகளுக்கு விசேஷமாகக் கல்யாண மஹோத்ஸவம் செய்வித்ததாக புராண வரலாறு. ராமேச்வரம் பெரிய ஊரானபடியால் ஸகல வசதிகளும் உண்டு. ராமநாதஸ்வாமி கோயில் பிராகாரத்தில் 108 தீர்த்தங்களும் ஸமுத்திரக் கரையில் ஆதிசங்கரர் சிலையும் உள்ளன.

108 வைஷ்ணவ திவ்ய தேசங்களிலும் புராண ஸ்தலங்களிலும் சேராத சுமார் 50 வருடங்களுக்குமேல் பிரஸித்தமாக இருக்கும் ஸ்தலங்கள் அடுத்துவரும் "அபிமான ஸ்தலங்கள் 29"ல் கொடுக்கப் பட்டிருக்கின்றன.

# அபிமான ஸ்தலங்கள் 29

## 1. குணசேகரம் (குணசீலம்)

(திருச்சி-முசிறி-நாமக்கல்-பஸ் மார்க்கம்)

Pin: 621204

**பெருமாள்: ஸ்ரீப்ரஸன்ன வேங்கடாசலபதி,** ஸ்ரீ அலர்மேல்மங்கா ஸமேத ஸ்ரீநிவாஸன், கிழக்கே நின்ற திருக்கோலம். தனித்தாயார் ஸந்நிதி கிடையாது.

**விசேஷங்கள்:** மனநோய் வந்தவர்கள், பில்லி சூனியம் உள்ளவர்கள் இங்கே 1 மண்டலம் தங்கி, பெருமாளை வழி பட்டால் குணம் காணலாம் என்று பிரஸித்தம். திருப்பதி செல்ல முடியாதவர்கள், அவர்கள் பிரார்த்தனையை இவ்விடமே செலுத்தலாம். காவேரி-கொள்ளிடம் பிரியும் இடம் கோயிலிலிருந்து 1 கி.மீ. ,ில் உள்ளது.

## 2. நாமக்கல்

(திருச்சி-நாமக்கல்-சேலம்-
பெங்களூர் பஸ் மார்க்கம்)

**பெருமாள்:** ஸ்ரீந்ருஸிம்ஹர், குகையில் ஆவிர்பவித்திருக்கிறார். மேற்கே திருமுக மண்டலம். மலை நடுவில் ரெங்கநாதர். ஆஞ்சனேயர் 18 அடி உயரம் - ந்ருஸிம்ஹர் ஸந்நிதி எதிரே இருக்கிறது. மேல் கூரை இல்லை.

**தாயார்:** நாமகிரித் தாயார், ரங்கநாயகி.

**தீர்த்தம்:** கல்யாணி புஷ்கரிணி, திருப்பாக்குளம், கமலாலயம்

---

## 3. தான்தோன்றி மலை

(திருச்சி-கரூர்-ஈரோடு ரயில் மார்க்கம்)

கரூர் அருகாமையில் இருக்கிறது. பஸ்ஸிலும் செல்லலாம். பெரிய ஊர். வசதி உண்டு.

